# கல்கி

KALKI
25.4.99
ரூ. 4.50






# ஊழல் + ஊழல்!

# மல்லிகைப் பூ

## காலம் இது

மல்லிகைப் பூ புனிதத் தனமை தந்து சமநிலையும் அளிக்கும் நறுமணத்தை முகர்வது அவசியம். இதனால் பூமியில் மறைந்து உள்ள அதன் சாரம் இரகசிய உண்மை நாம் கிரகித்துக் கொள்ள முடிகிறது.

—சிவமஹா புராணம்

---

மல்லிகைப் பூவினால் அர்ச்சனை செய்தால் எல்லா பாவங்களிலிருந்தும் விடுபடுவான்.

மலர்களை மாலைகளாக தொடுத்து பகவானுக்கு அர்ப்பணம் செய்வது மலர்களால் அர்ச்சிப்பதைவிட எண்ணற்ற மடங்கு பலன் தரும். ஒருவன் தன் சொந்த தோட்டத்திலிருந்து மலர்களை வந்து பகவானுக்கு அர்ப்பணித்தால் அடையும் பலன்களைவிட காட்டிலிருந்து சேகரித்த பூக்களால் அர்ச்சிப்பது மும்மடங்கு பலனைக் காட்டும்.

அக்னிப் புராணம்

**'படையப்பா' திரைப்படம் வெளிவந்த தினத்தை ரஜினி ரசிகர்கள் உற்சாகத்துடன் வைபவமாய்க் கொண்டாடினார்கள். நம் கண்ணில் பட்ட காட்சிகள் சில....**

# கோலாகலப் 'படை'-யப்பா!

தாம்பரம் வித்யா :

முதல் நாள் இரவே, சுத்துப்பட்டி பதினெட்டு கிராமங்களிலிருந்தும் (குரோம்பேட்டை, பல்லாவரம், சிட்லபாக்கம், பெருங்களத்தூர்...) ரஜினியின் கட் அவுட்டுகளைத் தாங்கிய



• பூவைல் அர்ச்சிக்கும் ரசிகர்கள்...

அலங்கார வண்டிகள், ரசிகர்களுடன் ஊர்வலமாய், தாம்பரம் வித்யா தியேட்டருக்கு வந்து சேர்ந்தன. ஊர்வலத்தில் சிலம்பாட்டம், காவடியாட்டம், வேல்குத்தியாடுதல், தீப்பந்தத்தை உடம்பில் தடவி டான்ஸ் ஆடுதல் என ஏகப்பட்ட 'கொண்டாட்டங்கள்'! தியேட்டரின் முகப்பையே மறைக்குமளவுக்கு, படத்தை வெற்றி பெற வாழ்த்துச் சொல்லும் ரசிகர்களின் பலவிதமான தட்டிகள். ரசிகர்களுக்கான சிறப்புக் காட்சியில் கூட, சிரமத்தைப் பொருட்படுத்தாமல் தரையில் உட்கார்ந்தும், நெருக்கியடித்து நின்றும் ரசிகர்கள் படம் பார்த்து மகிழ்ந்தார்கள்.

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

## சென்ற இதழைப் படித்ததுமே தயாராகி விட்டீர்களா?

'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 1999'க்குக் கதைகள் அனுப்புவதற்கான கடைசி தேதி : **ஜூன் 15.**

விரிவாகத் தெரிந்து கொள்ள வேண்டுமானால், சென்ற வார கல்கி இதழைப் பாருங்கள்; அல்லது அடுத்த வாரம் வரை காத்திருந்து பாருங்கள்.

– ஆசிரியர்

அசோக்நகர் உதயம்:

சென்னையில் படையப்பா வெளியான தியேட்டர்களிலேயே அதிகக் கொண்டாட்டம் நடந்தது இங்குதான்.

● ரஜினியின் படத்திற்கு கற்பூரம் காட்டி, பூக்களை அள்ளி வீசி, பாலாபிஷேகம் நடத்தினார்கள்.

● படம் பார்த்துவிட்டு வெளி வந்தவர்களை வரவேற்று சூறைத்தேங்காய் உடைத்தார்கள்.

● தியேட்டர் வாசலில் ரஜினி ரசிகர் மன்ற பேட்ஜுகள், படையப்பா கீசெயின் விற்பனைக்கு வந்திருந்தன.

● ஆட்டோக்களில் ரஜினியின் முகம் போட்ட கொடிகள்.

● படம் ஓடிக் கொண்டிருக்கும் போது, ரஜினியின் ரசிகர்கள் வில்லியான ரம்யா கிருஷ்ணனைத் திட்டும் வார்த்தைகளைக் கேட்காமலிருந்திருக்க நமக்குக் காதுகள் இல்லாமல் இருந்திருந்தால் நன்றாயிருந்திருக்கும்.

● 'உதயம்' வாசலில் ஒரு அலங்கார வளைவு. அதன் உச்சியில் ஒருபுறம் ரஜினி படம், மற்றொருபுறம் மூப்பனார் படம். ஒரு ரசிகர் மூப்பனார் படத்தைப் பார்த்துக் கோபாவேசமாய் 'இந்தப்படம் உயரத்தில் எதற்கு?' என்று கேட்க, ரசிகர்களின் கை தட்டல்களுக்கு மத்தியில் ஒரு ரசிகர் வளைவின் உச்சிக்கு ஏறி, மூப்பனார் படத்தை வீசி எறிந்தார். மற்றொரு ரசிகர் அதை எடுத்து 'படையப்பாவின்' காலுக்கருகே வைத்து அழகு பார்த்தார்.

● வாழ்த்துப் போஸ்டர்களுக்கு மத்தியில், கோடைகாலத்துக்கு இதமாய் ஒரு போஸ்டர் நம் கண்ணில் பட்டது. அது, அம்முவின் 'படையப்பா மோர்' என்ற போஸ்டர்.

எழும்பூர் – ஆல்பர்ட்:

● தியேட்டரெங்கும் வழக்கமான வாழ்த்துத் தட்டிகள். வித்தியாசமாய் நம் கண்ணில் பட்டவை விவேகானந்தர் கெட்டப்பில் ரஜினி படம் போட்ட தட்டி மற்றும் ஏரோப்ளேன் மாடல் தட்டி.

● தியேட்டரெங்கும் ரஜினி தோன்றும் காட்சிகளில் ரசிகர்கள் வீசி எறிந்த, பழைய லாட்டரி டிக்கெட் குப்பைகள்.

● சில சுவாரஸ்யமான தட்டி வாசகங்கள்:

"படையப்பா! உனக்கு நிகர் யாரப்பா!
இவ்வுலகை ஆளப் போவது
நிச்சயமப்பா."

"நேற்றுவரை நீ மனிதப்பா.
இன்று முதல் நீ புனிதனப்பா."

"உன் பாதச்சுவடே இளைஞர்களின்
நடையப்பா!
தாழ்ந்த தமிழகம் நிமிர நீ சரியான
விடையப்பா!"

"புதுக்கட்சி உதிப்பது நிச்சயம்
படையப்பாவை கோட்டையில்
அமர்த்துவது
எங்கள் லட்சியம்."

● மேட்னி ஷோவில், படம் பார்க்க வந்த லதா ரஜினி, ரசிகர்களின் ஒன்ஸ்மோர் விருப்பத்தைப் பூர்த்தி செய்யும்படி தியேட்டர்காரர்களிடம் சொல்ல, எல்லாப் பாடல்களையும் திரும்பப் போட்டார்கள். அடுத்த காட்சி துவங்க அரைமணி நேரம் தாமதமானது. இரவுக் காட்சியில், ரசிகர்கள் திரும்ப 'ஒன்ஸ்மோர்' சொல்ல, தியேட்டர்காரர்கள் மறுக்க, ரகளையும் திரைக்கிழிப்பும் நடந்தது. தியேட்டரில் கண்ணாடி ஜன்னல்கள் உடைந்தன.

● தியேட்டர் வாசலில் என்னதான் போலீஸ்காரர்கள் சுற்றிச் சுற்றி வந்தாலும் ஆறு ரூபாய் ஐம்பது காசு டிக்கெட்டை நூற்றைம்பது ரூபாய்க்கு பிளாக்கில் விற்றார்கள். ஆறுபடையப்பா! இது நியாயமாப்பா!

*(படையப்பா விமர்சனம் 16-ம் பக்கம்!)*

**— கே. பாலசுப்ரமணியன்**

படங்கள் : **ஸ்ரீஹரி**



# மகளிர் மட்டும் - ஒரு கண்காட்சி

பெண்களுக்கான பிரத்யேக கண்காட்சி ஒன்று நடந்து முடிந்தது. பெண்கள் உடன் வந்தால் மட்டுமே, ஆண்களுக்கு உள்ளே நுழைய அனுமதி. வழக்கமான பெண்களுக்கான சமாச்சாரங்கள் விற்பனை செய்யும் ஸ்டால்கள் வீட்டு உபயோகப் பொருள்கள், டீ, காப்பி, கூல்டிரிங்க்ஸ் ஸ்டால்கள் தவிர, செலவில்லாத ஆனால் உபயோகமான ஸ்டால்களும் இடம்பெற்றிருந்தன.

❑ சுயதொழில் முனையும் பெண்களுக்கு உதவ ஒரு ஸ்டால். ஆனால் அதன் பக்கம் பெண்கள் தலையைத் திருப்பிக் கூடப் பார்க்கவில்லை என்று குறைபட்டுக் கொண்டார் அந்த ஸ்டாலுக்குரிய பெண்மணி. கணவன்மார்கள், அங்கே என்னதான் இருக்குமென்று பாரேன் என்றால் கூட, 'ப்ச்' கொட்டி விட்டு, கண்டுகொள்ளாமல் போனார்களாம் மாதரசிகள்.

❑ வெறும் கண் மட்டுமின்றி மற்ற உடல் உறுப்புகளையும் மரணத்துக்குப் பின் தானமாகத் தரலாம் என்று மக்களிடையே விழிப்புணர்வு ஏற்படுத்தும் பணியில் ஈடுபட்டுள்ள மோகன் ஃபவுண்டேஷன் ஸ்டாலில், நிறைய விசாரணைகளாம். பெருமைப் பட்டுக் கொண்டார் அங்கிருந்த டாக்டர்.

❑ உடல் ஊனமுற்றவர்களுக்கு உதவும் எபிலிடி பவுண்டேஷன் ஸ்டால் பக்கம், உடல் ஊனமுற்றவர்கள் சிலர்; பொதுவானவர் பலர். கரிசனம்தான்!

❑ திகட்டத் திகட்ட ஃபாஷன் ஷோக்களை நடத்தினார்கள். புடைவை, வெஸ்டர்ன், இந்திய நவீனம் என்று மாட்டிக் கொண்டு அழகிகள் அசத்தியபோது, அரங்கில் கீச்சுக் குரலுக்கும், கைத்தட்டலுக்கும் குறைவில்லை. லேட்டஸ்ட் குட்டி ஏனி தானோ என்று சந்தேகத்தை வரவழைத்து விட்டன ஹை ஹீல்ஸ் பாதரட்சைகள்! இது போன்ற உபயோகமான கண்காட்சிகளில் ஃபாஷன் ஷோக்கள் தேவைதானா?

❑ சனிக்கிழமை பிற்பகலில் ஒரு பேச்சரங்கம். நெறிப்படுத்தி நடத்தியவர் சுகாசினி. கலந்து கொண்டவர்கள் ஷபானா ஆஸ்மி, ஜெயந்தி நடராஜன், வக்கீல் சுமதி, அனிதா ரத்னம், லலிதா குமாரமங்கலம். நிகழ்ச்சியில் தெரிந்து கொண்ட விஷயங்கள்:

- ஒரு படப்பிடிப்பின் போது, திடீரென்று மழைக்காட்சி எடுக்க வேண்டியிருந்தது. அதற்கான ஏற்பாடுகளை முன்கூட்டியே செய்யாததால், டைரக்டர் சிறிது குழம்பிப் போனார். செட்டில் இருந்த இரண்டு தச்சுவேலை செய்யும் இளைஞர்கள் இரண்டு 'ஹோஸ் பைப்புகளைக் கொடுங்கள்; மழை வரவழைக்க நாங்களாயிற்று" என்றார்கள். நிமிஷத்தில் ஒரு தண்ணீர் பைப்புடன் குழாயை இணைத்து மழை வரவழைத்தனர். கிரியேடிவிடி என்பது எவரிடமும் இருக்கும் என்பதற்கு ஷபானா ஆஸ்மி சொன்ன உதாரணம்.
- அனிதா ரத்னம், திருமண முறிவுக்குப்பின், இந்தியா வந்தபின் அவரது உறவினர் ஒருவர், 'பெண்கள் கூட்டுறவுச் சங்கம் ஒன்றை ஆரம்பித்து அப்பளம் உற்பத்தி செய்' என்று ஆலோசனை கொடுத்தாராம். "டான்ஸர் என்றால் அதை ஒரு புரொஃபஷனாக அங்கீகரிக்க இங்கே தயங்குகிறார்கள்" என்று வருத்தப்பட்டார்.
- விபசாரத்தில் ஈடுபட்டுள்ள பெண்கள் உட்பட பெண்களுக்கான உடல்நலம் சம்பந்தப்பட்ட அமைப்பை நடத்தி வருபவர் ரங்கராஜன் குமாரமங்கலத்தின் சகோதரி லலிதா குமாரமங்கலம். "ஒரு லேடீஸ் கிளப் ஆரம்பிப்பதை விட்டுவிட்டு, உனக்கேன் அதுமாதிரி பெண்களுக்கு சேவை எண்ணம்?" என்று இவரிடம் பலர் கேட்டதுண்டாம்.

தொகுப்பு: **பாரதி**

# பாரம்பரிய பாணி முதல் ஃபாஸ்ட் ஃபுட் ஹோட்டல்

அமெரிக்காவில் பட்ட மேற்படிப்பு படித்துக் கொண்டிருந்தபோது அவருக்கு ஏற்பட்ட ஓர் அனுபவம். "இந்தியாவில் 'டவுன் பிளானிங் முறை' என்ற தலைப்பில், வகுப்பில் ஒரு லெக்சர் தர முடியுமா என்று பேராசிரியர் கேட்டார். சிந்து சமவெளி நாகரிகம் தொடங்கி, நவீன கால சண்டிகர் வடிவமைப்பு வரை அதில் பேச முடியும். ஆனால், அவை பற்றிய முழுமையான தகவல்கள் எதுவும் என் வசமில்லை. எனவே எனக்குள் தயக்கம். ஆனால், அந்தப் பேராசிரியர், 'பல்கலைக் கழக நூலகத்தில் உனக்கு வேண்டிய எல்லா விவரங்களும் கிடைக்கும்!' என்றார். நானும் தயக்கத்துடன் சொற்பொழிவுக்கு ஓ.கே சொல்லிவிட்டு, பல்கலைக் கழக நூல் நிலையத்துக்குள் நுழைந்தேன். இந்தியாவின் கட்டடக் கலை பற்றி என்றால்கூடப் பரவாயில்லை. டவுன் பிளானிங் பற்றிய விவரங்கள் இங்கே இருக்க சாத்தியமில்லை! என்று நினைத்தபடியே குறிப்பிட்ட பிரிவுக்குள் சென்றேன்.

"எனக்கு அங்கே ஆச்சரியம் காத்திருந்தது. ஆம்! இந்தியாவின் பெரிய நூலகங்களுக்குச் சென்றால்கூட அவ்வளவு விவரங்கள் கிடைத்திருக்காது. ஆனால் ஒரு அமெரிக்கப் பல்கலைக் கழகத்தின் நூல் நிலையம் எனக்குத் தகவல் சுரங்கம் போல அமைந்து விட்டது. அங்கு சேகரித்த விவரங்களைக் கொண்டு, என்னை நன்றாகத் தயார் பண்ணிக்கொண்டேன். என் பேச்சுக்கு பெரும் வரவேற்பு" என்று கல்லூரி நினைவுகளில் மூழ்கிப் போகிறார் சுஜாதா சங்கர். சென்னை அண்ணா பல்கலைக் கழகத்தின் முன்னாள் மாணவி.

இந்தியா திரும்பியபின், நாலு வருடம் கட்டடக்கலை நிபுணரின் அலுவலகம் ஒன்றில் வேலை பார்த்தார். "அப்போது ஏற்பட்ட ஓர் அனுபவம், இன்றைக்கும் எனக்கு மிகவும் உபயோகமாக இருக்கிறது. டெல்லியில் உலக நாடுகள் பங்கேற்கும் ஒரு கண்காட்சிக்காக ஸ்டால்கள் வடிவமைக்க ஒரு போட்டி அறிவிக்கப்பட்டிருந்தது. ஒரு வாரம்தான் அவகாசம் இருந்தது. நானும், இன்னும் மூன்று நாலு பேர் அடங்கிய குழுவாக, சாப்பாடு, தூக்கம் இல்லாமல், மூன்று நாட்கள் கடுமையாக உழைத்தோம். மைதானத்தின் வடிவமைப்பை நுணுக்கமாக ஆராய்வதில் தொடங்கி, ஸ்டால்கள் வடிவமைப்பு பற்றித் திட்டமிடுவது, அவற்றை வரைபடங்களாய் உருவாக்குவது, இறுதி டச்சஸ் கொடுப்பது என்று அத்தனை வேலைகளையும் கச்சிதமாய் முடித்து, அனுப்பி



• சுஜாதா சங்கர்

• ரேமண்ட் ஷோரூமில்...

வைத்தோம். போட்டியில் வென்றது நாங்கள் தான். இந்த அனுபவம் மூலமாக, எந்தக் காரியமும் முடியாத ஒன்று இல்லை. முழுமையான ஈடுபாடு, திட்டமிடுதல், கிரியேடிவிடி, சகாக்களின் ஒத்துழைப்பு, கடுமையான உழைப்பு. இவைதான் வெற்றியின் ஃபார்முலா என்று புரிந்துகொண்டேன்" என்கிறார் சுஜாதா.

பாரம்பரிய பாணி வீடு முதல் ஃபாஸ்ட் ஃபுட் ரெஸ்டாரண்ட்வரை இவர் வடிவமைத்து, இன்டீரியர் டிசைனிங் செய்திருப்பவை ஏராளம்.



• பாரம்பரிய பாணியில் வீடு...

அவரது சில அனுபவங்கள்.

● திருநெல்வேலியில் ஒரு முதிய பெண்மணி, தமக்குச் சொந்தமான இடத்தில் ஒரு வீடு கட்டித் தர வேண்டும் என்றார். அதிலே பழைமை கொஞ்சம் தூக்கலாக இருக்க வேண்டும் என்பது அவரது ஆசை. எனவே, வீட்டின் கூரைப் பகுதியை மங்களூர் ஓடு கொண்டு வடிவமைத்தேன். ஆனால் அவற்றைத் தாங்கும் சரிவான மர பீம்களுக்குப் பதிலாக கான்கிரீட் பீம்களே பயன்படுத்தப்பட்டன. வீட்டுக்குள் இலை போட்டுச் சாப்பிட வசதியாய், விசாலமான சாப்பாட்டு அறை, ஊஞ்சல், முற்றம் இவைகளும் உண்டு. "ரொம்பத் திருப்தி!" என்றார் அந்த முதிய பெண்மணி.

● சென்னை கிரிக்கெட் கிளப்பிற்கு மல்டி பர்ப்பஸ் ஹால் ஒன்றை வடிவமைத்துக் கொடுத்தேன். எம்.சி.சி.யின் அதிகார பூர்வ நிறங்களான பச்சை, சிவப்பு இவைகளையே பயன்படுத்தினேன். மரத்தாலான தளம், வெளிச்சத்தைக் கூட்டவோ, குறைக்கவோ வசதியான ஒளி அமைப்பு, அதன் சிறப்பு அமைப்பு. அதை உணவகமாகப் பயன்படுத்த வேண்டுமெனில், நாற்காலி, மேஜைகளை அதற்கேற்ப போட்டு, ஒளியைக் குறைத்து விடலாம். வரிசைகளில் நாற்காலிகளைப் போட்டு மீட்டிங் ஹாலாக்கி விடலாம். பஃபே டின்னருக்கேற்ற வகையில் மாற்றி அமைக்கலாம். போர்டு மீட்டிங் நடத்தவும் முடியும். வெளித்தோற்றத்தில் பழைய பாரம்பரியம் பாதுகாக்கப்பட்டது என்பதும் குறிப்பிடத்தக்க விஷயம்.

● ஒரு அமெரிக்க மின் உற்பத்தி நிறுவனத்தின், இந்திய அலுவலகத்தின் இன்டீரியர் டிசைனிங் ஆர்டர் எனக்குக் கிடைத்தது. அது 'பவர்' சம்பந்தப்பட்ட கம்பெனி என்பதால் தரையில் மார்பிளில் சூரியன் உருவம், ரிசப்ஷனிஸ்ட் தலையின் பின்னால், ஒரு நவீன ஓவியம். அதிலே சக்திக்குக் குதிரை. ஒளிக்கு சூரியன், அமெரிக்க தேசத்துக்குரிய சிறப்பு, நீல நிறங்கள் என்று மாடர்ன் ஆர்ட் ஒன்று அமைத்து அசத்தினேன்.

● நூற்றி ஐம்பது வருட பாரம்பரியம் மிக்க பி.ஆர். அண்டு சன்ஸ் கடிகார ஷோரூம் வடிவமைப்பு எனக்கு பெரும் பெரும் சவாலாக அமைந்தது. பலவிதமான கடிகாரங்கள் - தங்கக் கடிகாரங்கள் உட்பட விற்பனை செய்யப்படுவதால், ஒவ்வொன்றுக்கும் தனித் தனிப் பிரிவுகள். தவிர, மாடல்கள் போல வடிவமைத்து சிறப்பான லைட்டிங் கொடுத்து, அவற்றில் பலவித வாட்ச்களையும் காட்சிக்கு வைக்க ஏற்பாடு செய்தேன். அடையாறு பி.ஆர். அண்டு சன்ஸ் ஷோரூமில் நான் செய்த இன்டீரியர் டிசைனிங்கிற்கு, சென்ற ஆண்டுக்கான மிகச் சிறந்த இன்டீரியர் டிசைனிங் விருது கிடைத்தது.

● ரெடிமேட் உடை ஷோரூமில், வித்தியாசமாய் ஒரு நவீன சிற்பம் வைத்தால் என்ன என்ற ஐடியாவை தி. நகரில் ரேமண்ட் ஷோரூமில் முயற்சி செய்து பார்த்தேன். பிரபல ஓவியர் நந்தகோபாலைக் கொண்டு 'தீய சக்திகளை வெற்றி கொள்ளும் நல்ல சக்தி' என்பதை எடுத்துக்காட்டுகிற மாதிரி ஓர் உலோக சிற்பம் உருவாக்கி, ஷோரூமில் அனைவர் பார்வையிலும் படும் இடத்தில் வைத்தோம். வழக்கமாய் இது போன்ற சிற்பங்கள் கமர்ஷியல் ஷோரூம்களுக்குப் பொருந்தாது என்பார்கள். ஆனால், இங்கே அது பொய்யாகி விட்டது. வரும் வாடிக்கையாளர்களின் கவனத்தை ஈர்க்கிறது இந்தச் சிற்பம்.

● அண்ணாநகரில் 'டைம்ஸ் பாங்க்' வடிவமைத்தது ஒரு வித்தியாசமான சவால். அது ஒரு மாடி வீடு. மேலே வீட்டுக்காரர் வசிக்கிறார். கீழே வீட்டை, பாங்க் ஆக மாற்றி அமைக்க வேண்டும். இதற்காக சில சுவர்களை, கட்டடத்துக்கு பாதிப்பின்றி, இடித்தோம். வெராந்தா, வரவேற்பறை, சாப்பிடும் இடம் இவற்றை இணைத்து வங்கி ஹால் உருவாக்கப்பட்டது. ஒரு டாய்லெட் தானியங்கி பணம் வழங்கும் ஏ.டி.எம் அறையாக்கப்பட்டது! பெட்ரூம், மானேஜர் கேபின். முதலில் அந்த வீட்டைப் பார்த்தவர்களுக்குக்கூட இப்போது அங்கு வந்து பார்த்தால், அது தானா இது என ஆச்சரியமாக இருக்கும். தவிர, மரத்தடுப்பு, கம்பி போட்ட கூண்டு கொண்ட கேஷியர் அறை இல்லாமல், நவீன பாங்கிங் தத்துவத்துக்கு ஏற்ப டைம்ஸ் பாங்கை வடிவமைத்தேன். அதனைப் பாராட்டாதவரில்லை.

"சுஜாதா, உங்களுக்கு வாஸ்து சாஸ்திரங்களில் நம்பிக்கை உண்டா?"

"என் நம்பிக்கையைவிட, கஸ்டமர்களுக்கு நம்பிக்கை இருக்கிறதே! எனவே, கட்டடத்தை வடிவமைக்கிறபோதே, கஸ்டமர் விருப்பப்பட்டால் வாஸ்து நிபுணரையும் நான் கலந்து ஆலோசிக்கிறேன்."

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**
வண்ணப்படம்: **யோகா**

# ரூ. 420 விலை மதிப்புள்ள இங்கிலீஷ் கோர்ஸ் இலவசம் கோடை விடுமுறை வாய்ப்பு...

## இந்த கோர்ஸ் மற்றும் அசல் விலையின் விவரங்கள்

| டிவிஷன்-1 | டிவிஷன்-2 | டிவிஷன்-3 | இவை அனைத்தும் | ஃப்ரீ ! |
|---|---|---|---|---|
| ரூ. 110 | ரூ. 140 | ரூ. 170 | | |

**டிவிஷன்-1 :** (பேஸிக் இங்கிலீஷ் கோர்ஸ்) A-B-C-D யில் இருந்து ஆங்கிலம் கற்பிக்கப்படும். ஆங்கிலம் சிறிதும் தெரியாதவர்களும் இந்த கோர்ஸ் மூலம் தொடக்க நிலை ஆங்கிலம் கற்க முடியும். அனைவருக்கும் சுலபமாக புரியும் விதத்தில் ஆசிரியர் உங்கள் முன்பு இருந்து கற்றுத் தரும்படியான உணர்வை உங்களுக்கு ஏற்படுத்தும். இந்த கோர்ஸின் ஃபீஸ் ரூ. 110/- மட்டுமே.

**டிவிஷன்-2 :** (இங்கிலீஷ் கிராமர் கோர்ஸ்) : இலக்கணம் இல்லாத மொழி, உப்பு இல்லாத உணவைப் போன்றது. அதுபோல இலக்கணம் இல்லாத மொழி, தவறுகள் இல்லாதவாறு சுலபமான முறைகளில் நீங்களே மற்றொருவருக்கு கற்றுத் தரும் வண்ணம் மிக அழகாக கற்பிக்கப்படும். இந்த கோர்சின் ஃபீஸ் ரூ. 140/- மட்டும்.

**டிவிஷன்-3 :** (இங்கிலீஷ் ரைட்டிங் மற்றும் ஸ்பீக்கிங் கோர்ஸ்) : ஆங்கிலம் சுலபமாக எழுதவும் மற்றும் படிக்கவும் கற்றுத்தரும் ஈசி இங்கிலிஷ் கோர்ஸ். தடுமாற்றமின்றி பேசவும் மற்றும் தவறுகள் இன்றி உங்கள் எண்ணங்களை ஆங்கிலத்தில் வெளிப்படுத்தவும் மிகவும் நவீனமான கோர்ஸ். இந்த கோர்ஸ் மூலமாக நீங்கள் ஆங்கிலத்தில் சுலபமாக எழுதவும் படிக்கவும் முடியும். இந்த கோர்சின் ஃபீஸ் ரூ. 170/-.

## லேட்டஸ்ட் டெக்னாலஜி உதவியுடன் தயாரிக்கப்பட்ட கோர்ஸ்

## கோர்சை இலவசமாக பெற நியமனமான நிபந்தனைகள்

• இந்த கோர்சை இலவசமாக பெற ஒரு கூப்பனை கட்டாயமாக அனுப்ப வேண்டும். • ஜெராக்ஸ் மற்றும் கார்டுகளின் மீது எழுதி அனுப்புபவர்களுக்கு கோர்சை அனுப்ப முடியாது. • உங்களுடைய நண்பருக்கு இந்த கோர்ஸ் தேவைப்பட்டால், மற்றொரு பத்திரிகையிலுள்ள கூப்பனை எழுதி அனுப்ப வேண்டும். • இந்த கோர்ஸ் முழுவதும் ஃப்ரீ ! ஆனால் இதை அனுப்புவதற்கு ஆகும் செலவுகளை நீங்களே ஏற்க்க வேண்டும். • கவரின் மீது தற்பொழுதைய விலையின் படி உள்ள 3 ரூ கொண்ட ஸ்டாம்ப்பை ஒட்ட வேண்டும். • கோடை விடுமுறை நாட்கள் முடிந்து போவதற்குள் இக்கூப்பனை அனுப்ப வேண்டும். • கோடை விடுமுறை நேரத்தில், விளம்பரத்திற்காக, நாங்கள் வழங்கும் இந்த வாய்ப்புக்கு தடை ஏதும் நேரிட்டால் அதன் முழு பொறுப்பும் எங்களுடையது ! இதனைக் குறித்து கடித போக்குவரத்திற்கு அவகாசம் கிடையாது. • எக்காரணத்தைக் கொண்டாவது இக்கோர்ஸை உங்களுக்கு அனுப்பித்தர முடியாவிட்டால் எந்த வகையிலும் நாங்கள் அதற்கு பொறுப்பாளிகள் அல்ல. • நாள்தோறும் ஆயிரக்கணக்கானவர்களுக்கு இக்கோர்சை அனுப்ப வேண்டி இருக்கும். அதனால் குறைந்தது மூன்று வாரங்கள் கால அவகாசம் எங்களுக்கு தேவையாக இருக்கும்.

## இக்கூப்பனை உடனே நிரப்பி அனுப்பவும்

**STUDENT'S ENGLISH INSTITUTE** (Tamil Division)

P.B. No. 8569, 15/1, Parthasarathipuram Extn., T. Nagar, Chennai - 600 017.

337

எனக்கு ரூ. 420/- விலைமதிப்புள்ள டிவிஷன் 1,2,3, மொத்த பாடங்களை இலவசமாக அனுப்பவும் தபால் செலவுகள் + பேக்கேஜ் ஃபார்வார்டிங் செலவுகள் + அட்வர்டைசிங் மெயின்டெனென்ஸ் செலவுகளுக்காக 100 ரூபாயை தபால்காரரிடம் செலுத்தி பெற்றுக் கொள்கிறேன் என உறுதி கூறுகிறேன். இதுபோன்ற அபூர்வமான வாய்ப்பை அளித்துக் கொண்டிருக்கும் உங்களுக்கு எங்களின் நன்றி.

(முக்கிய அறிவிப்பு : கம்ப்யூட்டரில் பத்திரப்படுத்துவதற்காக உங்கள் விலாசத்தை தெளிவாக, புரியும் விதத்தில் ஆங்கிலத்தில் எழுதவும்.)

என் பெயர் ..............................

என் முகவரி ..............................

.............................. பின்கோடு | | | | | | |

# விஷ்ணு

**பி.ஜே.பி ஆட்சிக்கு ஆதரவு வாபஸ் என்று பல்வேறு காரணங்களுக்காக மிரட்டி வந்த ஜெ இறுதியில் மிரட்டலை நிஜமாக்கியது விஷ்ணு பகவத் விவகாரத்தைக் காரணம் காட்டித்தான். ஃபெர்னாண்டஸை பதவி நீக்கம் செய்ய வேண்டும் என்பதும், நீக்கப்பட்ட கடற்படைத் தளபதி பகவத்தை மீண்டும் அப்பதவியில் அமர்த்த வேண்டும் என்பதும் ஜெவின் நிபந்தனைகள். விஷ்ணு பகவத் – ஃபெர்னாண்டஸ் மோதலின் பின்னணி இதுதான்:**

● மாஸ்கோவில் கமோடர் பந்தோபாத்யாயா, இந்திய தூதரகத்தில் கடற்படை உதவி அதிகாரியாகப் பணியாற்றி வந்தார். அவருடைய பதவிக் காலம் முடிய இன்னும் சில வருடங்கள் இருக்கையில், அவரை அங்கிருந்து தூக்க வேண்டும் என்றார் விஷ்ணு பகவத். தூதர் ரோனன் சென்னைக் கூப்பிட்டு விசாரித்தார் ஃபெர்னாண்டஸ். "பந்தோபாத்யாயா எப்படிப் பட்டவர்? தகராறு பிடித்தவரா?" "தங்கமான மனிதர். வம்பு தும்பில் மாட்டாதவர்!" என்றார் தூதர் ரோனன் சென். எழுதி வேண்டுமானாலும் தருவதற்குத் தயாராக இருந்தார் சென். 'அட, தம் கீழே பணியாற்றும் அதிகாரியை இப்படிப் பந்தாட நினைக்கிறாரே பகவத்' என்று கோபம் வந்தது ஃபெர்னாண்டசுக்கு.



● ஓய்வு பெறும் வயதை இரண்டு வருடங்கள் தள்ளிப் போடும் உத்தரவு வரும் வரை, சுஷில் குமாரும், வைஸ்-அட்மிரல் பதவியிலேயே ஓய்வு பெற்று விடலாம் என்று தான் நினைத்துக் கொண்டிருந்தார். ஆனால் உத்தரவு வந்ததும், தமக்கும் கடற்படைத் தளபதியாகும் வாய்ப்பு இருக்கிறது என்று எண்ணி, தமக்கு ஒரு கமாண்டர் பதவியைச் சிபாரிசு செய்யுமாறு கடிதம் எழுதினார். முதலில் 'ஆகா, செய்கிறேனே!' என்று உறுதியளித்த விஷ்ணு பகவத் பிறகு இது விஷயமாக எதுவுமே செய்யவில்லை. நினைவூட்டுக் கடிதங்கள் நிறையவே எழுதினார் சுஷில். அவற்றுக்குப் பதில் கூட அனுப்பாத விஷ்ணு பகவத்தின் போக்கைக் கண்ட சுஷில் குமார், நேரடியாகப் பாதுகாப்பு அமைச்சர் ஜார்ஜ் ஃபெர்னான்டஸுடன் தொடர்பு கொண்டார். இந்த விஷயம் தெரிந்ததோ இல்லையோ, உடனே சுஷில் குமாரைக் கூப்பிட்டு, 'எப்படி நீ பாதுகாப்பு அமைச்சரிடம் நேரடியாகத் தொடர்பு கொள்ளலாம்? என்னை ஏன் அவமரியாதை செய்தாய்?' என்று பிடிபிடி என்று பிடித்துக் கூச்சல் போட்டு, 'உன்னை கோர்ட் மார்ஷல் செய்யப் போகிறேன்!' என்று ஏகத்துக்கு மிரட்டியிருக்கிறார். கோர்ட் மார்ஷல் என்றால் உத்தியோகமே கிட்டத்தட்ட முடிந்த மாதிரிதான். அமைச்சர் கூட உதவ முடியாது!

பயந்து போன சுஷில் குமார் மறுபடி அமைச்சரைத் தொடர்பு கொண்டு நடந்ததைச் சொன்னார். ஐம்பதாண்டுகளாகத் தொழிலாளர் நலனில் தமது அக்கறையைக் காண்பித்து வந்த அமைச்சர் ஃபெர்னாண்டஸ், "எதற்குப் பயப்படுகிறாய்? நான் இருக்கிறேன்.

பார்த்துக் கொள்ளுகிறேன்!' என்று கஷில் குமாரைச் சமாதானம் செய்தார்.

ஒரு அதிகாரியைப் பிடிக்கவில்லை என்றால் அவர் மீது அநாவசியப் பழி சுமத்தி, அவரது ரகசிய ஊழியக் குறிப்புகளில் அவருக்கு எதிராக ரிமார்க்குகள் எழுதி, அவரை ஒரு வழி பண்ணுவது விஷ்ணு பகவத்துக்குக் கைவந்த கலை என்பதையும் ஃபெர்னாண்டஸ் தெரிந்து கொண்டார்.

● ஹரீந்தர் சிங் விவகாரமும் இதே மாதிரிதான். விஷ்ணு பகவத்துக்கு ஹரீந்தர் சிங்கை அறவே பிடிக்காது. அவரைத் தூக்குவதற்காக, மாஸ்கோவில் அவர் ராணுவ தளவாட விற்பனையாளர் ஒருவருடன் தங்கியிருந்தார் என்றும், செயின்ட் பீட்டர்ஸ்பர்கில் அவர் சகல ராஜபோகங்களையும் அனுபவித்துக் கொண்டு தங்கியிருந்தார் என்றும் அவர் பற்றி குறிப்புகள் எழுதி வைத்தார் விஷ்ணு பகவத். அவரது துன்புறுத்தல் அதிகமாகவே, ஹரீந்தர் ஃபெர்னாண்டஸைத் தொடர்பு கொண்டார். தாம் தங்கியிருந்தது தமது பழைய கல்லூரித் தோழரின் ஒரு பெட்ரூம் அபார்ட்மெண்ட் என்றும், அவருக்கும் ராணுவ தளவாட விற்பனைக்கும் சம்பந்தமே இல்லை என்றும் தெரிவித்தார் ஹரீந்தர் சிங். உடனே அந்தக் குறிப்பை நீக்கி விட்டார் ஃபெர்னாண்டஸ்.

செயின்ட் பீட்டர்ஸ்பர்க் விவகாரம்? 'ஐயோ, நானோ [illegible] என் குடும்பமோ அங்கே போகவே இல்லையே!' என்று உறுதியாக மறுத்தார் ஹரீந்தர் சிங். விஷ்ணு பகவத்தை விசாரித்தார் ஃபெர்னாண்டஸ். 'அப்படியா, சரி, அதை நீக்கிவிடுங்கள்' என்று வேண்டா வெறுப்பாக ஒப்புக் கொண்டார் விஷ்ணு பகவத்.

சரி இத்தோடு விட்டுவிட்டார் என்று நினைத்தால் விடவில்லை!

# (பகவத்) நாடகம்!



குடியரசுத் தலைவர் நாராயணன் அந்தமான் தீவுகளுக்கு விஜயம் செய்தார் இல்லையா? அப்போது, அவர் பயணம் செய்ய, இரண்டு இஞ்சின் பொருத்தப்பட்ட ஹெலிகாப்டரைப் பயன்படுத்தாமல், ஓர் இஞ்சின் உள்ளதைப் பயன்படுத்தி, குடியரசுத் தலைவரின் உயிருக்கே ஆபத்து உண்டாக்கப் பார்த்தவர் ஹரீந்தர் சிங்; அதனால் அவருக்கு இனி உத்தியோக உயர்வே கொடுக்கக் கூடாது என்று ஒரு புதிய வாதத்தைத் தொடங்கினார் விஷ்ணு பகவத்.

ஃபெர்னாண்டஸ் உடனே ராஷ்ட்ரபதி பவனைத் தொடர்பு கொண்டு விசாரித்தார். அன்று இரட்டை இஞ்சின் ஹெலிகாப்டர் அங்கே இருக்கவில்லை என்பது உண்மைதான். ஆனால் கடல் கொந்தளிப்பு இருந்ததால், படகில் செல்லக் குடியரசுத் தலைவர் விரும்பவில்லை. கடற்படை விதிகள் எப்படி இருந்தாலும், ஓர் இஞ்சின் உள்ள ஹெலிகாப்டர் இருந்தால் கூட தாம் பயணம் செய்யத் தயாராக இருப்பதாக நாராயணன் தெரிவித்த பிறகே ஹரீந்தர் சிங் அதற்கு ஏற்பாடு செய்ததாகவும், அதற்கு அவர் மீது பழி சுமத்துவது தவறு என்றும் ஜனாதிபதி தெரி

வித்திருக்கிறார்.

வந்ததே கோபம் ஃபெர்னாண்டஸுக்கு! இன்னொரு முக்கிய விஷயமும் தெரிய வந்தது அவருக்கு. ஹரீந்தர் சிங்கின் ரகசிய உத்தியோகக் குறிப்புகளில் வேண்டுமென்றே அவருக்கு எதிராக எழுதி வைத்து, அவரது உத்தியோக வாழ்க்கையைச் சீர் குலைக்கப் பார்த்திருக்கிறார் விஷ்ணு பகவத்! அவற்றை எல்லாம் நீக்கி, அவரைப் பதவி உயர்வு பெறத் தகுதி உள்ளவராகக் கருதி, காபினெட்டுக்குச் சிபாரிசு செய்தார் ஃபெர்னாண்டஸ்.

'சப்மரீனா? என்ன சப்மரீன்? நாங்கள் ஒன்றும் செய்யவே இல்லையே?' என்று இருபது வருடங்களாகத் தொடர்ந்து நாம் நாடாளுமன்றத்தில் மறுத்து வந்திருக்கும் ATV நீர்மூழ்கிக் கப்பல் விவகாரத்தைப் பத்திரிகை

---

ஸ்வீடன் நாட்டில் உள்ள ஆஸ்லோ பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ஒரு பௌதிக ஆராய்ச்சியாளர் கடந்த இருபது வருடங்களாக குளிக்கவே இல்லை! இவர் உடம்பிலிருந்து சகிக்க முடியாத துர்நாற்றம் வீசுவதால் பல்கலைக் கழகத்திலிருந்து வெளியேற்றி விட்டார்கள். குளிப்பதும் குளிக்காததும் தன் தனிப்பட்ட அடிப்படை உரிமை எனவும் தன் உரிமையில் பல்கலைக் கழகம் தலையிடுவது தவறு என்றும் வழக்குத் தொடுத்துள்ளார் இந்த ஆராய்ச்சியாளர்.



ஆதாரம் : **இந்தியன் எக்ஸ்பிரஸ்**
தகவல் : **எஸ். ஆலன்**

---

களுக்குத் தாராளமாக விவரித்து வெட்ட வெளிச்சமாக்கியவர் விஷ்ணு பகவத். பாதுகாப்பு அமைச்சகத்தில் கூட இது சம்பந்தமான ஃபைல்களை வைக்காமல், பிரதமரின் அமைச்சகத்தில் பத்திரமாக வைத்திருந்த போதிலும் இந்த விவகாரம் வெளியானதில் விஷ்ணு பகவத் மீது ஃபெர்னாண்டஸுக்கு ஏகக் கோபம்.

அதுமட்டுமல்ல. ATV சப்மரீன் ஆராய்ச்சிக்காக நியமிக்கப்பட்டிருந்த வைஸ்-அட்மிரல் பூஷண் என்பவரின் பதவிக் காலத்தை இனியும் நீட்டிக்கக் கூடாது என்பது விஷ்ணு பகவத்தின் வாதம். விஞ்ஞானி அப்துல் கலாமை மிரட்டி, தமது விருப்பப்படி அதை ஃபைல்களில் எழுதி ஃபெர்னாண்டஸுக்கு அனுப்பி வைத்தார் பகவத். தமக்கு மிகவும் வேண்டப்பட்ட வைஸ்-அட்மிரல் கணேஷுக்கு அந்தப் பதவியைத் தர வேண்டும் என்பது பகவத்தின் எண்ணம்!

விஷ்ணு பகவத்தின் நெருக்குதலைத் தொடர்ந்து 'ஏன் இத்தனை வருடங்கள் ஆகிறது ஆராய்ச்சிக்கு?' என்று ஒரு டெக்னிகல் ஆடிட் வேண்டுமானால் வையுங்கள்' என்று சலித்துப் போய்ச் சொன்னார் அமைச்சர் ஃபெர்னாண்டஸ். இதுதான் சாக்கென்று இதற்காகவே காத்திருந்த மாதிரி, ஒரு டெக்னிகல் ஆடிட் குழுவை அமைத்தார் விஷ்ணு பகவத். அதற்கு யார் தலைவர் தெரியுமோ?

வைஸ் அட்மிரல் கணேஷ்!

இருபது வருடங்களாகத் தொடர்ந்து நாடாளுமன்றத்தில் மறுத்து வந்திருக்கும் ஒரு ராணுவ ரகசியத்தை, மறுபடி இப்போது நாடாளுமன்றத்தில் கிளறினால் இந்திய அரசு இத்தனை வருடங்களாகப் பொய் சொல்லி வந்திருக்கிறது என்றல்லவா உலகம் நினைக்கும்? இதை எல்லாம் நாடாளுமன்றத்தில் எப்படி ஒரு பாதுகாப்பு அமைச்சர் வெளிப்படுத்திப் பேச முடியும்? தர்ம சங்கடத்தில் அல்லவா விஷ்ணு பகவத் மாட்டி வைத்து விட்டார்!

எப்படி விஷ்ணு பகவத்துக்கு இத்தனை துணிச்சல் வந்தது என்று கொஞ்சம் பின்னோக்கிப் பார்த்தால், ஷரத் பவாரின் அரவணைப்பு முழுக்க முழுக்க இவருக்கு ஆரம்பத்திலிருந்தே இருந்திருப்பது தெரிய வருகிறது.

கடற்படைப் பாதுகாப்புச் சட்டத்தையும், ரகசியப் பாதுகாப்புச் சட்டத்தையும் மீறி இவர் நடந்து கொண்டதாக ரிட் பெட்டிஷன் (27.5.7/91) ஏற்கெனவே இருந்ததை, பவார் பாதுகாப்பு அமைச்சராக இருந்தபோது திரும்பப் பெற்றுக் கொள்ள ஏற்பாடு செய்திருக்கிறார். இது நடந்தது '91ல். பிறகு '92ல் ஒரு கடற்படை கமாண்ட் அந்தஸ்து கொடுத்திருக்கிறார். அடுத்து, பதவி உயர்வுக்குச் சிபாரிசு செய்திருக்கிறார். ஆனால் நேவல் போர்டு அதை நிராகரித்து விட்டது. பவார் விடவில்லை. தாமே பிரதமர் நரசிம்மராவிடம் அவரது ஃபைலை எடுத்துச் சென்று பிரமோஷனுக்கான உத்தரவைப் பெற்றுத் தந்திருக்கிறார்!

இப்போது தாக்கல் செய்திருக்கும் ரிட் பெட்டிஷனில் கூட, ஏராளமான கற்பனையையும், பொய்யையும் சகட்டுமேனிக்கு

நுழைத்திருக்கிறார் விஷ்ணு பகவத். பாதுகாப்புத் துறை நிபுணர் கே. சுப்பிரமணியம், பிரஜேஷ் மிஸ்ரா, இருவருமே பாதுகாப்பு அமைச்சர் மீது பகவத் சாட்டியிருக்கும் குற்றங்களை அறவே மறுத்திருக்கிறார்கள்.

தமது கீழே பணியாற்றும் அதிகாரிகளைத் துச்சமாக மதிப்பவர் விஷ்ணு பகவத் என்று கடற்படை ஊழியர்களே சொல்லுகிறார்கள். 'கொண்டா அவன் ரெக்கார்டுகளை. அவனை ஒரு வழி பண்ணி விடுகிறேன்' என்பது விஷ்ணு பகவத் அடிக்கடி உபயோகிக்கும் சொற்றொடர்!

'விராட்' போர்க் கப்பலில் உள்ள ஓர் அதிகாரி, "நிதி விஷயங்களில் நேர்மையானவர் ஆக இருந்தாலும் மற்ற விஷயங்களில் எல்லாம் மிக மோசமான மனிதர் விஷ்ணு. பொய்கள் சொல்லுவதில் கெட்டிக்காரர். பழிவாங்குவதில் நெ.1" என்கிறார்.

"நல்ல வேளை விஷ்ணு பகவத் போனார்! ஒரு பெரிய பாறாங்கல் எங்கள் மீதிருந்து அகற்றப்பட்டது" என்று கடற்படை அதிகாரிகளும், ஊழியர்களும் சொல்லுகிறார்கள்.

கடற்படைச் சட்டதிட்டத்தைப் பல முறைகள் மீறி, பிடிபட்டு, மன்னிக்கப் பட்டவர்.

83ல் ஒரு பாகிஸ்தானி விமானத்தின் மீது சுட்டுவிட்டு, பெரிய போரே வந்திருக்கக் கூடிய அளவுக்கு முட்டாள்தனமாகச் செயல்பட்டவர் பகவத்.

தமது உயர் அதிகாரிகளின் அறைக்கு, அவர்கள் இல்லாதபோது போய், ரகசிய ஆவணங்களை போட்டோ எடுத்து வைத்துக் கொள்ளுவது இவரது வாடிக்கையாம்!

ஒரு கோர்ட் கேஸில் தமது மனைவி ஆஜராக வேண்டும் என்பதற்காக கடற்படை விமானத்தில் அவளை கல்கத்தாவுக்கு அழைத்துக் கொண்டு போனவர் விஷ்ணு பகவத்.

இப்படி விஷ்ணு ('பகவத்) புராணம்' நீண்டு கொண்டே போகிறது.

— சித்தார்த்

நன்றி : 'சண்டே' வார இதழ்

# சொல்லாமலே...

யாரென்று சொல்ல?
அழும் அந்த
பிஞ்சுக் குழந்தையிடம்
அதன் பெற்றோரின்
தலையைச் சீவிய
சாதிக் கலவர அரிவாளுக்கு
சாணை பிடித்தவர்
எவரென்று சொல்ல?

ரத்தத்தில் மிதக்கும்
மஞ்சள் துணிப்பையும்
சிதறிய அரிசியும்
நனைந்து ஊறும்
ரேசன் கார்டும்
இவற்றை எதிர்பார்த்து
எங்கோ காத்திருக்கும்
எரியா அடுப்பும்
எந்தத் தலைவரின்
சிலையை உடைத்தன?

எரிந்து கருகி
எலும்புக் கூடாகி
வண்ணத்துப் பூச்சிமேல்
மல்லாந்து கிடக்கும்
பேருந்து
எந்த ஜாதியை
இழிவு செய்தது?

அறுந்து கிடக்கும்
புத்தம் புதுமஞ்சள்
மாங்கல்யக் கயிறும்
நசுங்கிய கொலுசும்
எந்த ஜாதிப் பயிர்வளர
உரமாய்ப் பயன்படும்?

லட்சம் லட்சமாய்த் தரும்
நிவாரணத் தொகை
ரப்பர் வளையல்களோடு
துண்டிக்கப்பட்ட
தளிரின் கையை
ஒட்ட வைத்து உயிர்ப்பிக்குமா?

காலச் சக்கரத்தைப்
பின்னால் சுழற்றும்
அசோகரின் அவதாரங்களே!
போதும் நிறுத்துங்கள்...
களங்கப் போரை!

— வல்லம் தாஜுபால்

# பக்தனைத் தேடி வந்த பெருமாள்!

• நாராயணன்



சேவுகன் செட்டியார் பெரும் செல்வந்தர். வணிகரான அந்த நகரத்தார், ஆண்டவனின் அருளைத் தவிர வேறு எதுவும் பெரிய செல்வமில்லை என்று உணர்ந்தார். திருவேங்கடமுடையானின் அருட்பணியில் உளமார ஈடுபட்டார்.

அதற்காக அவர் இல்லறத்தைத் துறக்கவில்லை. கடுந்தவம் இயற்ற கானகத்திற்குத் தான் போக வேண்டும் என்ற அவசியம் இல்லை என்ற உயர் தத்துவத்தின் உதாரணமாக விளங்கினார். தவத்தில் ஆழ்ந்திருக்கும் தம் மீது ஊர்ந்து செல்லும் பாம்புகளை அவர் உணர்ந்தாரில்லை. ஆனால் அவரைப் பார்த்த அக்கம்பக்கத்தவர்கள் அவருடைய ஆழ்ந்த பக்தி கண்டு மனமுருகி அவருக்கே பக்தரானார்கள். சேவுகன் செட்டியாரை வந்து தரிசித்தால் தீராத நோய்களும் தீரும் என்ற நம்பிக்கை வலுப்பெற்றது. பக்தர்கள் கூட்டம் பெருகியது. தமக்குள் இருந்து தம்மை ஆட்டுவிப்பவன் அந்தத் திருப்பதி உறை தெய்வம் தான் என்பதை உணர்ந்த அவர், நோய் தீர்ந்த பக்தர்கள் செலுத்திய காணிக்கைகள் அந்தப் பெருமாளுக்கே உரியது என்று நினைத்தார். அந்த காணிக்கைகளை தாமே திருப்பதிக்கு நடந்து சென்று சேர்ப்பிப்பதுதான் முறை என்றும் கருதினார். காணிக்கை உண்டியலைத் தலை மீது சுமந்து நடைப்பயணம் மேற்கொண்டார். ஆண்டுதோறும் இந்தப் பிரார்த்தனை தொடர்ந்தது.

உள்ளத்தின் இளமையும் இறைவனின் திருவருளும் உடம்புக்குப் புரிகிறதா? மூப்பு வந்து தள்ளாடியது. ஆனாலும் தம் தெய்வீகப் பணியில் தொய்வு வந்து விடக் கூடாது என்ற உந்துதலில் மலையேறிக் கொண்டிருந்தார். ஆனால் முடியவில்லை. சுமந்து வந்த காணிக்கை உண்டியலை இறுகப் பற்றியபடி மயங்கி விழுந்தார்.

தம் பக்தனின் ஈடுபாட்டைக் கண்டு பெருமாள் உள்ளம் உருகினார். அசரீரியாக அருள் செய்தார். 'நான் இருக்கும் இடம் தேடி இனி நீ வர வேண்டாம். உன் இருப்பிடம் நாடி நான் வருகிறேன்.' ஆனால் பெருமாள் வருவதை எப்படி அறிவது? 'நீ உன் ஊருக்குத் திரும்பிப் போ. அங்கே நான்கு பக்கமும் முளை அடித்து நடுவில் உடைத்த தேங்காயும், தூபமும், குங்குமமும் இருக்கும். அந்த இடமே நான் வாசம் செய்யும் இடம்' என்றும் அசரீரி அனுக்ரகம் செய்தது.

மனம் குதூகலிக்க ஊருக்குத் திரும்பினார் சேவுகன் செட்டியார். அங்கே அசரீரி பலித்திருப்பது கண்டார். உடனே பெருமாளுக்குத் திருக்கோயில் ஸ்தாபித்தார். ஹரி குடிகொண்டிருக்கும் இடம் என்பதால் அந்த ஊர் ஹரிகுடியாயிற்று, பிறகு திரிந்து அரியக்குடியாயிற்று.

ஸ்ரீரங்கம் பெரிய கோயிலில் ராமானுஜரால் ஆராதனை செய்யப்பட்ட விக்ரகம் இங்கே எடுத்து வரப்பட்டு பிரதிஷ்டை செய்யப்பட்டது.

• புனரமைப்பில் ரிஷி கோபுரம்



• திருவேங்கடமுடையாள்

பிரம்மாண்டமான அந்தக் கோவில் பாழ்பட்டு விட்டது. இரண்டு ஏக்கர், முப்பது செண்ட் பரப்பில் பரந்து விரிந்திருக்கும் இக் கோயிலின் மதில் சுவர் 20 அடி உயரம். எப்போதடா பன்னிரண்டு ஆண்டுகள் ஆகும், கும்பாபிஷேகம் நடத்தலாம் என்று பிரபல கோயில்களெல்லாம் காத்திருந்து விழா எடுக்க, இந்தத் தென்திருப்பதி மட்டும் 1902, ஏப்ரல் 22-ம் தேதிக்குப் பிறகு, 97 வருடங்களாக குடமுழுக்கு காணாதிருக்கிறது.

அந்தக் குடமுழுக்கு வரை நகரத்தார் பொறுப்பில் இருந்த அந்தக் கோயில், பிறகு இந்து அறநிலையத் துறையின் கட்டுப்பாட்டுக்குள் வந்தது; கவனிப்பாரற்றுப் போயிற்று!

திருப்பதியிலிருந்து சவாரி வந்தது. திருமயத்திலிருந்து அக்னி வந்தது. இவையெல்லாம் பெருமாளின் அசரீரி வாக்காலேயே நடைபெற்றன. இப்படி அமைந்ததில் பக்தர்களுக்கு ஒரு பெரிய லாபம் உண்டு. அதாவது அரியக்குடி திருவேங்கடம் உடையானை தரிசித்தால், ஸ்ரீரங்கம், திருப்பதி, திருமயம் ஆகிய மூன்று புண்ணிய க்ஷேத்திரங்களையும் தரிசித்த நிறைவு கிட்டும்.

இது நானூறு வருடங்களுக்கு முந்தைய கதை. அந்தக் காலத்தில் கோயில் பராமரிப்பும், தினசரி நியமங்களும் செவ்வனே நிறைவேறி வந்தன. ஆனால் இன்று?



• சொர்க்கவாசல் மேல் விதான ஓவியங்கள்

இப்போது கோயில் புனரமைப்பு, மீண்டும் குடமுழுக்குப் பணிகளை ஏ.எம்.எம். அருணாசலம் அவர்களைத் தலைவராகக் கொண்ட, 'அரியக்குடி பெருமாள் டிரஸ்ட்' மேற்கொண்டது. ஆனால், பெரியவர் இந்தப் பணி துவங்கிய சுமார் ஒன்றரை வருடங்களில் இறைவனடி சேர்ந்து

விட்டார். ஆனாலும் இந்தத் திருப்பணி தடை காணாமல் தொடர, தமது சித்தப் பாவின் ஆன்ம வேட்கையைத் தீர்க்க, டிரஸ் டின் தலைமைப் பொறுப்பை மேற்கொண் டிருக்கிறார் எம்.வி. முருகப்பன்.

நகரத்தார் திருக்கோவில்கள் மொத்தம் 18. அவற்றில் அரியக்குடி கோயில் மட்டும் தான் வைணவக் கோயில். 900 அடி நீள சுற்று மதில்சுவர் கட்டமைப்பில் ராஜ கோபுரம் 80 அடி உயரம், ரிஷி கோபுரம் 60 அடி உயரமாக நிமிர்ந்து நிற்கின்றன.

பொதுவாகவே எல்லா பெருமாள் கோயிலிலும் கருடாழ்வார் கிழக்கு நோக்கி இருப்பார்; பெருமாளை நோக்கி இருப்பார். ஆனால் இங்கே, ஈசானிய மூலையில் தனி கோபுரத்தில், வடகிழக்கு நோக்கி அமர்ந் திருக்கிறார். இரு பக்கங்களிலும் சிம்மத் துடன் கம்பீரமாகக் காட்சி தருகிறார். ஒவ் வொரு சுவாதி நட்சத்திர தினத்தன்றும், இவ ருக்கு 108 குட திருமஞ்சன நீராட்டும், பூஜை களும் நடைபெறுகின்றன. இவர் மிகவும் வரப்பிரசாதி. இவருடைய சன்னதிக்குக் கீழே உள்ள சுவரில் சிதறு தேங்காய் உடைத் தால் காரிய சித்தி கிடைக்கும் என்பது பரவ லான நம்பிக்கை.

இந்த 108 குட நன்னீராட்டுக்கு கோயி லின் உள்ளேயே இருக்கும் அபிஷேக ஊரணியிலிருந்து - கருட தீர்த்தம் என்றும் குறிப்பிடுகிறார்கள் - நீர் எடுத்துக் கொள் கிறார்கள்.

மதில்சுவருக்கு வெளியே குளம். தெப்பம் விடப்படுகிறது.

பெருமாள், தாயார் அலமேலு மங்கா, ஆண்டாள், இம் மூவருக்கான பிரதான சன்னதிகள் தவிர ராமர், தேசிகர், விஷ்வக் சேனர், கருடன் முதலானோருக்கும் தனித் தனி சன்னதி. மேலே தனித்தனி கோபுரம் உண்டு.

கிட்டத்தட்ட முழுக் கோயிலையே மீண் டும் நிர்மாணிக்கிறார்களோ என்று பிரமிக்க வைக்கும் வகையில் புனரமைப்புப் பணிகள் நடைபெறுகின்றன. ஒவ்வொரு கட்டத்தி லும் இவர்கள் இந்து அறநிலையத் துறை யினரின் அனுமதி பெற்றுச் செயல்படு கிறார்கள். பெரியவர் அருணாசலம் கேட்டுக் கொண்டதற்கிணங்க, கோயில் புனரமைப்பையே தமது முழு நேர வேலை யாகக் கொண்டு, கண் துஞ்சாமல், மெய் வருத்தம் பாராமல் கருமமே கண்ணாகப் பணியாற்றுகிறார், சா.வெ.நா.சா. நாரா யணன் - டிரஸ்டின் செயலாளர்.

சிவகங்கை மாவட்டம் காரைக்குடி இருப்புப் பாதை நிலையத்திலிருந்து தெற்கே 2 கிலோ மீட்டர் தொலைவிலும், காரைக் குடி நகரிலிருந்து தென்கிழக்கே 5 கிலோ மீட்டர் தொலைவிலும் இத்தலம் அமைந் திருக்கிறது. காரைக்குடியிலிருந்து கோயில் வாசல் வழியாக உள்ளூர் பேருந்துகள் போய் வருகின்றன.

நவீனக் கட்டடக் கலை நுணுக்கங்க ளைக் கோயில் புத்துயிர் பெற அறிமுகப் படுத்தி வருகிறார் நாராயணன். சொர்க்க வாசல் பகுதியின் மேல் விதானத்தில் வரை யப்பட்டிருக்கும் ஓவியங்களை அவற்றின் பழமை அழகு கெடாமல், வண்ணத்

''ஜோக் எழுத்தாளரைக் காதலிச்சது தப்பாப் போச்சுடி.''

''என்னாச்சு?''

''பீச்சுல சுண்டல் வாங்கற பேப்பர்ல வேற யார் ஜோக்காச்சும் வந்திருந்தா உடனே மூடுஅவுட் ஆயிடறார்டி!''





''குப்புசாமி சார்! ஆபீஸ்ல தூங்கு றீங்க சரி... கூடவே அசடு வழிய சிரிக் கணுமா...?''

''ஹி... ஹி... யாராவது சம்திங் தர்ற மாதிரி கனவு கண்டிருப்பேன்!''

- சீர்காழி வி. ரேவதி

தொடு வேலை, கர்ப்பகிரகங்களுக்குள் போதிய சூரிய வெளிச்சம், காற்று வருவதற்காக விதானத்தில் வழி செய்தல், வெளிப் பிராகாரத்தில் பக்தர்கள் சுற்றி வரவும், அங்கப்பிரதட்சணம் செய்யவும் வசதியாகப் பாதை, ராஜகோபுரத்திலிருந்து ரிஷிகோபுரத்துக்கு மண்டபம், அதில் தசாவதாரக் காட்சிகள் கொண்ட தூண்கள். 14 மர வாகனங்களைப் பழுதுபார்த்தல், தங்கத்தால் ஆன கருட, குதிரை வாகனங்களுக்கும், வெள்ளித் தேருக்கும் புது மெருகூட்டுதல் என்று ஒவ்வொரு அம்சத்தையும் விடாமல் அவர் நிறைவு செய்து வருகிறார்.

அரியக்குடி மக்கள் என்ன சொல்கிறார்கள்?

"என் பேரு ரங்கநாயகி, எண்பது வயது" என்று அறிமுகப்படுத்திக் கொண்ட ஒரு மூதாட்டி, "இந்தாங்கோ, பிரசாதம் எடுத்துக் கோங்கோ" என்று கூறி சர்க்கரைப் பொங்கலை நீட்டுகிறார். "என் கணவர் சீனிவாச அய்யங்கார், காரைக்குடி முனிசிபாலிடி நூலகத்தில் நூலகராக வேலை பார்த்தவர். அவருடைய மறைவுக்குப் பிறகு எனக்கு வரவேண்டிய பென்ஷன் பணம் வரவில்லை. விசாரிச்சா, குறிப்பிட்ட ஃபைலைக் காணோமாம்; தேடிண்டிருந்தா. திருவேங்கடமுடையான்கிட்ட வேண்டிண்டேன். சர்க்கரைப் பொங்கல் நைவேத்யம் பண்றேன்னு நேர்ந்துண்டேன். என்ன ஆச்சர்யம்! காணாமல் போன ஃபைல் டபக்னு எங்கேருந்து வந்து குதிச்சதோ! எனக்கு பென்ஷன் வந்திண்டிருக்கு! இன்னும் கொஞ்சம் பிரசாதம் எடுத்துக் கோங்கோ." எட்டணா ஒரு ரூபாய் என்று தமக்குக் கிடைக்கும் காசுகளைச் சேர்த்து ஆயிரம் ரூபாயானவுடன் பெருமாளுக்குக் காணிக்கை செலுத்துகிறார் இந்த அம்மையார். "நான் சொன்னா பெருமாள் கேட்பார், பெருமாள் சொன்னா நான் கேட்பேன்" என்று மனஉறுதியுடன் சொல்கிறார் இவர்.

"நான்கு தலைமுறையா பெருமாளுக்கும் எங்க குடும்பத்துக்கும் நெருக்கம் ஜாஸ்திங்கறதிலே எனக்குப் பெருமைதான்"- சீனிவாச பட்டாச்சார்யார். "என் கொள்ளு தாத்தா, தாத்தா, அப்பா, நான்னு, பரம்பரை பரம்பரையா தாங்க திருவேங்கடமுடையானுக்கு சேவை செய்துக்கிட்டு வர்றோம். 'ஓகோ'ன்னு இருந்த காலத்தைப் பத்தி தாத்தா சொல்வார். 1929லே பிறந்த நான், இந்தக் கோயிலோட சீரழிவையும் வேதனையோட பார்த்துண்டுதான் இருக்கேன். இப்போ இந்த டிரஸ்ட் ரொம்ப சிரமம் எடுத்துண்டு, பிரமாதமா வேலை பண்றா. இந்த ஊருக்கு மட்டுமில்லை, நாட்டுக்கே சுபிட்சம்தான்."

அரியக்குடி என்றாலே சங்கீத அபிமானிகளுக்கெல்லாம் உடனே நினைவுக்கு வருபவர் ராமானுஜம் அய்யங்கார்தான். அவர் குடியிருந்த சன்னதித் தெரு வீட்டைக் காண்பித்தார்கள். யாருக்கோ விற்கப்பட்ட அந்த வீடு இடிக்கப்பட்டு வெறும் தரை மட்டுமே இப்போது



"ஏதாவது ஒன்றின் பெயரால் மனத்தை ஒருமுகப்படுத்துவதற்குப் பெயர்தான் தவம்னு நீங்கதானே குருவே சொன்னீங்க?"
"அதுக்காக கண்ணை மூடிக்கிட்டு சிம்ரன் சிம்ரன் சிம்ரன்னு முணுமுணுக்கணுமா என்ன!"

— உ. ராஜாஜி

மிஞ்சியிருக்கிறது.

நல்லவேளை, திருவேங்கடமுடையானை அப்படி முற்றிலும் கைவிட்டு விடாமல் நகரத்தார் சீரமைப்புப் பணிகள் செய்து வருகிறார்கள்.

வரும் செப்டம்பர் 16 (ஆவணி 30)ம் தேதி குடமுழுக்கு நடத்த ஏற்பாடு. ஒரு கோடி ரூபாய் செலவில் புனரமைப்புத் திட்டம். ஆனால் இப்போது செலவு ஒன்றரை கோடியாக உயர்ந்து விட்டது. ஒரு கோடி கிடைத்து விட்டது. பக்தகோடிகள் ஆதரவால் மீதி அரைக் கோடியும் கிடைத்து விடும் என்று டிரஸ்டிகள் பெரிதும் நம்புகிறார்கள்.

படங்கள், கட்டுரை: **பிரபுசங்கர்**

# படையப்பா

'அடேங்கப்பா!' என்று மிரள வைத்தது, தியேட்டரில் ரசிகர்கள் அடித்த கும்மாளம்.

அவர்களை, 'அட போங்கப்பா!' என்று புலம்ப வைக்காமலிருக்க ஒற்றைக்காலில் நின்று வித்தை காட்டியிருக்கிறார் ரஜினி. என்ன, பரணிலிருந்து தூசு தட்டி எடுத்த, பழைய வித்தை!

சுருட்டைத் தூக்கிப் போட்டுப் பிடிப்பது, விறைப்பாக விரலை நீட்டி 'என் வழி தனி வழி' என்று விசில் வசனம் பேசுவது,



ஆர்னால்ட் ஸ்டைலில் சட்டை போடாமல் சண்டை போடுவது போன்றவை ரசிகர்களின் புல்லரிப்புக்காக.

தத்துவப் புல்லரிப்புக்கு (ஆனாலும் ரொம்பவே அரிக்கிறார்) உதவியிருப்பவர் வைரமுத்து. கிக்கு ஏறினால் ஞானம் ஊறுமாம். இதை சீரியஸாக எடுத்துக் கொள்ளப் போகிற இளவட்டங்களையும் அதற்கான 'புண்ணியத்தைக் கட்டிக் கொள்ளப் போகிற படையப்பா குழுவையும் அருணாசலநாதர் மன்னிக்க!'

இனி, கதைக்கு வரலாம். பெரிசாக ஒன்றும் இருக்காது என்று யாவரும் அறிந்த பழைய முக்கோணக் காதல். இதற்கு மூன்று தலைமுறைப் பின்னணி, ரம்யாகிருஷ்ணனின் பதினெட்டு வருஷ விரதம், சிவாஜியின் பத்து நிமிஷப் பிரசன்னம், அப்பாஸின் கிளைக்காதல் என்று அரை விநாடி மூச்சு விட முடியாமல் சம்பவங்கள்; சமாசாரங்கள்.

ஒரு நட்சத்திரப் படையே திரையில் வருகிறது. வந்தசூட்டில் ஓடி விடுகிறது. திரை முழுக்க ரஜினி!

பாராட்ட வேண்டிய ஒரே விஷயம், ரம்யாகிருஷ்ணனின் பாத்திரப் படைப்பும், பாந்தமான நடிப்பும்.

ஏராளமான யூகங்களுக்கு இடம் கொடுத்துவிட்ட கேரக்டர். ஆனால் பொதுவான ஒரு திமிர் பிடித்த பெண் பாத்திரம் என்பது தவிர வேறு 'பிரத்யேக' அடையாளங்கள் இல்லை.

ரம்யாவை நோக்கி ரஜினி பேசும் வசனங்களுக்கு இரண்டு பொருள் கொள்வது ரசிகர்களின் விருப்பம். ''ஒரு பொம்பள ரொம்ப கோபப் படக்கூடாது'' என்பது போன்ற ஆணாதிக்க வாக்கியங்கள். (ஏராளம் உள்ளன) இன்று கைதட்டல் பெற்றுத் தரலாம்... ஆனால் 'வில்லி'யை விமர்சிக்கப் போய் பல வசனங்கள் பெண்மையையே கேவலப்படுத்துகின்றன.

ரகுமான் இசை என்றார்கள். பாடல்களில் அடிக்கிற பழைய வாசனையும் அலட்சியமான ட்யூனிங்கும் மிகுந்த எதிர்பார்ப்புக்குள்ளான ஒரு படத்துக்கானதாக இல்லை. நித்யஸ்ரீ பாடும் அந்த 'மின்சாரக் கண்ணா'வில் மட்டும் மின்சாரம் இருக்கிறது.

ஏகப்பட்ட எதிர்பார்ப்புக்கிடையில் வந்திருக்கிற படம். குழப்பமான இழுவைத் திரைக்கதை, 'ஏன் எதிர்பார்த்தாய்? எதற்காக எதிர்பார்த்தாய்?' என்று சாட்டையால் அடிக்கிறது.

ரஜினி ரசிகர்கள் மனமுவந்து ரவிக்குமாரை மன்னிக்க வேண்டும்.

கேளிக்கைக்கே என்றாலும் அடுத்து ஒரு தரமான படம் தர ரஜினியும் ஆசைப்பட வேண்டும் - அவர் வழி தனி வழி என்பது அப்போதுதான் உறுதிப்படும்!

— கே.பி.எஸ்.



1999 ஏப்ரல் 25
பிரமாதி சித்திரை 12
மலர் : 57
இதழ் : 39

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# ஊழல் + ஊழல்!

"சோனியா காந்தி, ஜெயலலிதா, மாயாவதி ஆகிய மூன்று பெண்களும் பெரும் அழிவிலிருந்து நாட்டைக் காப்பாற்றிவிட்டனர்" என்று மக்களவையில் சுப்ரமணியம் சுவாமி கூறியிருப்பது மிகக் குரூரமான நகைச்சுவை! எந்த டான்ஸி நில பேர ஊழலுக்காக ஜெயலலிதா பேரில் சுவாமி வழக்குத் தொடுத்தாரோ, அந்த மெகா ஊழலும் தேசிய அளவிலான போஃபர்ஸ் மெகா மெகா ஊழலும் கைகோத்துக் கொண்டு, ஒரே வாக்கு வித்தியாசத்தில் பி.ஜே.பி ஆட்சியைக் கவிழ்த்துள்ளன!

இந்த அகௌரவமான அரசியல் விளையாட்டில் தாம் ஜெயிப்பதற்காக ஜெயலலிதா அழுகுணியடித்துப் பெற்ற ஆதரவுதான் மாயாவதியுடைய பி.எஸ்.பி கட்சியின் ஐந்து வாக்குகள்.

வாக்கெடுப்பில் கலந்து கொள்ளப் போவதில்லை என அறிவித்த மாயாவதியிடம், 'உங்களை சட்டசபையில் முதுகில் குத்திய கட்சியைப் பழிவாங்க இதுவே சமயம்; வாருங்கள் — பி.ஜே.பிக்கு எதிராக வாக்களியுங்கள்' என்று காழ்ப்புணர்ச்சியைத் தூண்டி யிருக்கிறார் அ.தி.மு.க தலைவி. அவர் சொல்படி செயல்பட்ட பி.எஸ்.பி. தலைவியும் 'ஆஹா! பழிக்குப் பழி வாங்கிவிட்டோம்' என்று கொக்கரிக்கிறார்.

இத்தகைய தனிநபர் விரோதங்களும் காழ்ப்புணர்ச்சியும் வடிகட்டின சுயநலமும்தான் இந்திய அரசியலில் இன்று ஏற்பட்டுள்ள நெருக்கடிக்குக் காரணம்.

மாயாவதியைப் பழிக்கு பழி வாங்கத் தூண்டிய ஜெயலலிதா, அதே மன இயல் புடன்தான் தமிழகத்தில் 356-ஐ பிரயோகிக்கப் பலமுறை வற்புறுத்தினார். தமது பேரில் வழக்குகள் தொடரக்காரணமாயிருந்த கருணாநிதி, ஆட்சியில் நீடிக்கக் கூடாது என்று முடிவுக்கு வந்தார். பி.ஜே.பி. அரசிடம் பலமுறை மறைமுகமாகவும் நேரடியாகவும் 'தி.மு.க. ஆட்சி டிஸ்மிஸ்' நிபந்தனையை அவர் விதித்துவிட்டார். அந்த நிபந்தனைக்கு பிரதமர் இணங்காததாலேயே வேறு நொண்டிச் சாக்கு (விஷ்ணு பகவத் விவகாரம்) காண்பித்து ஆதரவை அவர் விலக்கிக் கொண்டுள்ளார் என்பது பட்டவர்த்தனமாகத் தெரிகிறது. இந்தப் பழிவாங்கல் மனோபாவத்தையே இந்திய அரசியலின் தலையாய பண்பாக வளர்க் கும் 'அரும்' பணியைக் கருமமே கண்ணாகச் செய்து வருகிறார் ஜெ! அவருக்குச் சகல விதத்திலும் உதவி வருபவர் சுப்ரமண்யம் சுவாமி!

இன்றைய அவலமான நெருக்கடிக்கு தமிழக வாக்காளர்கள் முக்கிய காரண கர்த்தாக்கள் என்பதை கனத்த மனத்துடன் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். நாடாளுமன்றத் தேர் தலில் அ.தி.மு.க. — பி.ஜே.பி கூட்டணி போட்டியிட்டபோது, பி.ஜே.பியை ஆதரித்தாலும் அ.தி.மு.க. வேட்பாளர்களுக்கு வாக்களிக்க வேண்டாம் என்று கேட்டுக் கொண்டோம். ஆனால் அ.தி.மு.கவின் மெகா ஊழல்கள் பசுமையாக நினைவிருந்த போதிலும் ஸ்திரத் தன்மைக்கு உதவும் என நம்பி நம் வாக்காளர்கள் வாக்களித்தார்கள்.

இன்று அந்தத் தமிழக வாக்காளர்களை ஏமாற்றும் வகையில் ஸ்திரத்தன்மைக்கு வேட்டு வைத்துள்ள ஜெயலலிதா, நாளை சோனியா காந்தி பிரதமரானாலும் இதே மாதிரியான நீசத்தனங்களில்தான் ஈடுபடுவார். இன்னும் சொல்லப்போனால், தமது பேரி லுள்ள சட்டபூர்வமான நடவடிக்கைகளுக்கெல்லாம் முடிவு கட்டச் செய்துவிட்டு, முன்னி

லும் அதிகமாக மத்திய அரசை ஆட்டிப் படைப்பார். 'இன்று சோனியா பிரதமராயிருக்க நானே காரணம்' என்று ஒரு பல்லவியை ஆரம்பித்து, புதிய பிரச்னைகளைக் கிளப்புவார்.

சோனியா காந்தி இதையெல்லாம் எண்ணிப் பாராமல் இருந்திருக்கக் கூடியவரல்ல. அத்தனையையும் மீறி, அவர் ஜெயலலிதாவைச் சந்தித்துப் பேசி கைகுலுக்கியிருக்கிறார் என்றால், பதவி ஆசை அவர் கண்ணை மறைக்கிறது என்பதற்கு மேலாக என்ன சொல்ல முடியும்!

இத்தனை சூது வாதுகளுக்குப் பிறகு அடையப்படும் பதவியில் ஒருவர் எவ்வாறு நிம்மதியாய் ஆட்சிபுரிய முடியும்? ஜெ மட்டுமின்றி, 'ஆதரவு பிச்சை' தந்த அத்தனை பேருக்கும் 'வாய்க்கரிசி போட்டு' 'மகிழ்ச்சி'யாய் வைத்திருக்கவே பொழுது போதாது. ஆட்சி என்பது மருந்துக்கும் நடக்காது.

பி.ஜே.பி. ஆட்சி திருப்திகரமாக நடக்கவில்லை என நாம் பலமுறை சுட்டிக்காட்டியிருக்கிறோம். 'ஜெ' மிரட்டல்களுக்குப் பணிவதற்குப் பதில் பிரதமர் ராஜிநாமா செய்வதே மேல் என்றுகூட கூறியிருக்கிறோம். ஆனால் இப்படியொரு அக்கிரமமான முறையில் இவ்வாட்சி கவிழ்க்கப்படவேண்டும் என்று நியாய உணர்வுள்ள எவரும் எண்ண மாட்டார்கள்.

ஒரே ஒரு வாக்கு வித்தியாசத்தில் அரசு கவிழ்க்கப்பட்டது பெரிய சோகம் எனில் அந்தக் கவிழ்ப்புக்கு த.மா.கா கைகொடுத்து உதவியதென்பது மிக மிகப் பெரிய மோசம்! ஜெயலலிதாவும் சோனியாவும் சந்தித்துப் பேசி ஒரு ஒப்புதலுக்கு வந்த பிறகே மூப்பனாரை சோனியா அழைத்துப் பேசியிருக்கிறார்.

அ.தி.மு.க. இருக்கும் இடத்தில் தாங்கள் இருக்கப் போவதில்லை; அக்கட்சி அமைச்சரவையில் இடம்பெற்றால் தமது கட்சி வெளியிலிருந்தபடிதான் ஆதரவு தரும் என்கிறார் மூப்பனார்!




இது அபத்தமான தர்க்கவாதம். ஜெயலலிதாவுடன் நரசிம்மராவ் கூட்டணி அமைத்ததால் காங்கிரஸிலிருந்து வெளியேறி தனிக்கட்சித் தொடங்கியவர், இன்று அதே ஜெயலலிதாவுடன் கைகுலுக்கும் சோனியாவின் பக்கம் சரிவது பேரதிர்ச்சி தரு கிறது.

ஒரு மதவாதக் கட்சியை ஆதரிக்க விரும்பவில்லையெனில் த.மா.கா. வாக்கெடுப்பில் கலந்து கொள்ளாமலே இருந்திருக்கலாம். அதை விடுத்து தமிழகத்தின் ஆட்சிக் கவிழ்ப் புக்கு மறைமுகமாக உதவியிருக்கும் த.மா.கா. தனது அழிவைத் தானே தேடிக் கொண் டிருக்கிறது!

தமிழகத்தையும் இந்தியாவையும் ஒரு பெரிய துர்க்கதி பற்றாமல் இருக்க வேண்டு மானால் ஒரே ஒரு வழிதான் இருக்கிறது: தேர்தல்!

நம்பிக்கை வாக்கெடுப்பில் பி.ஜே.பி தோற்றதாலேயே, காங்கிரஸ் மக்களின் ஆதரவை யும் நம்பிக்கையையும் பெற்ற கட்சியாகிவிடாது! எதிர்க் கூட்டணிக்கு ஒரே ஒரு வாக்கு தான் கூடுதல். அதிலும் காங்கிரஸின் தனிபலம் 140 இடங்கள். பி.ஜே.பியின் தனி பலத்தைக் காட்டிலும் மிகவும் குறைவு. காங்கிரஸை ஆதரிக்கப் போகும் கட்சிகளின் நம்பகத்தன்மை ஏற்கெனவே சாயம் வெளுத்து, பல்லிளித்துக் கொண்டிருக்கிறது.

குடியரசுத் தலைவர் இந்த விபரீதக் கூட்டணிக்கு வாய்ப்புத் தராவிட்டால் ஜனநாயகம் மூச்சுத் திணறி செத்துப் போய்விடாது! வாய்ப்புக் கொடுத்தாலோ நாடு, ஊழல் + சுய நலவாதிகளின் கையில் சிக்கி அதலபாதாளத்துக்குப் போய்விடும்!

தேர்தல் அறிவிக்கப்பட்டால் மட்டும் ஒரு நிலையான ஆட்சி அமைந்து விடுமா? என்று கேட்கலாம். பேராசைப் பித்துப் பிடித்து அலையும் போலித் தலைவர்களுக்கு வாய்ப்புத் தருவதைக் காட்டிலும் வாக்காளனுக்கு வாய்ப்புத் தருவது எவ்வளவோ மேல்! ⭘

"இன்னிக்கி வரைக்கும் டிராவல்ஸ் நடத்தறவங்களுக்கு சவாலா இருக்கற ஒரு விஷயம், சுற்றுலாவில் கலந்துக்கவர்ற வாடிக்கையாளர்களைத் திருப்தியோட வீட்டுக்கு அனுப்பறது. என்னோட இருபத்தஞ்சு வருஷ டிராவல்ஸ் அனுபவத்துல எனக்கு கிடைச்ச வெற்றி அதுதான். அதுக்கு ஆதாரம் என்னோட டிராவல்ஸ்ல ஒரு தடவை டூர் புக் பண்ணினவங்க, திரும்பவும் அடுத்த டூருக்கு என்கிட்டயே வர்றதுதான்" என்கிறார் **ஸ்ரீ டிராவல்ஸ் உரிமையாளர் இளந்திரையன்.**

ஸ்ரீ டிராவல்ஸுக்குப் பெரிய பெரிய பொது நிறுவனங்கள் (லிமிடெட் கம்பெனிகள்) தரும் ஆர்டர்கள்தான் அதிகம். தொடர்ந்து இந் நிறுவனங்கள், ஸ்ரீ டிரா



வல்ஸை அணுகுவதற்கான காரணம், அதன் நம்பகமான, திருப்தியளிக்கும் சேவை. ஸ்ரீ டிராவல்ஸில் முன்பதிவு செய்து, சுற்றுலா செல்லும் பயணிகளுக்குத் தங்குமிடம் மற்றும் உணவளித்து, ஊர்சுற்றிக் காண்பிப்பதுடன், சுற்றுலா முடிந்ததும், வாடிக்கையாளர்கள் கூறும் கருத்துகளைக் காது கொடுத்துக் கேட்கிறார்கள்.

இளந்திரையன் சொல்கிறார் : "நான் முதல்ல மலேசியா டூர்தான் ஆரம்பிச்சேன். அப்போ பதினாறு பேர் சுற்றுலாவுல கலந்துகிட்டாங்க. ஏர்போர்ட்ல படிவங்கள் (forms) ஃபில்லப் பண்றதுலருந்து, உணவு, தங்கற இடம் ஏற்பாடு பண்ணி, ஊர் சுத்திக் காண்பிச்சுட்டு, கடைசில வீட்ல கொண்டு வந்து, 'இந்தாங்க உங்க ஹஸ்பண்டு, பத்திரமா கொண்டு வந்துட்டேன்'னு சொல்லி அவங்க ஒயிஃப் கிட்ட ஒப்படைக்கிற வரைக்கும் செஞ்சேன். அது மட்டுமில்லாம, வாடிக்கையாளர்கள் சிங்கப்பூர்ல கல்யாணம் எப்படி நடக்குதுன்னு பார்க்க ஆசைப்பட்டாங்க. அதுக்கும் பெர்மிஷன் வாங்கி, கல்யாணம் பார்க்க ஏற்பாடு பண்ணினேன். அந்த டூர்ல வாடிக்கையாளர்கள் அடைஞ்ச திருப்திதான், தொடர்ந்து டிராவல்ஸ் நடத்த என்னைத் தூண்டியது."

**ஸ்ரீ டிராவல்ஸின் சில தனிச் சிறப்புகள் :**

- சுற்றுலாவில் பயணிகள் தங்கும் ஓட்டல்கள் எல்லாமே, வசதியான குளுகுளு நட்சத்திர ஓட்டல்கள். (காமன் அகாமடேஷன் இல்லாமல், தனித்தனி அறைகள்)
- வாடிக்கையாளர்களின் வசதிக்காக, ஒவ்வொரு சுற்றுலாவும் ஒரு தனி எண்ணால் (code number) அழைக்கப்படுகிறது. உதாரணம் – 'காட்மண்டு – டார்ஜிலிங்' – ST4)
- ஒவ்வொரு ஊரிலும் பயணிகள் சுற்றிப் பார்க்க, 35 பேர் அமரக்கூடிய சீட்டுக்களைக் கொண்ட 'புஷ்பாக்' வண்டிகள்.
- சுற்றுலா மையங்களைப் பார்க்க, தனியாக நுழைவுக் கட்டணம் செலுத்த வேண்டிய

தில்லை (தாஜ்மகாலாயிருந்தாலும் சரி, லண்டன் அரண்மனையாயிருந்தாலும் சரி.)

- ஒவ்வொரு சுற்றுலாவிலும், திரைப்பட நடிகர்கள் பங்குபெறும், பொழுதுபோக்கு அம்சங்கள் நிறைந்த சிறப்பு நகைச்சுவை காட்சிகள், கலை நிகழ்ச்சிகள் மற்றும் பஃப்பே (buffet) உணவு ஏற்பாடு.
- சிறந்த சைவ உணவு (உள்ளூர் சமையற்காரர்கள் சுற்றுலா முழுக்க உடன் வருவார்கள்.
- சுற்றுலாவின் மொத்த நிகழ்ச்சியும், வீடியோவில் பதிவு செய்யப்படும். தேவைப்படுபவர்கள் நகலெடுத்துக் கொள்ளலாம்.
- கிரெடிட் கார்டு வசதி.
- எல்டிசி வசதி.
- சுற்றுலாவில் ஒரு கோச், ஒரு அட்டெண்டண்ட் உடன் வருவார்கள். (உரிமையாளரும் தான்)
- பயணிகளுக்கான உணவுத்தட்டு, தம்ளர் ஆகியவற்றை ஸ்ரீ டிராவல்ஸ் வழங்கும்.

''மே மாதம் ஒரு

# சுற்றுலாவுக்கேற்ற சூப்பரான டிராவல்ஸ்!

'பக்தி டூர்' ஏற்பாடு பண்ணியிருக்கேன். பத்ரிநாத், கேதார்நாத் எல்லாம் போறோம். டெல்லில சுகிசிவம், ஒரு பக்தி உரை நிகழ்த்தறார். அந்த டூர்ல வர்றவங்களுக்கு ஒவ்வொருத்தருக்கும் ஒரு தனி பெட் (individual bed) கொடுக்கறோம். அது பயணிகளுக்கு எடைகுறைவா, சுலபமா தூக்கிச் செல்லும்படி இருக்கும். ஞாபகார்த்தமாவும் இருக்கும். ரிஷிகேஷ்ல ஒரு உபன்யாச நிகழ்ச்சி ஏற்பாடு பண்ணியிருக்கேன். சுற்றுலாவுக்கு வர்றவங்களுக்கு கந்தசஷ்டி கவசம், சுப்ரபாதம் புக்கெல்லாம் கொடுக்கப் போறோம். 'பக்தி சுற்றுலான்னா' முழுக்க முழுக்க பக்தி சுற்றுலாவா இருக்கணும்கறது என் விருப்பம். அதே மாதிரி கிழக்கத்திய நாடுகளுக்குப் போற வெளிநாட்டு டூர்ல, விசா, ஏர்போர்ட் டாக்ஸ், என்ட்ரன்ஸ் சார்ஜ் எல்லா விஷயங்களையும் நாங்களே பாத்துக்கறோம். சைவ உணவு, பாங்காக் தமிழ்ச் சங்கத்தோட சிறப்பு வரவேற்பு நிகழ்ச்சி, தமிழ் நடிகர்கள் பங்கேற்கும் பண்பாட்டு நிகழ்ச்சின்னு ஏகப்பட்ட சிறப்பம்சம் இருக்கு. வெளிநாட்டு வாடிக்கையாளர்களுக்கு ஏற்ற மாதிரி தனி உணவு வசதியும் செய்யறோம். இப்போ, எங்க ஸ்ரீ டிராவல்ஸ்லருந்து தினசரி திருப்பதிக்கு போறதுக்கு ஒரு பஸ் விடப் போறோம். சிட்டி லிமிட்ல இருக்கறவங்களை, வீட்லயே பிக்அப் பண்ணிட்டு, வீட்லயே கொண்டு வந்து விடப் போறோம். அதுல காலை, மதிய உணவுகள், ஸ்நாக்ஸ், காபி, எல்லாமே நாங்க தர்றோம். திருப்பதி போன உடனேயே கியூவுல நிக்க வேண்டிய அவசியம் இல்லாமல் உடனடி தரிசனத்துக்கு ஏற்பாடு பண்ணியிருக்கோம். பயணிகளுக்கு நியூஸ் பேப்பர்ஸ், மினரல் வாட்டர், வார இதழ்கள்



• இளந்திரையன்

எல்லாம் தர்றோம். காலைல 7 மணிக்குக் கிளம்பி, ராத்திரி 9½ மணிக்கெல்லாம் திரும்ப வந்துடலாம். வயசானவங்க, நடக்க முடியாதவங்க, வெளிநாட்டுக்காரங்க, வேற மாநிலத்தைச் சேர்ந்தவங்களுக்கெல்லாம், எங்க டிராவல்ஸ் ரொம்ப உபயோகமா இருக்கும்'' என்றார் இளந்திரையன்.

ஸ்ரீ டிராவல்ஸில் சுற்றுலாவிற்குப் புறப்படும் தினத்தன்று வாடிக்கையாளர்களுக்கு ஒரு ரோஜா கொடுத்து வரவேற்கிறார்கள். சுற்றுலா முடிந்த பிறகும், வாடிக்கையாளர்களுடன் கடிதத் தொடர்பு வைத்துக் கொள்கிறார்கள்.

ஸ்ரீ டிராவல்ஸின் உரிமையாளர் இளந்திரையன், ''என்னோட இலட்சியம், (Ambition) டூரிஸம்ல ஏதாவது சாதனை பண்ணணும்'' என்கிறார்.

தொடர்பு முகவரி :

**ஸ்ரீ டிராவல்ஸ்**

12/A, ரெட் ஹில்ஸ் ரோடு, கொளத்தூர்,
சென்னை - 99. டெலி பேக்ஸ் : 5584866.
போன் : 5378620/5584866

— ADVT

தங்கத் தலைவிகளோட பிறந்த நாள் விழாவுக்குக் கூட இத்தனை வாழ்த்து வந்து குவிஞ்சிருக்குமான்னு தெரியாது. லாஸ்ட் வீக் முழுக்க எனக்கு அவ்ளோ லெட்டர்ஸ் அண்ட் போன் கால்ஸ்!

ஒரு column ரைட்டர் – ரீடர்ஸ்ங்கற உறவுக்கு மேல அப்படியொரு இன்டிமேட் ரிலேஷன்ஷிப் இருக்கறதை நினைக்கும்போது பசும்புல்லரிக்கறது. ஏதோ ஒரு வகைல நாம ரத்தத்தின் ரத்தமா, நரம்பின் நரம்பா, மூளையின் மூளையா, மனசின் மனசா ஆயிட்டிருக்கோம். Anyway, ரொம்ப, ரொம்ப சந்தோஷமாயிருக்கு. சந்தோஷத்துல ஒரு கோட்டிங் நன்றி கலந்திருக்கறது தெரியுதா? அது, அப்பப்ப நான் குடுத்த இம்சைகளை (ரெண்டு மூணு வாரம் நடுல காணாமப் போனது உட்பட!) பொறுமையோட சகிச்சுக்கிட்டதுக்கு.



## சுமி சூப்பர் மார்க்கெட்!

### ஸ்பெஷல் கவிதை

(சமீப காலத்துக் கவிஞர்கள்ல ரொம்ப வித்தியாசமானவரா தெரியறவர் யுகபாரதி. சொற்சிக்கனமும் சூசகமும் ரொம்ப ஜாஸ்தி இவர்கிட்டே. இந்த ஸ்பெஷல் அகேஷனுக்காக நான் கேட்டு வாங்கின கவிதை இது!)

**பேசுதல்**

- பொய்யில்லை
எனினும்
ஒவ்வொருவரிடமும்
ஒவ்வொரு மாதிரி
பேச வேண்டியிருக்கிறது.

- முதல்
அறிமுகத்திலேயே
இயல்பாய்ப் பேசிவிட
எத்தனை பேரால்
முடிகிறது?

- முன்பொரு நாள்
முகந்திருப்பிப் போன
தோழனை
மறுபடியும்
சந்திக்கையில்
பேச்சைத் தொடங்குதல்
சிரமமாயிருக்கிறது.

- சிணுங்கல்களால்
நிரம்பும்
அந்தரங்கம்
அம்பலத்துக்கு
வந்து விடின்
மூச்சிரைக்கப்
பேசுகிறார்கள்

- பேசாமல் நகரும்
இக்கட்டுகளில்
மெல்ல அரும்பும்
புன்னகை
பேச்சை விடவும்
சப்தம் மிக்கது.

- பேச்சைக் கேட்டு
மோசம் போன
காதலை
அலையோசை
தாண்டியும்
பேசிக் கொண்டிருக்கிறது
கடல்.

- சபைக் குறிப்பிலிருந்து
நீக்கப்படும்
பல பேச்சுகள்
மூக்குடைப்புகளாக
வெளிப்பட்டு விடுகின்றன.

- பேசிப் பேசியே
கழிந்தன
ஐம்பதாண்டுகள்
பேசியவை
பிழையென இனி
பேசலாம்.

– யுகபாரதி

இந்த ஒரு வருஷத்துல நாம என் னென்ன பேசியிருக்கோம்?

நிறைய இலக்கியம், சினிமா, ஊர் வம்பு, கொஞ்சம் சமூகப் பிரச்னைகள், ஜோக்ஸ், புதுக்கவிதைகள், புஸ்தக விமர்சனம், லைட்டா ஆன்மீகம்...

அடுத்தக் கட்டம் என்னன்னு நிறைய பெரிய ரைட்டர்ஸெல்லாம் கேக்கறாங்க. (வையவன் லெட்டரைப் படிங்க.)

ரீடர்ஸையெல்லாம் ரைட்டர்ஸாக்கறது தான் ப்ளான். இந்த வீக் நான் பெரும் பாலும் ஒதுங்கிட்டு நம்ம மன்ற உறுப்பினர்களுக்கு 69 சதவிதத் இன்ப அதிர்ச்சி தரப் போறதா சொல்லி யிருந்தேன், ஞாபகமிருக்கா?

நிறையப் பேர் என் போட்டோ தரப் போறேன்னு நினைச்சி ஏமாந்திருப் பாங்க(ன்னு நினைக்கறேன். நான் முன் னாடியே சொன்ன மாதிரி, உலக அழகி களோட வயிற்றெரிச்சலுக்கு ஆளாக விரும்பலை.) அதனால, நம்ம மன்றத்தோட ரெகுலர் காண்ட்ரிப்யூட்டர்ஸ் சிலரோட போட்டோலை பப்ளிஷ் பண்ணியிருக் கேன் – சிறு குறிப்புகளோட. வாரா வாரம் பேரை மட்டும் தானே பார்த்திருப் பீங்க...? இந்த

# ஆண்டுவிழா ஸ்பெஷல்!



துக்கு மேல் இடம் விட் டிருக்கேன். (இதுக்காக ஒரு பாராட்டு விழா நடத்தற ஐடியா யாருக்காவது இருக்கா?)

பை நி பை, ஒரு

## ஸ்பெஷல் கடிதம்!

ஆண்டு விழா கொண்டாடும் கமிக்கு அன்பு கனிந்த வாழ்த்துக்கள். வாசகத் தன்மையைத் தூண்டும் இதே வகையான அரட்டை அரங்கங்கள் வெகு கால மாகவே சில தமிழ் சஞ்சிகைகளில் வந்திருந்தாலும் கமி மாறுபட்ட அபிப்ராயம் சொல்லித் துணிச்சலாக வெளிப்பட்டிருந்தார்; தன் தனி முத்திரை பதித்து.

என்ன, நாவல், புதுக்கவிதை, இலக்கிய வம்புகள் கொஞ்சம் தூக்கல்! ஒரு வித்தியாசம், தனக்குப் பட்டதை எழுதியிருந்தார். நிலை சொல்லும் முயற்சி இருந்ததே ஒழிய நிலை நாட்டும் கர்வமில்லை. இது நீடிக்க வேண் டும். நல்ல வாசகர் வளர்ச்சிக்கு இது தேவை. 'வெரைட்டி' என்று சொல்லப்படும் வாழ்க்கை வகைகளை இன்னும் கூட்டலாம். கொஞ்சம் அறிவியல் (போரடிக்காமல்) சிற் பம் சித்திரம் உள்ளிட்ட நுண்கலைகள், அரசியல் தவிர்த்து அன்றாட வாழ்வின் அவசர கதி முதல் விண்வெளியில் ஏகிய துணைக்கோள் வரை! இவை இல்லாமல் போக வில்லை. எனினும் இன்னும் தேவை.

நகைச்சுவை மின்னிழையோடிய சுவையான எழுத் தோட்டம். விமானமும் விமானியும் சூப்பர் ஸ்பீடில். இன்னும் போகலாம். வானமே எல்லை. மீண்டும் வாழ்த்துக்கள்!

— வையவன்



• தி.சு.பால சுப்ரமணியன்



• ராணி குருநாதன்



• விஜயராகவன்



• சௌந்தர்ராஜன்



• சண்முகசுந்தரம்

வாரம், திருமுக தரிசன யோகம்னு புதுப் பஞ்சாங்கத்துல போட்டிருக்கும் பாருங்க.

நான் லெட்டர் அனுப்பியும் சிவர்கிட்டேயிருந்து இன்னும் போட்டோஸ் வரலை. வந்தா, பத்திரமா எடுத்து வெச்சு, அடுத்த வருஷ விழா நேரத்துல வெளியிடப் பார்க்கறேன்.

* * *

## வி.ஐ.பி. வாசகர்கள்

**(புகைப்படங்கள்– முன் பக்கம்)**

***ஈரோடு ராணி குருநாதன்*** : ரெண்டு குழந்தைகளுக்கு அம்மா, வயசு முப்பதுன்னு சொல்லிட்டு, 15 வருஷம் முன்னால எடுத்த போட்டோவை அனுப்பியிருக்காங்க பாருங்க. ரெகுலர் கல்கி ரீடர்ங்கறதுல ரொம்பப் பெருமை ராணிக்கு! நமக்கு அப்பப்ப நல்ல ஜோக்ஸ் அனுப்பற இவர், கருங்கல்பாளையத்துல ஒரு டீவி ஷோரூம் வெச்சி நடத்திட்டு வரார்.

***திருவண்ணாதபுரம் தி.சு.பால சுப்ரமணியன்*** : முப்பத்தஞ்சு வயசு. ரெண்டு ஷார்ட் ஸ்டோரீஸ் எழுதியிருக்கார். ரீஸன்டா கல்யாணம் ஆயிட்டதால இலக்கிய சேவை பண்ண முடியாம நம்ம மன்றத்துல சீரியஸ் உறுப்பினராயிருக்கார். பயங்கர தேசப்பற்று உண்டாம். சரத்குமார் படத்து டயலாக்ஸ் மாதிரி லெட்டர்ல 'அணில் போல, அனுமன் போல'ன்னு என்னென்னவோ எழுதியிருக்கார். முழுக்கப் படிக்க பயம்மா இருந்தது. ஒரு ஜெய்ஹிந்த் சொல்லிடுவோம் எதுக்கும்!

***ஈரோடு சௌந்தர்ராஜன்*** : சக உறுப்பினர் எங்க இருக்கார்னு ஈரோடு ராணி தேடறதுக்குள்ள விஷயத்தை சொல்லிடறேன். சௌந்தர்ராஜன் இங்க, வெஸ்ட் மாம்பலத்துல இருக்கார். என்னோட எழுத்தாற்றல்ல (சே! மேனி சிலிர்க்குதுப்பா!) மனம் பறிகொடுத்து 'சுபிப்ரியன்'னு பேரை மாத்தி வெச்சிட்டிருக்கார். (ஒய்ஃப் மூக்கை நொடிக்கலை, சௌ?) என் புகழை வட நாட்டுல பரப்பறதுக்காகவே மும்பை போயிட்டிருக்கறதா நேர்ல வந்து சொல்லிட்டுப் போனார். இதுல 90 பர்ஸன்ட் மட்டும் கப்ஸா- இருக்கும்னு நினைக்கறேன்.

***சிட்லபாக்கம் சண்முகசுந்தரம்*** : இனிமே பெங்களூர் சண்முகசுந்தரமா ஆகப் போற நம்ம மன்றத்தோட இந்த சீனியர் மோஸ்ட் உறுப்பினர், தபால் துறையிலேருந்து ரிடையர் ஆனவர். அஞ்சல் துறை பத்தி ஹிண்டுல கட்டுரைகளெல்லாம் எழுதியிருக்கார். குங்குமத்துல, 'ஒரு சாமானியனின் மலரும் நினைவுகள்'னு அனுபவக் கட்டுரை. போஸ்ட் கார்டுல கால் சென்டி மீட்டர் மிச்சம் வெக்காம நமக்கு அப்பப்ப ஏதாவது ஜோக்ஸ், துணுக்ஸ், சந்தேகங்கள் எழுதிட்டிருக்கறவர். எழுத்தைப் போலவே இவர் கையெழுத்தும் ரொம்பத் தெளிவா இருக்கும்.

***விஜயராகவன்*** : 'குப்பைக் கூடைக் கவிதைகள்' மூலம் நமக்கு அறிமுகமான இந்த 58 வயசுக்காரர் ஐ.ஏ.எஸ். பாஸ் பண்ணவர். மருத்துவ ரீதில சில பிராப்ளம்ஸ் இருந்ததால கலெக்டரா எங்கேயும் உட்கார முடியாம, ஒரு மல்டி நேஷனல் கம்பெனில ஆபீசரா சேர்ந்து, கோபால் பல்பொடி புழங்கற இடத்துல எல்லாம் (விளம்பரக் குரலை ஞாபகப்படுத்திக் கொள்ளவும்.) பறந்து பறந்து வேலை பார்த்திருக்கார். கார்ட்டூன் போடறார், கவிதை எழுதறார், கணையாழிக்கு லெட்டர் எழுதுவார். ஹ்யூமர்தான் நம்ம விஜி சாரோட ஸ்பெஷாலிடிங்கறது மன்ற உறுப்பினர்களுக்குத் தெரியும் இல்லையா?

***ஹைதராபாத் லாவண்யா*** : இவங்களைப் பத்தி என்ன சொல்றதுன்னே புரியலை! நம்ப column கலகலப்பா இருக்கறதுக்காக, எனக்கு சரிசமமா கான்ட்ரிப்யூட் பண்ற உற்சாகமான வாசகி. கம்ப்யூட்டர் ப்ரியை. கல்கில கூட ரெண்டு கதைகள் வந்திருக்கு. 'மேடம்', 'மாமி', மாஜி உறுப்பினர் – என்னென்ன மாதிரி முடியுமோ கிண்டல் பண்ணியிருக்கேன், தமாஷா. But, எதையும் சீரியஸா எடுத்துக்காம 'அடிப் பாவி சுமி'ன்னு ரொம்ப உரிமையோட பதில் எழுதற ஒரு வாசக 'ஜெம்'. இவங்ககிட்டேயும் போட்டோ கேட்டிருந்தேன். ஆனா என்னை மாதிரியே, நடிகைகள், உலக அழகிகள் பொறாமைப்பட்டு சாபம் குடுக்கப் போறாங்களேன்னு பயந்து போட்டோ வேணாமேன்னு பதில் போட்டிருக்காங்க. ஒரே ஒரு நியூஸ். லாவண்யா இன்னும் மேடம் அல்லது மாமி ஆகலை. கல்யாணத்துக்கே ஒண்ணு ரெண்டு வருஷம் போகுமாம். (இன்வைட் பண்ணுவீங்க இல்லை? அப்ப நேர்ல பார்த்துக்கறேன்)

* * *

ஆண்டு விழாவை முன்னிட்டு

என்னைப் பத்தி ஒரு பயோடேட்டா தயார் பண்ணி அனுப்பியிருக்காங்க ராணி :

| | | |
|---|---|---|
| பெயர் | : | சுபி |
| வயது | : | எப்போதும் பொறாமைப்பட வைக்கும் |
| உயரம் | : | புகழை எட்டும் |
| கல்வி | : | நாலும் தெரிந்தவர். (எந்த நாலு?) |
| தொழில் | : | கல்கியில் 2 பக்கத்தை நிரப்புவது. (கடைசி சொல்லை வன்மையா கண்டிச்சி, ஜொலிக்க வைப்பவர்னு நானே மாத்திடறேன்.) |
| உபதொழில் | : | டு வீலரில் சுற்றுவது. |
| நண்பர்கள் | : | கல்கி வாசகர்கள் |
| எதிரிகள் | : | நிரந்தரமாக – தமிழ்க்குடிமகன்; தாற்காலிகமாக – செந்தூரம் ஜெகதீஷ் |
| பிடித்தது | : | ஊர் வம்பு |
| பிடிக்காதது | : | அரசியல் |
| வெறுப்பது | : | ஞானபீடம், சாகித்ய அகாதமி (யார் சொன்னா?) |
| விரும்புவது | : | பாரத ரத்னா (அப்பபடிப்போடு!) |

* * *

**ந**கைச்சுவைக்கும் சோகத்துக்கும் நடுவுல எத்தனை தூரம் வித்தியாசம் இருக்கும்?

ஒரு மயிரிழைதான்னு நிரூபிக்கறார் பெங்களூர் அ. குமார். அவர் அனுப்பியிருந்த ஒரு தகவல் துணுக்கை இங்கே தரேன் :

மைசூர் நகர போலீஸ் கமிஷனர் கெம்பையா ஒரு புது திட்டத்தைத் தன் டிப்பார்ட்மென்ட்ல செயல்படுத்திட்டு வரார்.

புதுசா பிடிபடற திருடர்களை எல்லா போலீசாரையும் வரிசைல நிக்க வெச்சி அறிமுகப்படுத்தற திட்டம் அது! இதனால என்ன லாபம்னா, பரஸ்பர முக அறிமுகம்.

ரீஸன்டா ஒரு கார் திருடன் அகப்பட, எல்லா போலீஸ் ஆபீசரையும் வரிசைல நிக்க வெச்சு அவனை அறிமுகப்படுத்தியிருக்கார்.

'அணிவகுப்பு' முடிஞ்சதும் அந்தத் திருடன் கமிஷனர் காதுல ஒரு போக்ரன் வெடிச்சிருக்கான்.

''இந்த கார் திருட்டை நானா செய்யலை. வரிசைல இருக்கற அந்த ரெண்டு க்ரைம் பிராஞ்ச் ஆபீசர்கள் வற்புறுத்தின தாலதான் செஞ்சேன். 'பங்கு' அவங்களுக்கும் உண்டு.''

திருடன் அடையாளம் காட்டின அந்த ரெண்டு போலீசாரும் இப்ப விஷயத்தை ஒப்புக்கிட்டதால, விசாரணை நடந்துட்டிருக்குதாம்!



**''பையனைக் கண்டிச்சு வைங்க; 'செருப்பு'னு எழுதச் சொன்னா அப்படி எழுத மாட்டேங்கறான்!''**

**''பிறகு எப்படி எழுதுவானாம்?''**

**''ஜெ'ருப்பு'ன்னுதான் எழுதுவேன்னு அடம்புடிக்கிறான்!''**

**– கோமாகுடி இராசரத்தினம்**

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

* * *

## ஒரு ஜோக் :

**ட்**ரெயின்ல ஒருத்தன் தன் ஃப்ரெண்ட்ஸ்கிட்ட ஒரு சர்தார்ஜி ஜோக் சொல்லிட்டிருந்தான். எல்லாரும் 'ஓ'ன்னு சிரிக்க, பக்கத்து மறைப்புலேருந்து ஒரு சர்தார்ஜி கோபமா எழுந்து வந்து, முஷ்டியை மடக்கிட்டு, ''எங்க அந்த ஜோக்கை இன்னொரு தடவை சொல்லு பார்க்கலாம்!''னு முறைச்சாரு.

அதுக்கு அவன் சொன்னான் : ''நான் சொல்ல மாட்டேன். சொன்னா அதுல என்ன ஹ்யூமர் இருக்குன்னு உனக்கு ஆறேழு தடவை விளக்கிச் சொல்லணும். அந்தளவுக்கு எனக்குப் பொறுமை இல்லை!''

அவன், தன் தோல்வியை ஒத்துக்கிட்டதா நினைச்சு, அந்த சர்தார்ஜி திரும்பிப் போயிட்டார்!

(சண்முகசுந்தரம் சார், சர்தார்ஜிக்களோட சாபம் நம்மை சும்மா விடும்னு நினைக்கறீங்களா?)

**— சுபி**



# கோபத்தில் கோஃபி அனனுக்குக் கடிதம்!

'சம்மருக்கு பெங்களூர் - மைசூர் போகலாம் என்று குடும்பத்துடன் கிளம்புவோர் நிற்க! பெங்களூர் பூங்காக்களில் சினிமா காதலர்களைத் தோற்கடிக்கும் நிஜ காதலர்களின் லீலைகள்தான் பகலமையையும் விஞ்சி நிற்கின்றன. இந்த விஷயத்தில் பெங்களூர்வாசிகள் தாராளமயமாக்கல் கொள்கையின் முதல் ஆதரவாளர்கள்! கப்பன் பார்க்குக்குப் போன பிறகு உங்கள் குழந்தைகளிடம் 'கண்ணை மூடு!' என்று சொல்லிக் கொண்டிருக்க முடியாது.

காதலர்களைக் கண்டு வெட்கப்பட என்ன இருக்கிறது என்போர்கூட, ராகுல் திராவிட் வீட்டில் கல் விட்டெறியப்பட்டதை அறிந்து வெட்கப்படத்தான் வேண்டும். பெப்ஸி கோப்பையில் தோற்ற கோபத்தில் ரசிகர்கள் செய்த அக்கிரமம் அது!

இதனாலெல்லாம் மனம் தளர்ந்துவிடவில்லை கர்நாடகா கிரிக்கெட்டர்கள். ஸ்ரீநாத் - கும்ளே ஜோடி ஸ்டம்ப் விஷன் என்ற ஸாஃப்ட்வேர் நிறுவனத்துக்கு விஷய தானம் செய்து வருகிறார்கள். இவர்கள் உருவாக்கியுள்ள வெப்சைட் www.goworldcup99.com. மே 14 முதல் ஜூன் 20 வரை நடக்கவிருக்கும் உலகக் கோப்பை பந்தயங்களுக்கான சிறப்பு இணையம் இது. துவக்க விழாவில் தலைமை விருந்தினர் ஸ்ரீநாத். (இவர் பெங்களூர் ஜெயநகரிலுள்ள ஆப்டெக்கின் இயக்குனர்) கிரிக்கெட் வீரர்கள் ரொம்ப 'ஹைடெக்' ஆகி விட்டார்கள்!

சட்டசபையும் ஒரு விளையாட்டு அரங்கமாகி வருவதைப் பார்க்கிறோம். பெரும்பாலும் குத்துச்சண்டை மேடை! தமது கர்நாடக சட்டசபை உறுப்பினர்கள் பள்ளிச் சிறுவர்களைக் காட்டிலும் கேவலமாக நடந்து கொள்வதாக வருத்தப்பட்டுள்ளார் சபாநாயகர் ரமேஷ் குமார். 'பேட்டா வாங்குவதில்தான் குறியாயிருக்கிறார்கள்!' என்று அவர் குற்றம் சாட்ட, உறுப்பினர்கள் அவர் பேரில் 'ஒழுங்கு நடவடிக்கை எடுக்காத குறைதான்! ஒருவாறு மன்னிப்புக் கேட்க வைத்துவிட்டார்கள், அவரை!

கோலாரில் ஒரு 'தங்கமான' மனிதர்! தமது கார்மென்ட் தொழிற்சாலைக்கருகே இருந்த மதுக்கடையை இடம் மாற்றும்படி அரசிடம் கேட்டுக் கேட்டுப் பார்த்து சலித்தார். வேறு வழியின்றி 'எத்தைத் தின்றால் பித்தம் தெளியுமோ?' என்று கோஃபி அனனுக்கு இது குறித்து ஒரு பெட்டிஷன் போட்டார்! ஆமாம்! ஜநாவின் பொதுச் செயலாளர் கோஃபி அனனேதான்! 'அனன் என்ன இவருக்கு அண்ணனா!' என்று சிரிக்காதீர்கள். பாவம்! மனிதர் பரிதாபத்துக்குரியவர். 'அவ்விடத்துக்கு நீர் எப்படி எழுதலாச்சு?' என்று உள்ளூர்க் குட்டித் தலைவர்கள் அவரை உலுக்கிப் பிழிந்து விட்டார்கள்!

— மஞ்சுளா ராமகிருஷ்ணன்

பெங்களூர்ச் செய்திகள்

## முடக்கம்!

"ராணே மாநில முதல்வர் என்றால் என்ன? நான் மாநகர (மும்பை) முதல்வராக் கும்" என்று மார்தட்டிய மவுசென்ன? "ஒரு ஹெலிகாப்டரிருந்தால் என் பணிகளைச் செய் வது சுலபமாயிருக்குமே?" என்று அலட்டிக் கொண்ட அலட்டலென்ன?.. எல்லாம் போய் இன்று மூலையில் முடங்கிக் கிடக்கிறார் மேயர் நந்துசதம்; அவருடன் அவரது MIC (மேயர் இன் கவுன்சில்) திட்டமும் சுருண்டு விட்டது. முன்னாள் முதல்வர் ஜோஷியின் செல்லக் குழந்தையான இத்திட்டத்தை இந்நாள் முதல் வர் ஓரங்கட்டி விட்டார். ஹூம்! அர்த்த ராத் திரியில் குடை பிடிப்பவர்களின் நிலை எல் லாம் இப்படித்தான்; வெயிலடிக்கும் போது ஒதுங்க நிழல்கூட இல்லாமல் தத்தளிக்க வேண்டி வருகிறது!

## லேடஸ்ட்!

டோனி அகர்வாலைத் தெரியாது? சென்ற தேர்தலின்போது காங்கிரஸ் தரப்பில் வீடு வீடாக ஏறி, பவ்யமாகக் கும்பிடு போட்டு, தன் 'சேவை'களைப் பறைசாற்றும் புகைப்படங் கள் அடங்கிய தடித்த ஆல்பம் ஒன்றை எல் லோருக்கும் கொடுத்தாரே, அவரேதான்! சேவை லிஸ்ட்டில் லேடஸ்ட் சேர்க்கை - சில தலித்துகளிடம் தலா நூறு ரூபாய் கொடுத்து, பிஸினஸ் எதிரியான நிதின் தேசாயின் கடையை உடைத்து, கம்ப்யூட்டர், ஏ.ஸி. வகை யறாக்களை திருடச் சொன்னது! அவர்களும் சிரமேற்கொண்டு இந்தக் கட்டளையை நிறை வேற்றுகையில், போலீஸ் வந்துவிட, ஓட்ட மெடுத்த தலித்துகளில் சிலர் ஒரு கிணற்றில் தடுக்கி விழ, 5 பேர் அவுட்! டோனி தலை மறைவாக, நிகழ்ச்சி அரங்கேறிய முலுண்டு, நிமிட நேரத்தில் போர்க்களமா னது! தலித்துகள் திரண்டு டோனி யின் வீடு, கடை முதலானவற்றை உடைக்க, வீதியெல்லாம் ஒரே ரகளை. வெயிலும் ஃபெயிலான பட்சத்தில், சில நாள் ஒளிந்து கொண்டிருந்தபின் டோனி தானாக சரண்டர் ஆகியுள்ளான். காங்கிரஸ் தன் கட்சியிலிருந்து டோனியை உடனடியாக நீக்கிவிட்டது; ஹூம்... வருகின்ற தேர்தலில், ஆல்பத்தில் இடம் பெற இன்னும் எத் தனையோ படங்கள் கிடைத்திருக்கும்... அதற்கு வழியில்லாமல் செய்து விட்டார்களே!

## சொந்தத் திருட்டு!

'கார் திருட்டில் ஈடுபட்டும், பிடிபடாமல் இருக்க மும்பைக்காரர்கள் இதோ ஒரு நவீன யுக்தியைக் கண்டு பிடித்துள்ளனர் பாருங்கள் - ஏதாவது ஒரு பாங்கில் லோன் போட்டு ஒரு மாருதி 800, அல்லது ஜென்னை வாங்கி, மும் பையில் ரெஜிஸ்தர் செய்து கொள்ள வேண் டும்; பிறகு 'லாங் ட்ரைவ்' போகிறேன் பேர்வழி என்று குஜராத்துக்கோ மத்தியப் பிரதேசத் துக்கோ நழுவி, அங்கே போலி தஸ்தாவேஜு களைத் தயாரித்து, புதிய நம்பர் ப்ளேட்டை செருகி, அந்த ஊரில் ரிஜிஸ்தரும் செய்து, அதே ஊர்க்காரருக்கு விற்றுவிட வேண்டும்; அடுத்து, மும்பை திரும்பி, ஒரிஜினல் காரைக் காணோம் என லபோ திபோவென்று அடித்துக் கொண்டு, போலீசாரைப் பைத்தியமாக்க வேண்டும்; அவர்கள் காரைத் தேடி அலையோ அலை என்று அலைகையில், இங்கே இன்ஷ்யூரன்ஸ் க்ளெய்ம் செய்து, பாங்க் லோனை அடைத்து, நல்ல பெயரெடுக்க வேண்டும். காரை விற்ற பணத்தை வேறு பாங்க்கில் சந்தோஷமாக 'டிபாஸிட்' செய்ய வேண்டும்! எப்படி ஐடியா? இதில் இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டுகளுக்கும் 'கட் டிங்' உண்டாம்! ஆமாம்... தன் குழந்தையை தானே விற்கலாம்; தன் காரைத்தானே திருடக் கூடாதாக்கும்!

## ரயி'லடி'யில்...

23 வயது ஜெயபாலா அஷர், ஒரு 70

## தெய்வத்தாய்

ரூபாய்க்காக இரண்டு கால்களையுமே இழந்த கதை மும்பையின் ரயில் சரித்திரத்தையே கலக்கியதை மக்கள் இன்னும் மறந்தபாடில்லை; அதற்குள் 20 வயது அர்ச்சனா ஜெய்வந்த்தை ஒரு படுபாவி ட்ரெயினிலிருந்து பிடித்துத் தள்ளியிருக்கிறான். இந்தப் பெண்ணும் லேடீஸ் கம்பார்ட்மெண்டில் தனியாக இருந்திருக்கி றாள். சம்பவம், ஞாயிறு காலை 8 மணி அளவில் சர்ச்கேட் - மரீன் லைன்ஸ் ஸ்டேஷ னுக்கு இடையே நடந்திருக்கிறது. இவனும் 'ட்ரக் அடிக்ட்' தானாம்! அர்ச்சனாவை எது வுமே கேட்காமல், பிடித்துத் தள்ளிவிட்டா னாம். சாதாரண காயங்களுடன் தெய்வாதீன மாக அர்ச்சனா தப்பிவிட்டாள். முன்பு, '70ரூ.

மும்பை மசாலா



# ஷபானா!

தானே? கொடுத்துத் தொலைக்காமல் இப்படியா ஒரு பெண் போராடும்?' என்று அங்கலாய்த்த போலீசார், இப்போது, 'ஒரு பெண் தன்னந்தனியாக லேடீஸ் கம்பார்ட் மெண்டில் பயணிக்க வேண்டுமா? பக்கத்திலுள்ள பொது கம்பார்ட்மெண்டில் வந்திருக்கக் கூடாதா?' என்கிறார்கள். ஒரு துப்பாக்கி ஏந்திய காவல்துறைக்காரர் பாதுகாப்பாய் வர வேண்டுமென்ற சட்டமெல்லாம் காற்றோடு போய் விட்டது போலும்! ப்ளாட்பாரத்தில் பேட்ரோல் செய்ய வேண்டிய போலீசாரே அடிக்கடி காற்று வாங்கப் போய்விடுகிறார்களே?

## தெய்வத்தாய்!

**வே**று யாருமில்லை... (அம்மா... பாவம்!); நம்ம ஷபானா ஆஸ்மியின் புது அவதாரம்தான்! அவரது ''காட் மதர்''தான் தற்போதைய ஹிட் லிஸ்'டில் டாப்! இவர் ஏற்று ள் ரீல்-லைஃப் பாத்திரம், தன் ரியல் லைஃப்பை ஒத்திருப்பதாய் ராஜ்கோட் கோர்ட்டில் வழக்கு தொடுத்திருக்கிறார் சந்தோக் பெஹன் ஜடேஜா – (சீச்சி... நம்ம ஜடேஜா தங்கையெல்லாமில்லை) – குஜராத்தின் பிரபல பெண் கேடி! தீர்ப்பு சந்தோக்கிற்கு சாதகமாகிவிட, இப்போது அகமதாபாத் ஹைகோர்ட்டுக்கு அப்பீல் செய்திருக்கிறார்கள். படத்தில் பிரச்னைக்குரியவை இரண்டு ஸீன்கள்; முதலாவது, ஷபானா குடித்துவிட்டு கும்மாளமிடும் காட்சி; இரண்டாவது, ஷபானா சிகரெட் பிடிக்கும் காட்சி; ஹைதராபாத் ஃபிலிம் ஃபெஸ்டிவலில், இந்தப் படம், "நேஷனல் இண்டக்ரேஷன்", "உமன்ஸ் இஷ்யூ" முதலியவற்றை பிரதிபலிப்பதாய் பாராட்டுப் பெற்றதாம்! ஹூம்... காட் மதரைக் காப்பாற்ற எந்த காட் ஃபாதர் வர வேண்டுமோ?

## ஓம் சாந்தி!

**ஏ**தைச் செய்தால் பித்தம் தெளியும் என்ற நிலையில்தான் இன்று பல மும்பைக்காரர்கள் இருக்கிறார்கள். 'ரேக்கி', 'வாஸ்து', 'அரோமா', 'மஷ்ரூம்' தெரபிகள் என்று அலைந்து ஓய்ந்தவர்களுக்கு இப்போது புதுசாக ஒரு 'தெரபி' மாட்டியிருக்கிறது – "ஆரா (ஒளி) கிரிஸ்டல்" தெரபி! சும்மா ஒரு ஐந்து நிமிடத்திற்கு இதைக் கையில் ஏந்திக் கொண்டு நின்றால் போதுமாம்; இந்தக் கிரிஸ்டலின் மகிமை 45 நாட்களுக்குள் தெரிந்து விடுமாம்; அப்படியே ஆளை அடியோடு மாற்றி, மனசாந்தியை அளித்து விடுமாம்! இப்போது இந்தக் கிரிஸ்டலைப் பெறுவதற்கு நான் முந்தி நீ முந்தி என்ற அடிதடியில் பாதிப் பேருக்கு சாந்தி பறிபோயிருக்கிறதாம்!

— **ஜெயஸ்ரீ ராஜ்**

அமெரிக்காவில் இருக்கும் என் சகோதரி இங்கே வந்திருந்த சமயம், சில வைணவத் தலங்களுக்குச் சென்று தரிசனம் செய்ய விரும்பினாள். நானும், அவளுடன் சென்றேன். பழம் பெருமை வாய்ந்த அந்தக் கோவில்கள் எல்லாமே சிதிலமடைந்திருந்தது கண்டு எங்களுக்கு ரொம்பவும் மனக் கஷ்டமாக இருந்தது. பல தலைமுறைகளுக்கு முன்னே, தொழில் நுட்பங்கள் இந்த அளவுக்கு முன்னேற்றம் அடையாத கால கட்டத்தில் கட்டப்பட்ட அந்தக் கோவில் களையெல்லாம், இந்தத் தலைமுறையில் நாம் உரிய முறையில் பாதுகாக்காமல் இருக் கிறோமே என்று வருத் தம் ஏற்பட்டது.

அதிலும் திருக் கோட்டியூரில் உள்ள கோவிலுக்குப் போன போது நான் அதிர்ச் சியில் ஆடிப் போய் விட் டேன். மகான் ராமானு ஜர், இந்த உலகினருக்கு திருமந்திரத்தை வழங்கிய பெருமைக்குரிய தலம் அது. ஆனால் அந்தக் கோவில் மிகவும் பாழ டைந்த நிலையில் காணப் பட்டது. அந்தக் கோவில் சம்பந்தப்பட்டவர்களுடன் பேசியபோது, கோவிலுக்குப் போதிய வருமானமில்லை. தினப்படி பூஜைகளுக்கே திண்டாடும் நிலையில், கோவிலைப் புனருத் தாரணம் செய்வது எப்படியம்மா சாத்திய மாகும்? என்று கேட்டார்கள். அவர்கள் தரப்பிலும் நியாயம் இருப்பதை நான் உணர்ந்தேன். ''நான் நன்கொடைக்கு

## திருமதி ஒய்.ஜி.பி

ஏற்பாடு செய்கிறேன்" என்று சொல்லிவிட்டு சென்னைக்குத் திரும்பினேன்.

காஞ்சிபுரம் சென்று, ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளைச் சந்தித்து, திருக் கோட்டியூர் கோவிலின் சிதிலமான நிலைமையை எடுத்துச் சொல்லி, அதனை சீரமைக்க வேண்டியதன் அவசியத்தை எடுத்துச் சொன்னேன். நிச்சயம் நாம் இதற்கு ஏதாவது செய்ய வேண்டும் என்று கூறிய அவர், உடனே கிருஷ்ண ப்ரேமி சுவாமிகள், வேளுக்குடி கிருஷ்ணன் போன்றவர்களைக் கொண்ட டிரஸ்ட் ஒன்றை அமைத்து, நன்கொடை திரட்டி, திருக்கோட்டியூர் கோவிலை புனருத்தாரணம் செய்ய ஏற்பாடு செய்தார்.

ஜெயேந்திரரின் ஆசிகளுடன் ஆரம்பிக் கப்பட்ட அந்த டிரஸ்ட், பல ஆன்மீக அன்பர்களிடமும் நன்கொடை திரட்டி, கோவிலைப் புதுப்பித்து, தினசரி பூஜை செய்வதற்கும் உதவியது. அந்த



படம்: ஸ்ரீஹரி

உதவி இன்றும் தொடர்கிறது. பாரம்பரியம் மிக்க ஒரு கோவில் புதுப்பிக்கப்பட்டு, தினசரி பூஜைகள் நடைபெறுவதற்கு, ராமனுக்கு உதவிய அணில் போல நானும் இருந்தேன் என்பதில் எனக்கு ஆத்ம திருப்தி.

இப்படி ஏற்பட்ட ஆர்வம்தான், சென்னைப் பல்கலைக் கழகத்தின் வைண வத் துறையில் ஒரு வருட சர்டிபிகேட் படிப்பில் என்னை சேரத் தூண்டியது. ஒரு வருடப் படிப்பு முடிந்தபோது இன்னும் தொடர்ந்து படிக்க விரும்பினேன். அடுத்து டிப்ளமா இன் வைஷ்ணவிசம் படிப்பில் சேர்ந்து படித்தேன். இதற்கும் ஒய்.ஜி.பி கொடுத்த ஊக்கம் அளவில்லாதது.

டிப்ளமா படிப்பு முடிந்து பரீட்சை யின்போதுதான், ஒய்.ஜி.பிக்கு உடல் நலம் குன்றியது. படுத்த படுக்கையானார். அவரை கவனித்துக் கொண்டே நான் பரீட்சைக்குத் தயார் செய்து கொண்டேன். மைசூரில் பி.எட் படிக்கிறபோது ஹாஸ்டலில்

தலையில் எண்ணெய் வைத்துக்கொண்டு இரவில் கண் விழித்துப் படித்த நாட்கள் என் நினைவுக்கு வந்தன.

நான் கடைசிநாள் பரீட்சைக்குப் புறப் பட்டபோது அவரிடம் போய் சில நிமிடங்கள் நின்று, பரீட்சைக்குப் புறப்படுகிறேன் என்று சொன்னேன். அவரால் பேசக்கூட முடியாத நிலைமை. கைகளை லேசாய் அசைத்து, 'ஆல் தி பெஸ்ட்' சொன்னார். நன்றாக பரீட்சை எழுதிவிட்டு வந்தேன். மறுநாள் அவர் மறைந்தார்.

அப்புறம் படித்துக் கொள்ளலாம். இன்னும் ஒரு மாசம் இருக்கிறதே, இன்னும் இரண்டு மாசம் இருக்கிறதே என்று ஆரம்பத்தில் சும்மா இருந்துவிட்டு பரீட்சை நெருங்கும் சமயத்தில் முட்டிக் கொள்ளும் மாணவர்களுக்கு என்னுடைய இந்த அனுபவத்தைத்தான் நான் எடுத்துச் சொல்வது வழக்கம். பரீட்சை சமயத்தில் எத்தகைய சோதனையும் எழக்கூடும். தயார் நிலையில் இருந்தால் எதையும் சமாளிக் கலாம்.

**மா**ணவர்கள் மத்தியில், அடுத்தவர் களுக்கு உதவ வேண்டும் என்ற எண் ணத்தை ஏற்படுத்துவது முக்கியம். Each one; Teach one என்று ஒரு இட்டத்தை எங்கள் பள்ளி யில் அமல்படுத் தினோம். அந்த திட்டத்தின்கீழ், கார்ப்பரேஷன் பள்ளிக் கூடங்களில் படிக்கிற மாணவர்கள், தங்கள் பள்ளிக்கூட நேரம் முடிந்த பிறகு, எங்கள் பள்ளிக்கூடத்துக்கு வருவார்கள். எங்கள் மாணவர்கள் வகுப்பு நேரம் முடிந்தபின் பள்ளிக்கூடத்திலேயே தங்கியிருந்து, அவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுப் பார்கள்.

எங்கள் பள்ளிக்கூட மாணவர்கள் ஆங்கில மீடியத்தில் படிப்பவர்கள் கார்ப்பரேஷன் பள்ளிக்கூடங்களில் தமிழ் மீடியம். எனவே, அவர்களுக்கு ஆங்கிலம், கணிதம் இரண்டு பாடங்களை மட்டும் சொல்லித் தருவார்கள்.

அப்படி ஆங்கிலப் பாடம் நடத்திய போது தனது மாணவன் ஒருவன் புத்தகத்தைப் பார்த்துப் படிக்கவே மிகவும் சிரமப்படுவதை கவனித்திருக்கிறான் எங்கள் பள்ளி 'மாணவ – ஆசிரியன்'. முதலில், ஆங்கிலம் என்பதால் படிப்பதற்கு சிரமப் படுவதாய் நினைத்து விட்டான். நாளடைவில், அவன் சிரமப்படுவது ஆங்கிலம் படிக்க அல்ல; படிப்பதற்கே என்று புரிந்திருக்கிறது. ஆமாம்! அந்த மாணவனுக்கு மயோபியா காரணமாய், பார்வை பாதிக்கப்பட்டிருந்தது.

எங்கள் பள்ளிக்கூட மாணவனின் அப்பா ஒரு கண் டாக்டர். அந்தப் பையனை, தன் அப்பாவிடம் அழைத்துக் கொண்டு போய்க் காட்டினான். கண்களைப் பரிசோதித்த டாக்டர் அவனுக்குக் கண் ணாடி அணிய ஆலோசனை வழங்கி யதுடன் இல்லாமல், கண்ணாடி வாங்கியும் கொடுத்தார். அந்தப் பையனை ரெகுலராக வைட்டமின் மாத்திரைகளை சாப்பிடச் சொன்னார்.

இந்த விஷயம், மற்ற மாணவர்களுக்குத் தெரிந்தபோது அவர்களும், இந்த மாண வனுக்கு உதவ விருப்பம் தெரிவித்தார்கள். எல்லாருமாகச் சேர்ந்து, ஆளுக் குக் கொஞ்சம் பணம் போட்டு, வைட் டமின் மாத்திரைகளை வாங்கிக் கொடுத் தார்கள்.

பார்வை பாதிப்புக்குள்ளான மாணவன், நல்ல மார்க்குடன் படித்து முடித்து வேலை யில் சேர்ந்து விட்டான். அவனுக்கு உதவிய மாணவனும், மருத்துவம் படித்து, இன்று திறமையான கண் டாக்டராக விளங்கு கிறான்.

## "ஆண்கள் பள்ளிக்குப் பெண் முதல்வரா?"

பத்மாசேஷாத்ரி, பையன்கள் படிக்கிற பள்ளிக்கூடம். எனவே, ஒரு பெண்மணி அந்தப் பள்ளிக்கூடத்தின் பிரின்ஸ்பாலாக இருக்க முடியாது என்று ஆட்சேபணை எழுப்பினார் பள்ளிக் கல்வி இயக்குனர் நெது. சுந்தரவடிவேலு.

இத்தகைய ஆட்சேபணையைக் கண்டு முதலில் கொஞ்சம் அதிர்ச்சியடைந்தோம். அதன்பின் இது போன்ற நியாயமில்லாத ஒரு ஆட்சேபணையைக் கண்டு கோபம் வந்தது. ஆனாலும், ஆத்திரப்பட்டு எந்தவித பயனுமில்லையே! பிரச்னையை ஆழ சிந்தித்து, முடிவு காண வேண்டியதுதானே சரியான அணுகுமுறை.



''சகோதரத்துவத்தை உலகத்தை விட்டே ஒழிச்சுக் கட்டணும்!''

''ஏண்டா இவ்வளவு ஆத்திரம்?''

''நான் தீவிரமா காதலிச்ச கல்பனா என்னை அண்ணான்னு கூப்பிட்டுட்டா!''

— உ. ராஜாஜி

தாற்காலிக ஏற்பாடாக சாம்பன் என்பவரை முதல்வராக்குவது என்று முடிவு எடுத்தோம். சாம்பனும் பள்ளிக்கூடத்திற்கு ஏற்பட்ட இக்கட்டான சூழ்நிலையைப் புரிந்துகொண்டு, பிரின்ஸ்பால் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். இந்த இடைப்பட்ட காலத்தில்தான் நான் மைசூரில் பி.எட். படித்தது. அவருக்குப் பின், பெரிய திருவடி என்பவர் பிரின்ஸ்பால் ஆனார்.

காஷ்மீரில் அகில இந்தியப் பெண்கள் கருத்தரங்கம் ஒன்று நடைபெறவிருந்தது. பெண்களுக்கு உதவும் தொண்டு நிறுவனங்களுடனும் எனக்குத் தொடர்பு இருந்தது. எனவே, அந்தப் பெண்கள் கருத்தரங்கில் கலந்து கொள்ளும்படி எனக்கு அழைப்பு வந்தது. அதில் இந்திராகாந்தி கலந்து கொண்டார்.

அகில இந்திய அளவில் ஏற்பாடு செய்து நடத்தப்பட்ட பெண்கள் கருத்தரங்கு.

பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதிகள் பற்றிப் பலரும் பேசினார்கள். என் முறை வந்தபோது, என் பிரச்னை பற்றிப் பேசினேன்.

'ஒரு பெண்கள் கல்லூரிக்கு, ஆணை பிரின்ஸ்பாலாகப் போடுகிறார்கள். இது அரசாங்கக் கல்லூரிகளிலும், தனியார் கல்லூரிகளிலும் நடைமுறையில் உள்ளது. ஆனால், மாணவர்களுக்கான பள்ளியில் ஒரு பெண், பிரின்ஸ்பாலாக இருப்பது எந்த விதத்தில் தவறு? எங்கள் பள்ளிக்கூடம் ஆரம்பிக்கப்பட்டதிலிருந்து ஓரிருவர் தவிர மற்றவர்கள் ஆசிரியைகள்தான். அப்படி இருக்கிறபோது, ஆண்கள் பள்ளியில், பெண் மணி ஒருவர் பிரின்ஸ்பால் பொறுப்பில் பணி புரியக்கூடாது என்பதில் என்ன நியாயம்' என்று பேசினேன்.

என் தரப்பின் நியாயத்தை அங்கே அனைவரும் ஏற்றுக் கொண்டார்கள். மாநாடு சார்பாக, பள்ளிக் கல்வி இயக்குனரின் ஆட்சேபணைக்கு கடுமையான எதிர்ப்பு தெரிவித்து, சென்னை பல்கலைக் கழகத்தின் துணைவேந்தருக்கு கடிதம் எழுதப்பட்டது.

நான் சென்னை திரும்பிய பிறகு, இந்திய பெண்கள் சங்கம் என்ற அமைப்புடன் தொடர்பு கொண்டேன். திருமதி விசாலாட்சி நெடுஞ்செழியன்தான் அந்த அமைப்பின் தலைவர். அவரிடம் மொத்த விவரங்களையும் சொன்னபோது அவரும் சென்னை பல்கலைக் கழகத்துக்குக் கடிதம் எழுதி, இந்தத் தவறான அணுகுமுறைக்கு ஆட்சேபம் தெரிவித்தார்.

ஒருவழியாக, பிரச்னை தீர்ந்தது. நான் பிரின்ஸ்பாலாக பொறுப்பு ஏற்றுக் கொண்டேன். இப்படி ஒரு போராட்டத்துக்குப் பின், பிரின்ஸ்பால் நாற்காலியில் நான் உட்கார்ந்தபோது, பெண் என்பதற்காக எழுப்பப்பட்ட ஆட்சேபணையைக் கண்டு மனம் துவண்டு போய் விடாமல், அதை எதிர்த்துப் போராடி, வெற்றி பெற்ற திருப்தி என் மனதில் நிறைந்திருந்தது. இது திருமதி ஒய்.ஜி.பி என்ற தனி நபரின் வெற்றியில்லை; பெண் குலத்துக்குகே கிடைத்த அங்கீகாரம் என்றுதான் நினைத்தேன்.

(அடுத்த வாரம்)

## யுகோஸ்லாவியா :

# அகதிகள் பூமி!








போஸ்னியா, செர்பியா, ஸ்லோவேனியா, மான்டெனெக்ரோ, மாஸிடோனியா, க்ரோவேஷியா ஆகிய நாடுகள் இணைந்து 'யுகோஸ்லாவியா' என்ற புது நாடாக 1929ல் உருவாக்கப்பட்டதுதான் இப்போதைய சிக்கல்களின் தொடக்கம்!

இப்படி இணைக்கப்பட்டவை சிநேக நாடுகள் அல்ல. அதுவும் செர்பியாவும், க்ரோவேஷியாவும் எதிரெதிர் துருவங்களாகவே விளங்கியவை.

இரண்டாம் உலகப் போரின் போது ஜெர்மனி யுகோஸ்லாவியாவை ஆக்கிரமிக்க, அது கம்யூனிஸ்டுகள் வசப்பட்டது. 1990ல் கம்யூனிஸ்டுகளின் பிடி தளர, அதைத் தொடர்ந்து யுகோஸ்லாவியா பிளந்தது. க்ரோவேஷியாவும், ஸ்லோவேனியாவும் தங்களைச் சுதந்தர நாடுகளாக அறிவித்துக் கொண்டன. போஸ்னியா, செர்பியா பிரிவில்தான் ஏகப்பட்ட சிக்கல். காரணம் இரு நாடுகளிலும் கலந்திருக்கும் முஸ்லிம்கள், செர்புகள், க்ரோட்டுகள் ஆகிய பிரிவினரின் தனித்தனி தேவைகள் 'இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு நடக்கும் மிக மோசமான இனப் போராட்டம்' என்று போஸ்னியா கலவரங்கள் வர்ணிக்கப்பட்டன.

ஒருவழியாக செர்பியா பிரிந்தது. இப்போது அதன் தெற்குப் பகுதியிலிருக்கும் கொசோவாவுக்கும் அதற்கும் தீவிர சண்டை.

1974லிருந்தே கொசோவா தன்னாட்சி பெற்று விளங்கியது. யுகோஸ்லாவியா (அதா

வது முந்தைய செர்பியா)வில் அடங்கியது என்றாலும் பல சுதந்தரங்கள் கொசோவா வுக்கு உண்டு. ஆனால் 1989ல் இந்தத் தன்னாட்சி உரிமைகள் பறிக்கப்பட்டு யுகோஸ்லாவிய அரசு அதன் மீது நேரடி அதிகாரத்தைச் செலுத்தத் தொடங்கியது. இதற்கான பின்னணியைத் தெரிந்து கொள்வது அவசியம்.

யுகோஸ்லாவியாவில் முக்கியமாக மூன்று இனத்தினர் உண்டு. செர்புகள் (முன்பு ஸ்லாவ் என்றிருந்த இனத்திலிருந்து அப்படியே மாறியவர்கள்), முஸ்லீம்கள், குரோட்டுகள் (கத்தோலிக்க இனத்தைச் சேர்ந்தவர்கள்). இவர்களுக்கிடையே உள்ள பகைமை மிகத் தீவிரமானது.

அரசில் அதிகம் பங்கு வகிக்கும் செர்புகள், கொசோவாவை தங்கள் இனத்தின் பெருமை மிகுந்த பகுதி என்று எண்ணுகிறார்கள். காரணம், அந்தப் பகுதியில் செர்பியர்களின் பண்டைய கலாசாரச் சின்னங்கள் நிறைய உண்டு. ஆனால் ஏற்கெனவே அதிக அளவு முஸ்லீம்கள் வசிக்கும் கொசோவாவில் அல்பேனியா, மாசிடோனியா ஆகிய நாடுகளிலிருந்தும் அகதிகளாக முஸ்லீம்கள் வந்து குவிய, செர்புகளுக்குப் பதற்றம். தங்களின் நாகரிகச் சின்னங்கள், அவர்களால் அழிந்து போய்விடுமோ என்கிற சந்தேகம்.

இதன் காரணமாக "முஸ்லிம்களை கொசோவா பகுதியிலிருந்து வெளியேற்றுவதே எங்கள் திட்டம். வேண்டுமானால் அவர்கள் அல்பேனியாவுக்கே திரும்பிப் போகட்டும்" என்பது யுகோஸ்லாவியாவின் நிலை. பல மனித உரிமை மீறல்கள் நடக்க, கொசோவா ரணகளமானது.

இந்த நிலையில் தன்னை உலக ரட்சகனாகக் கருதிக் கொண்டிருக்கும் அமெரிக்கா களத்தில் இறங்கி விட்டது. 'நாடோ' அணி நாடுகளோடு இணைந்து கொண்டு யுகோஸ்லாவியா மீது குண்டு மழை பொழிந்தது. 'மனித உரிமை மீறப்பட்டது' என்ற காரணத்துக்காக நடத்தப்பட்ட இந்தத் தாக்குதலில் ராணுவ இடங்கள் தவிர பொது மக்கள் வாழும் இடங்களும் பாதிக்கப்பட்டு கொத்தாக அப்பாவிகள் மடிந்தது வேதனை.

யுகோஸ்லாவியாவின் ராணுவ அதிபர் மிலோசெவிக் சென்ற மாதம் கையெழுத்திட ஒப்புக் கொண்ட ஒப்பந்தமொன்றிலிருந்து கடைசி நிமிடம் பின் வாங்கியதும் நிலைமையை மோசமாக்கியது. இந்த ஒப்பந்தப்படி கொசோவாவுக்கு மீண்டும் தன்னாட்சி உரிமை வழங்கப்பட்டிருக்க வேண்டும். இந்தக் காலகட்டத்தில் 'நாடோ'வின் ராணுவம் யுகோஸ்லாவியா எல்லைக்கருகே நிறுத்தி வைக்கப்படும் என்ற யோசனைக்கு மிலோசெவிக் ஆட்சேபித்ததும் அமெரிக்காவின் ஆத்திரத்திற்கு ஒரு முக்கியக் காரணம்.

ஒரு வழியாக சமாதானத்திற்கான சூழல் தொடங்கியிருக்கிறது. அமெரிக்கா, ரஷ்யா, யுகோஸ்லாவியா ஆகியவற்றின் பிரதிநிதிகள் பேச்சுவார்த்தைகளைத் தொடங்கியிருக்கிறார்கள். ஆனாலும் மாசிடோனியா மற்றும் அல்பேனிய எல்லைகளை யுகோஸ்லாவியா அடைத்து விட்டது. மறுபுறம் (இவ்வளவு களேபரத்திற்குப் பிறகும்) காத்திருக்கும் அகதிகளை மீண்டும் அவர்கள் நாட்டுக்கே திரும்பிப் போகச் சொல்லியிருக்கிறது.

— ஜி.எஸ்.எஸ்.

படங்கள் நன்றி : நியூஸ்வீக்

**"ஹீரோயின் சாப்பிட வாங்கன்னு கூப்பிடுது. அண்ணன் அரை மணி நேரம் யோசனை பண்ணிட்டு அப்புறமா இப்ப எனக்கு சாப்பாடு வேணாம்கறாரே?"**

**"அது ஒண்ணுமில்லே... படத்துல ஹீரோ பெரிய ஜீனியஸா வர்றார். எந்த விஷயமா இருந்தாலும் நல்லா யோசனை பண்ணித்தான் முடிவெடுப்பாரு."**

**– சென்னிமலை சி.பி. செந்தில்குமார்**





"எனக்குத் தர வேண்டிய மாமூல உன் பையன்கிட்ட கொடுத்து அனுப்பாதே!"

"ஏன் தொரே?"

"கொடுக்கறப்ப கமிஷன் கழிக்கக்கறான்!"

– அம்பை தேவா

# வெள்ளியில் ஒரு கிரிக்கெட் பேட்!

அண்மையில் சென்னையில் ஒரு விழா. சிறப்பு விருந்தினர் முன்னாள் கிரிக்கெட் வீரர் சுனில் காவஸ்கர். (தம் பெயரை இப்படித்தான் குறிப்பிட வேண்டும் என்று இப்போதும் நினைவூட்டினார்) அவருக்கு அன்று வழங்கப்பட்ட பரிசு என்ன தெரியுமா? வெள்ளியில் செய்யப் பட்ட ஒரு கிரிக்கெட் பேட். சுமார் ஒன்றே முக்கால் கிலோ எடை கொண்டது. மதிப்பு சுமார் இருபத்தைந்தாயிரம்.

"எனக்கு இதுவரை வழங்கப்பட்ட நினைவுப் பரிசுகள் எல்லாம் என் பெற்றோர் வீட்டில்தான் இருக்கிறது. என்னை ஆளாக்கி, புகழ் பெற வைத்தது அவர்கள்தானே! ஆனால், இந்த வெள்ளிப் பரிசை நானே என் வீட்டில் வைத்துப் பெருமையுடன் பாதுகாப்பேன்!" என்றார் சந்தோஷமாய்.

"அது சரி! காவஸ்கருக்கு வெள்ளி கிரிக்கெட் பேட் தரும் ஐடியா எப்படி வந்தது?"

இந்த விழாவை நடத்தி, பரிசு வழங்கிய தமிழ்நாடு கிரிக்கெட் பற்றிய பத்திரிகையான "Straight Bat" இதழின் ஆசிரியர் குழுவைச் சேர்ந்த எஸ்.ஆர். ஜகன்னாதன் சொன்னார்: போன வருடம் கபில் தேவை அழைத்து நவரத்தின மோதிரம் அளித்து கௌரவித்தோம். இந்த வருடம், காவஸ்கரை அழைத்து கௌரவிக்க முடிவு செய்தோம். கபில், பௌலர் என்பதால், அவர் விரலுக்கு மோதிரம் போட்டோம். காவஸ்கர் பேட்ஸ்மேன் என்பதால், அதற்கேற்ப ஒரு பரிசு வழங்கத் தீர்மானித்தோம். அப்போதுதான் வெள்ளியில் கிரிக்கெட் பேட் தரும் ஐடியா வந்தது. அந்த வெள்ளி கிரிக்கெட் பேட்டின் சிறப்பு அம்சம் என்ன தெரியுமா? அதில் காவஸ்கரின் சாதனையான முப்பத்து நான்கு செஞ்சுரிகள் பற்றின விவரங்களும் பொறிக்கப்பட்டுள்ளன!" என்றார்.

இந்த வெள்ளி கிரிக்கெட் பேட்டைச் செய்தது சென்னை பனகல் பார்க் அருகில் உள்ள உம்மிடி பங்காரு ஸ்ரீஹரி என்ற நகைக் கடைதான். ஸ்ரீஹரியிடம், வெள்ளி கிரிக்கெட் பேட் தயாரித்த அனுபவத்தைக் கேட்டபோது, 'நான் கல்லூரி நாட்களில் கிரிக்கெட் ஆடினவன். கிரிக்கெட்டின் பரம விசிறி. காவஸ்கருக்கு நினைவுப் பரிசு செய்து கொடுக்கும் வாய்ப்புக் கிடைத்தது மறக்க முடியாத ஒன்று!" என்றவர்,

"போன வருடம் கபிலுக்கு நவரத்ன மோதிரம் தயாரித்துக் கொடுத்ததும் நாங்கள் தான். ராணி எலிசபெத் சென்னை வந்திருந்த போது சென்னை மாநகராட்சி சார்பில், வெள்ளியில் ரிப்பன்பில்டிங் போல உருவாக்கிக் கொடுத்ததும் நாங்கள்தான்..." என்றார்.

— எஸ். சந்திரமௌலி

படம் : பி.எஸ். ஸ்ரீதரன்



# வைக்கம் முகம்மது பஷீர்

# ஒரு காதல் டைரி

**தமிழில் : வையவன்**

"இனி நீங்கள் என் சிஷ்யை ஆகிற விஷயம்! தேவி, நீங்கள் என் கருத்துக்களோடு ஒத்துப் போவீர்களா? இதைப் பற்றி நன்றாகச் சிந்திக்கவும். நான் தந்திருக்கும் புத்தகங்களை எல்லாம் சரியாக வாசித்துப் பார்க்கவும்.

அவர்களில் அதிகமாக உங்கள் இதயத்தைக் கவர்ந்தவர் யாரோ அந்த மனிதரை உங்கள் குருவாக ஏற்றுக் கொள்ளுங்கள். நான் அந்த மனிதரை நேரடியாக உங்களுக்குப் பரிச்சயம் செய்து வைப்பேன். சிந்தித்துப் பாருங்கள்.

நான் ஏற்க முடியாத என் சிஷ்யையின் கருத்துக்களை என்னால் வரவேற்க முடியாது. என் கருத்துக்களையே என் சிஷ்யை எப்பொழுதும் ஏற்க வேண்டும். நீங்கள் எதை விரும்புகிறீர்கள்?

பிரியமுள்ள தங்கம், ஆலோசித்து முடிவு சொன்னால் போதும். நமக்கிடையே பெரிய இடைவெளி உண்டு.

கலையின் நோக்கம் அனைத்து மக்களுக்கும் நல்லொழுக்கம் புகட்டுவதே என்பதை ஏற்காத கலைஞனை நான் விரும்ப மாட்டேன் என்று நீங்களே முதலில் அறிவித்திருக்கிறீர்கள். இரண்டு கேள்விகள்.

கலை என்றால் என்ன?

நல்லொழுக்கம் என்றால் என்ன?

தங்கமே, கவலைப்படாதீர்கள். தற்போது இந்த இரு கேள்விகளுக்கும் பதில் தர வேண்டாம். சிந்தித்தால் போதும். வாசித்தால் போதும். பிறகு மீண்டும் சிந்தித்தால் போதும்.

வாழ்க்கையின் நோக்கமும் கலையின் நோக்கமும் ஒன்றுதான்.

இறைவன் இருக்கிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். எனது இறைவன் ஒரு கலைஞன். முதலும் முடிவுமான கலைஞன். அந்தக் கலைஞனின் இரண்டு சிருஷ்டிகள் தான் நீங்களும் நானும். அந்தக் கலைஞனின் ஓர் எளிய சிருஷ்டியான இந்தக் கலைஞன் சிந்திக்கிறான்.

படைப்பின் நோக்கம் என்ன?

கலை என்பது என்ன?

க...லை என்ற இந்த இரண்டு எழுத்துகளுக்குள்ளே நான் இந்த மாபெரும் பிரபஞ்சத்தையும் எல்லா உயிர்க்குலங்களையும் காண்கிறேன். சிருஷ்டியின் நோக்கம் என்ன? எதற்காக இவை சிருஷ்டிக்கப்பட்டன?

இந்தக் கேள்விக்கு ஆயிரம் விடைகள்!

தேவீ, உங்களுக்குப் பிரியமானதை நீங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள்.

நான் புறப்படுகிறேன். களங்கமற்ற யுவதியே, சீக்கிரம் பதில் எழுதுங்கள். அவசியமின்றி என்னைக் காக்க வைக்காதீர்கள்.

நாம் சந்தித்தோம். நீங்கள் நினைப்பது போல கடலிலே கப்பல்களைப் போல. அப்படியா... அல்லது... ஆகாயப் பரப்பிலே ஏகாந்தமாய் சஞ்சரிக்கும் பறவைகளைப் போலவா? எப்படியாவது இருக்கட்டும். நாம் சந்தித்துக் கொண்டோம்.

இப்போது பிரியப்போகிறோம். இனி ஒருக்காலும் நாம் ஒருவரை ஒருவர் பார்க்க முடியாமல் போகலாம். எனினும் நினைவுகள். சினேகபூர்வமான நினைவுகள் உண்டாகுமா? 'ஜப் சாந்த் மேரா நிக்கலா!'

தங்கமே, ஏன் இத்தனை துயரம்? என்னிடம் சொல்வீர்களா? உங்கள் இருதயத்



திலே அந்த ரணங்களை ஏற்படுத்தியது யார்?

துயரின் இனிமை கலந்த மோகன காவியமே!

எல்லோருக்கும் உண்டு - இதயத்திலே ரணங்கள்! அதை நினைத்துக் கழிந்து போன விலை மதிப்பற்ற அந்த நிமிஷத்தை எண்ணி மறுகுவதிலே என்ன பயன்?

எல்லாம் கழிந்து போனவை. இது ஒரு யதார்த்தம். வாழ்கிறோம். இது மற்றொரு யதார்த்தம். வாழ வேண்டும்! வாழ வேண்டும்! யாருக்காக எதற்காகவென்று நீங்களே தீர்மானிக்க வேண்டும்.

எனக்கு மிகவும் பிரியமான சரஸ்வதி தேவி! நான் உங்களை நேசிக்கிறேன். என் உடலும், என் இருதயமும் என் ஆத்மாவும் என் தேவியை நேசிக்கின்றன. நீங்கள் விருப்பப்படி நடந்து கொள்ளுங்கள்.

ஆனால் என்னை வேதனைப்படுத்த வேண்டாம். என்னை அவமானப்படுத்த வேண்டாம். ஒருக்காலும் என்னை பரீட்சை செய்து பார்க்க முயற்சிக்க வேண்டாம்.

என்னை நம்புக. முழு ஆத்மாவோடு என்னை நம்புக. நாம் பல அனுபவங்களோடு சேர்ந்து ஒரு பருவத்தை எட்டியவர்கள். ஒரு பழைய செய்தி சொல்லட்டுமா?

ஆறு ஆண்டுகளுக்கு முன்பு ஒரு பெண்ணோடு எனக்குத் தொடர்பு. கடிதங்களில் தான். முடிவில் அவள் என்னை வேதனைப் படுத்தினாள். அதைப் போல என்னை நீங்களும் கொல்ல முயற்சிக்காதீர்கள்.

தேவீ, உங்களுக்கு அனேக ஆண் சிநேகிதர்கள் உண்டு. அந்த மகாசபையில் ஓர் ஆளாக என்னையும் கருத வேண்டாம். யாருமில்லை என்றால் மட்டுமே என்னை அழையுங்கள் போதும்.

எல்லா பாக்கியங்களும் பெற வாழ்த்துகிறேன்.

சொந்தமான கலைஞன்."

கடிதத்தை நகல் செய்து அனுப்ப முயலும்போது தேவியின் ஒரு கடிதம் வந்தது. பயங்கரமான ஓர் அலறல் போல உள்ளத்தை உலுக்கித் தகர்க்கும் ஒரு தற்கொலை போல. அது என் இதயத்தில் ஒரு வெட்டுப் போட்டது. ஆனால் என் இதயம் பிளக்கவில்லை. அவள் கடிதம்.

"சகோதரரே,

எனக்கு இனிமேல் பதில் எழுதாதீர்கள். என்னை மறந்து விடுங்கள். காக்கையின்

அருகே குயிலுக்கு இடமில்லை என்று முன் கூட்டியே நான் யோசித்திருக்க வேண்டும்! தங்களுக்கு எல்லா வெற்றிகளும் கிட்டட்டும். போவதற்கு முன்பு என் ஆட்டோகிராப் புத்தகத்தில் ஏதாவது எழுதி விட்டுப் போக வேண்டும்.

இப்படிக்கு,
தேவி."

கடிதத்தை வாசித்து, நான் ஸ்தம்பித்துப் போனேன். காக்கையும் குயிலும்!

இதற்குப் பின் நான் ஒன்றும் எழுதவில்லை. ஏன் எழுத வேண்டும்? பேனாவை நான் கிழே வைத்தேன்.

பல வருடங்களாயின நான் அழுது! நான் அழுதேன். தேம்பித் தேம்பி விம்மி அழுதேன். என் தேவி என்னை அழவைத்து விட்டாள். கடிதங்களும் அவளுக்குக் கடிதம்



**"என் குழந்தைக்கு நல்ல பேரா செலக்ட் பண்ண டெலிபோன் டைரக்டரியை தேடினேன்."**

**"என்ன பேரை செலக்ட் பண்ணினீங்க?"**

**"டபுள் ஃபைவ் த்ரீ ஜீரோ செவன்."**

**— தாரை மா. மகேஷ் ப்ரியன்**

எழுதவென்றே வாங்கிய லெட்டர் பேடும், பேனாவும் தேவிக்காக எழுதி வைத்திருந்த கதையும்... இன்னும் என்னவெல்லாமோ எடுத்துக் கொண்டு கிழே இறங்கினேன்.

திறந்த பேனா திறந்தபடி. கதவைப் பூட்டினேன் என்றே கருதிக் கொண்டேன். எல்லாம் விரிந்து திறந்து கிடந்தன. என்னை அறியாது நான் நேரே கல்லூரிக்குப் போனேன்.

அப்போதுதான் அன்று விடுமுறை என்றும் பக்ரீத் என்றும் தெரிய வந்தது. நான் ஒரு வண்டி பிடித்து நேரே தேவியின் வீட்டிற்குச் சென்றேன். அன்று முதன்முறையாகப் படி கடந்து வீட்டில் ஏறினேன்.

நேரே சென்றபொழுது சௌமினி உட்கார்ந்து வாசித்துக் கொண்டிருந்தாள். நான் கேட்டில் உள்ள படியில் ஏறி உட்கார்ந்தேன். சௌமினியைக் கேட்டேன். எங்கே என்று மட்டும்! சௌமினிக்குப் புரிந்து விட்டது.

கையினால் சைகை காட்டினாள்.

'படுத்திருக்கிறாள். மன்னியுங்கள். கூட்டி வருகிறேன்.'

சௌமினி உள்ளே ஓடினாள்.

நான் வேறு எதையும் கவனிக்கவில்லை. யார் பார்க்கிறார்கள் என்றோ... ஒன்றும்! கொஞ்ச நேரம் கழித்துக் கதவருகே தேவி வந்து நின்றாள்.

அலங்கோலமான தலைமுடி. நிறம் மங்கிய கண்கள். பயங்கரமாய் இளைத்திருந்தாள்.

என்னை வீட்டின் கிழக்குப் பக்கத்திற்கு வரச் சொன்னாள். கடுமையான தலைவலியால் கை தலையைப் பிடித்திருந்தது. வாடித் தளர்ந்து விட்டிருந்தாள். என் முன் வந்து நின்றாள்.

நான் அந்த முகத்தைப் பார்த்தேன். கண்களினூடே, இதயத்தினூடே, ஆத்மாவை!

"எங்கே ஆட்டோகிராப் புக்? அதில் நான் எழுத வந்திருக்கிறேன். கொடுங்கள்."

"வாங்கலே. நாளைக்கு வாங்கிக்கறேன்!" பலவீனத்தோடு மிக மெதுவாகச் சொன்னாள்.

எனில் தேவியின் இதயம் என்ற ஆட்டோகிராபில் எழுதிக் கொள்ளுங்கள். தேவி நேசிக்கும் கலைஞன் தேவியை நேசிக்கிறான் என்று நான் குரல் உயர்த்திச் சொல்லவில்லை. மனதிலே உருப்போட்டேன்.

பிறகு என் பேனாவை 'நிப்'போடு சுவரில் ஓங்கிக் குத்தி ஒடித்து அவள் கையில் கொடுத்துவிட்டுக் கிளம்பினேன்.

"நான் போகிறேன்" என்றபடி.

வழியில் மீண்டும் நான் அழுதேன். இதயம் நொந்து அழுதேன். நகரத்தின் நடுவில், மனித இரைச்சலின் ஊடே, அழுது கொண்டே தன்னந்தனியாக நான் நடந்தேன்.

இத்தனை வயசிற்கிடையில்.. அநேக பெண்களோடுள்ள பரிச்சயத்திற்கிடையில் எனக்கு முதல் முறையாகவும் கடைசி முறையாகவும் காதல் என்பது என்னவென்று அப்போது அனுபவமாயிற்று.

ஆகாயமெல்லாம் புதிதாய்க் கழுவி புதுச் சாயங்கள் பூசியது போல... கட்டடங்கள், மனிதர்கள், பறவைகள், வாகனங்கள்... எல்லாம் ஒரு புது வெளிச்சத்தில் பிரகாசித்தன.

நான் வாழ்க்கையையும், எல்லா உலகங்களையும் சர்வ சராசரங்களையும், பிரத்தியேகமாக சரஸ்வதி தேவியையும் நேசித்தேன்.

அழுதேன்.

என் எழுதுகோலும் போய்விட்டது. குத்தி உடைத்து என் தேவியின் கையில் கொடுத்து விட்டேன். இப்போது ஆயுதமில்லாத ஒரு போராளி. எழுதுகோல் இல்லாத ஒரு கலைஞன்.

நான் குடியிருந்த இடத்திற்குப் போனேன். அந்த காட்சியைக் கண்டு திடுக்கிட்டு நின்று விட்டேன். எல்லாக் கதவுகளும் விரியத் திறந்து கிடக்கின்றன. அனேக காலமாக இல்லாத ஒரு மறதி.

உள்ளே வந்து சாய்வு நாற்காலியில் படுத்தேன்.

காகிதங்கள், புத்தகங்கள், பாதி எழுதிய கதைகள்... நான் அப்படியே கிடந்தேன்.

இல்லை... எழுத வேண்டும்!

ஓர் உத்வேகம்.

நான் வெளியே போய் ஒரு பென்சில் வாங்கி வந்தேன். தேவிக்கு அன்றே மீண்டும் ஒரு கடிதம் எழுதினேன். அழுது கொண்டேதான்.

கடிதம் எழுத வேண்டாம் என்பதுதானே சீமான் மகளின் ஆக்ஞை! நான் எழுதினேன். கண்ணீர் காகிதத்தில் சிதறி விழாதபடி நான் என் துயரின் இனிமை கலந்த மோகன காவியத்திற்கு எழுதினேன்.

"தேவி, யுகங்கள் ஆயின நான் அழுது. இதோ கண்ணீர் வருகிறது; கண்ணீர்.

கல் மனசுக்காரி ஆக வேண்டாம். என் தேவி கடின இதயமுள்ளவள் ஆகக் கூடாது. நான் உங்களுக்குப் பதில் எழுதிக் கொண்டிருந்தேன். குறித்துக் கொள்க. உங்களுக்குப் பதில் எழுதும் போதுதான் கடுமையும் அரக்கத்தனமும் உள்ள அந்தக் கடிதம் வந்தது. எனக்கு இனி பதில் எழுத வேண்டாம் என்ற உளறலோடு.

எனில் இனி அந்தப் பேனாவை வைத்து மற்ற யாருக்கும் எனக்கு எழுத வேண்டாம். இனி எதுவும் நான் எழுத மாட்டேன்.

எழுதுவதற்கு நிறைய உண்டுதான். அந்த 'லெட்டர்-பேட்'ஐ என் தேவிக்குக் கடிதம் எழுதவென்றே பிரத்தியேகமாக வாங்கினேன்.

தேவி, இப்போது நாம் நேரில் சந்தித்துக் கொண்டோம். ஒளிந்து பிடிக்கும் விளையாட்டு தீர்ந்தது. கெட்ட ஊகங்களின் சந்தேகங்களின் பக்கங்கள் கிழிந்து போய்விட்டன.

இப்போது நாம் சத்தியத்தின் முன்னே நிற்கிறோம்.

தேவீ, என் துயரின் இனிமை கலந்த மோகன காவியமே!




"இந்த நகைக் கடையில் செய் கூலி இல்லை, சேதாரம் இல்லைன்னு போட்டிருக்கு... அப்படியும் கூட்டமில்லையே... ஏன்?"

"தங்கமும் சுத்தம் இல்லையாம்!"

– ராஜீராதா

நான் எங்குமே போகப் போவதில்லை. எனக்கு இனி எவரையும் பார்க்க வேண்டாம். தேவீ எழுது, என் பிரிய சிஷ்யையே எழுது.

தேவீ, விழித்தெழு. விழித்தெழு... என் தேவீ விழித்துக்கொள். ஒரு மதுரகானமாக விழித்தெழு.

தங்கமே! நறுமணம் வீசும் தங்கமே! அந்த முகம் ஏன் அப்படி வெளிறி விட்டிருந்தது? அந்தக் கண்களில் ஒரு நிற மாற்றம். உன் தலை இடித்துக் கொண்டு இருந்ததே!

நீ உலுக்கிய உலுக்கத்தில் என் இதயம் வெடிக்கும் போலிருந்தது! என் இதயமும் இடித்துக் கொண்டிருந்தது. என் தேவி என்னைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தாள்.

எந்நேரமும் எந்நேரமும் என்னைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தாள். சரஸ்வதி தேவி, 'சைக்கிக் இம்ப்ரஷன்' உனக்குத் தெரியுமா? நீ என்னைப் பற்றிச் சிந்திப்பதை நான் அறிந்திருந்தேன்.

பலமுறை நான் உன் அருகில் வந்தது ஞாபகம் வருகிறதா? சிந்தனை என்னைத் தொடும்போது நான் அறிவேன். ஒவ்வொரு நிமிஷமும். இரவும் பகலும். நான் கண் விழிப்பதே தேவீ என்று விளித்தபடியேதான்.

தேவீ, அந்தப் பேனாவை பத்திரமாய் வைத்திரு. அதை வைத்து நான் நிறைய எழுதியிருக்கிறேன். எல்லாவற்றையும் பத்திரமாய் வைத்திருக்கவும். உனக்கு எழுதிய பேனாவினால் மற்ற யாருக்கும் நான் எழுத மாட்டேன். ஒன்றும் நான் எழுத மாட்டேன்.

தேவீ சொல்லு. எழுதுக என்று, சரஸ்வதி தேவீ நீ சொல்!

(தொடரும்)

# பொன்னியின் செல்வன்






கல்கி கலெக்ஷன்

### ஏழாம் அத்தியாயம்

## காற்றில் எழுந்த கீதம்

பூங்குழலி கோபத்துடன் ஓடுவதை நிறுத்தித் திரும்பி நின்ற அதே சமயத்தில், இருள் சூழ்ந்த அக்காட்டகத்தே, ஓர் இனிய கீதம் எழுந்தது:

**"பொன்னார் மேனியனே**
**புலித்தோலை அரைக்கசைத்து**
**மின்னார் செஞ்சடை மேல்**
**மிளிர்கொன்றை அணிந்தவனே!"**

அந்தக் குரல் சேந்தன் அமுதனுடைய குரல் என்பதைப் பூங்குழலி உடனே அறிந்துகொண்டாள். கலகலவென்று சிரித்தாள். காலடிச் சத்தம் வந்த திசை வேறு என்பதைக்கூட அச்சமயம் அவள் மறந்து போனாள்.

''அத்தான்! நீதானா?''

''ஆமாம்! பூங்குழலி!''

''எங்கே இருக்கிறாய்? இப்படி வா!''

''இதோ வந்துவிட்டேன்!'' என்று சொல்லிக்கொண்டு சேந்தன் அமுதன் அவள் முன்னால் வந்தான்.

''நன்றாய் என்னைப் பயமுறுத்திவிட்டாய்! எதற்காக இப்படி என்னைத் தொடர்ந்து வந்தாய்?''

''பூங்குழலி! உன்னைப் பார்ப்பதற்காகவும் உன் இனிய கானத்தைக் கேட்பதற்காகவும் தஞ்சையிலிருந்து பலநாள் பிரயாணம் செய்து வந்தேன். இங்கே வந்த பிறகும் உன்னைக் காணாமல் இத்தனை நான் காத்துக் கொண்டிருந்தேன்! தற்செயலாக உன்னைப் பார்த்துவிட்டுத் தொடர்ந்து ஓடி

**அமரர் கல்கி**

வந்தேன். எங்கே, ஒரு கீதம் பாடு கேட்கலாம்!''

''பாடுவதற்கு நல்ல இடம்; அதை விட நல்ல சந்தர்ப்பம்!''

"நீ பாடா விட்டால் நானே இன்னொரு பாட்டுப் பாடுகிறேன். இந்தக் காட்டில் தூங்கிக் கொண்டிருக்கும் மிருகங்களையெல்லாம் விழித்தெழுந்து ஓடச் செய்கிறேன், பார்!

**பித்தா! பிறைசூடி**
**பெருமானே அருளாளா!''**

''போதும், அத்தான்! கொஞ்சம் பாட்டை நிறுத்து!''

"அப்படியானால் நீ பாடுகிறாயா?'' - இவ்விதம் இரைந்து கேட்டு விட்டுச் சேந்தன் அமுதன் உடனே மெல்லிய குரலில், ''பூங்குழலி! உன்னைத் தொடர்ந்து இன்னொருவன் வந்து கொண்டிருந்தான். உனக்கு எச்சரிக்கை செய்வதற்காகவே சத்தம் போட்டுப் பாடினேன். அவனுக்கும் உன் அண்ணன் மனைவிக்கும் இன்று சாயங்காலம் ஏதோ இரகசிய சம்பாஷணை நடந்தது. அவன் யார் என்று உனக்குத் தெரியுமா?'' என்றான்.

பிறகு மீண்டும், உரத்த குரலில் "என்ன சொல்கிறாய்? நீ பாடுகிறாயா? நான் பாடட்டுமா? சிவபெருமான் சுடுகாட்டில் ஆடினார்; நீ வெறுங்காட்டில் பாடக் கூடாதா?'' என்று இரைந்தான்.

"இதோ பாடுகிறேன்; கோபித்துக் கொள்ளாதே!'' என்று சொல்லி விட்டுப் பூங்குழலி பாடினாள்.

**''பறக்கும் எம் கிள்ளைகாள்! பாடும்**
**எம் பூவைகாள்!**
**அறக்கண் எனத்தகும் அடிகள்**
**ஆரூரரை**
**மறக்க கில்லாமையும் வளைகள் நில்**
**லாமையும்**
**உறக்க மில்லாமையும் உணர்த்த**
**வல்லீர்களே!''**

இவ்விதம் பாடிவிட்டு, மெல்லிய குரலில், "அமுதா! நான் வந்தது உனக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டாள்.

''பூங்குழலி! கலங்கரை விளக்கின் உச்சியிலிருந்து படகு வருவதைப் பார்த்தேன். நீயாக இருக்கலாம் என்று உத்தேசமாக எண்ணி இங்கே உன்னைத் தேடி வந்தேன். அதே சமயத்தில் பழுவூர் ஆட்கள் சிலரும் இந்தப் பக்கம் வந்தார்கள். படகில் உன்னைக் காணவில்லை. ஆனால் என் நண்பன் வல்லவரையனிடம் பழுவூர் ஆட்கள் வருவது பற்றிக் கூறினேன். பிறகு இளவரசரை நாங்கள் இருவருமாகத் தூக்கிக் கொண்டு போய் மறைந்த மண்டபத்தில் சேர்த்தோம்....''

''ஐயோ! என்ன தவறு செய்து விட்டீர்கள்? படகு என்ன ஆயிற்று?''

"படகை யாராவது பார்த்தால் சந்தேகம் ஏற்படும் என்று ஓடை நீரில் கவிழ்த்து விட்டோம்! - ஏன்! பூங்குழலி! பாட்டை ஏன் நிறுத்தி விட்டாய்! மிச்சத்தையும் பாடு!'' என்று பிற்பகுதியை உரத்த குரலில் கூறினான் சேந்தன் அமுதன்.

''மறந்துவிட்டது, அமுதா! இந்தக் கோடிக்கரைக் குழகரைப் பற்றி ஒரு பாடல் உண்டே! உனக்கு அது நினைவிருக்கிறதா? - நினைவிருந்தால் பாடு!''

"ஓ! நினைவிருக்கிறது!'' என்று சேந்தன் அமுதன் இரைந்து சொல்லி விட்டுப் பாடினான்:-

**"கடிதாய்க் காற்று வந்தெற்றக்**
**கரைமேல்**
**குடிதானயலே இருந்தால் குற்ற**
**மாமோ?**
**கொடியேன் கண்கள் கண்டன**
**கோடிக் குழகீர்**
**அடிகேள் உமக்கார் துணையாக**
**இருந்நீரே!''**

பாட்டு முடிந்தவுடனே பூங்குழலி "அத்தான்! என்னைத் தொடர்ந்து வந்தவன் போய்விட்டானா? பக்கத்தில் மறைந்து நின்றுகொண்டிருக்கிறானா? என்று மெல்லிய குரலில் கேட்டாள்.

''நாம் இங்கே நின்ற பிறகு காலடிச் சத்தம் கேட்கவில்லை; அவன் இங்கே தான் பக்கத்தில் எங்கேயோ மறைந்து



நிற்க வேண்டும். அவன் யார் என்று உனக்குத் தெரியுமா?"

பூங்குழலி இரைந்து "தெரியாமல் என்ன? நன்றாய்த் தெரியும். கோடிக்கரை ஆந்தைகளைப் பற்றிச் சுந்தரர் பாடியிருப்பதுதானே? இதோ கேள்!

காடேன் மிகவால் இது காரிகை
யஞ்சக்
கூடிப் பொந்தில் ஆந்தைகள்
கூகை குழற
வேடித் தொண்டர் சாலவுந் தீயர்
சழக்கர்
கோடிக் குழகா விடங்கோயில்
கொண்டாயே!

பார்த்தாயா! அமுதா! சுந்தரமூர்த்தியின் காலத்தில் ஆந்தைகளும் கூகைகளும் இன்றுபோலவே இக்காட்டில் கத்தியிருக்கின்றன. ஆனால் இப்போது இக்காட்டில் மனிதர்கள்கூட ஆந்தை போலச் சத்தமிடுகிறார்கள். சற்று முன் அத்தகைய குரல் ஒன்று கேட்டேன். அந்தத் தீய சழக்கர் யாராயிருக்கும் என்று உனக்கு

ஏதாவது தெரியுமா?'' - இப்படி உரத்த குரலிலேயே பூங்குழலி கேட்டாள். கேட்டுவிட்டு, ''எனக்கு அம் மாதிரி கத்த வருகிறதா என்று பார்க்கிறேன். ஆந்தைக் குரல் மாதிரி இருக்கிறதா கேட்டுச் சொல்லு!'' என்றாள்.

பின்னர், ஆந்தை மாதிரியே மூன்று தடவை குரல் கொடுத்தாள்.

''அப்படியே ஆந்தைக் குரல் மாதிரியே இருக்கிறது! தேனினும் இனிய குரலில் தெய்வீக கீதங்களைப் பாடுவாயே! இதை எங்கே கற்றுக் கொண்டாய்?'' என்று அமுதன் கேட்டான்.

''மந்திரவாதி ஒருவனிடம் கற்றுக் கொண்டேன். மந்திரம் பலிப்பதற்கு இப்படி ஆந்தை போலக் கத்தத் தெரிந்திருக்க வேண்டுமாம்!''

''உனக்கு மந்திரவித்தை கூடத் தெரியுமா, என்ன?''

''ஏதோ கொஞ்சம் தெரியும். என்னுடைய மந்திர சக்தியைப் பரீட்சித்துப் பார்க்கிறாயா?''

''எப்படி பரீட்சிக்கிறது?''

''இப்போது நாம் பேசுவதையெல்லாம் நமக்குப் பக்கத்தில் ஒருவன் மறைந்திருந்து கேட்டுக் கொண்டிருக்கிறான். நீ வேணுமானால் தேடிப் பார்!''


வ்விதம் பூங்குழலி கூறி வாய் மூடுவதற்குள்ளே காட்டில் சலசலப்புச் சத்தம் கேட்டது. மந்திரவாதி ரவிதாஸன் மறைவிலிருந்து வெளியே வந்தான். ''ஹாஹாஹா!'' என்று சிரித்துக் கொண்டே வந்தான்.

''பெண்ணே! அப்படியா சமாசாரம்? உனக்குத் தந்திரம்தான் தெரியும் என்று நினைத்தேன்; மந்திரம்கூடத் தெரியுமா?'' என்று கேட்டான்.

''அட பாதகா! நீதானா?''

''பெண்ணே! நான் யார் என்று உனக்குத் தெரியுமா?''

''இலங்கையில் இளவரசரைக் கொல்லப் பார்த்தவன் நீ! அது உன்னால் முடியவில்லை. ஆகையால் நடுக்கடலில் மந்திரம் போட்டுச் சுழற்காற்றை வரவழைத்து இளவரசரையும் அவருடைய சிநேகிதனையும் மூழ்க அடித்து விட்டாய்!''

''அவர்கள் மூழ்கியது உனக்கு எப்படி நிச்சயமாய்த் தெரியும்? நீ பார்த்தாயா?''

''இரண்டு பேருடைய உடல்களும் கரையில் வந்து ஒதுங்கின. பூதத் தீவிலே குழி தோண்டி அவர்களைப் புதைத்து விட்டு வந்தேன். துரோகி! உன் மந்திரத்தில் இடி விழ!''

''பெண்ணே! என்னை ஏமாற்றப் பார்க்காதே! என்னுடைய மந்திரத்துக்குப் பதில் மந்திரம் போட்டு நீ அவர்களை உயிர் பிழைக்கச் செய்யவில்லையா?''

''ஐயோ! அது எப்படி உனக்குத் தெரிந்தது?''

''இந்த ரவிதாஸனுக்குப் புறக் கண்ணைத் தவிர அகக் கண்ணும் உண்டு. நூறு காத தூரத்தில் நடப்பதையும் என்னுடைய மந்திர சக்தியினால் தெரிந்து கொள்வேன்.''

''அப்படியானால் என்னை எதற்காகக் கேட்கிறாய்?''

''உன்னைப் பரிசோதிப்பதற்காகக் கேட்கிறேன். அவர்களை எங்கே ஒளித்து வைத்திருக்கிறாய் என்பதைச் சொல்லி விடு! இல்லாவிட்டால் உங்கள் இருவரையும் இங்கேயே எரித்துச் சாம்பலாக்கி விடுவேன்!'' என்றான் ரவிதாஸன்.

அவனுடைய புறக்கண்கள் அச்சமயம் நெருப்புத் தணல்களைப் போல் ஜொலித்தன.

''என்ன? உண்மையைச் சொல்கிறாயா, மாட்டாயா? ஓம் ஹ்ரீம் ஹ்ராம் வஷட்! - இதோ என் மந்திரத்தின் சக்தியைக் காட்டப் போகிறேன்.''

பூங்குழலி பயத்தினால் நடுநடுங்கிச் சேந்தன் அமுதனைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். அவனிடம் மெல்லிய குரலில் ''நான் இப்போது ஓடப் போகிறேன். நீ அவனைத் தடுத்து நிறுத்தப் பார்!'' என்றாள்.

மந்திரவாதியைப் பார்த்து உரத்த குரலில், ''என்னை ஒன்றும் செய்ய வேண்டாம். அவர்கள் இருக்கும் இடத்தைக் காட்டி விடுகிறேன்!'' என்று கூறினாள்.

''என்னுடன் வா! காட்டுகிறேன்!'' என்று சொல்லி விட்டுப் பாழடைந்த மண்டபத்துக்கு நேர்மாறான திசையை நோக்கி நடந்தாள்.

மந்திரவாதி அவளைப் பின் தொடரப் பார்த்தான்.

சேந்தன் அமுதன் பின்னாலிருந்து அவனைப் பிடித்து நிறுத்த முயன்றான்.

பூங்குழலி ஓடத் தொடங்கினாள்.

மந்திரவாதி சேந்தன் அமுதனை ஒரே தள்ளாகத் தலைகுப்புறத் தள்ளிவிட்டுப் பூங்குழலியைத்



தொடர்ந்து ஓடினான்.

மந்திரவாதி மானைத் துரத்தும் வேடனைப் போல் அவளைப் பிடிக்க ஓடினான். ஆனால் அவளைப் பிடிப்பது எளிதில் முடிகிற காரியமாயில்லை.

மந்திரவாதி அவளைத் துரத்துவதை விட்டு நின்று விடலாமா என்று எண்ணியபோது பூங்குழலி களைத்துப் போனவளைப் போல் நின்றாள். மந்திரவாதி மறுபடியும் அவளைத் துரத்தினான்.



ருவருக்கும் பின்னால் சேந்தன் அமுதனும் தட்டுத் தடுமாறி விழுந்தடித்து ஓடி வந்து கொண்டிருந்தான். ஓடும்போது, மறைந்த மண்டபத்துக்குப் போய் அங்குள்ளவர்களுக்கு எச்சரிக்கை செய்யலாமா என்று அவன் அடிக்கடி நினைத்தான். அதேசமயத்தில் பூங்குழலியை மந்திரவாதியிடம் தனியாக விட்டு விட்டுப் போகவும் அவனுக்கு மனம் வரவில்லை.

பூங்குழலி ஒரு மேட்டின் மீது ஏறி நின்றாள். அங்கு சற்றுக் காத்திருந்ததோடு அல்லாமல் திரும்பிப் பார்த்து மந்திரவாதியைக் கைதட்டி அழைத்தாள். மந்திரவாதி மேல் மூச்சுக் கீழ் மூச்சு வாங்க அவள் அருகில் போய் நின்றான். அவளைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு அவள் கன்னத்தில் நாலு அறை கொடுக்க வேண்டும் என்று அவன் எண்ணிய சமயத்தில் பூங்குழலி ''அதோ பார் என் காதலர்களை!'' என்றாள்.

அவள் சுட்டிக் காட்டிய திசையை மந்திரவாதி பார்த்தான்.

முன்னொரு தடவை வந்தியத்தேவன் கண்ட காட்சியை அவனும் கண்டான்.

சதுப்பு நிலத்தில் ஆங்காங்கு தீப்பிழம்புகள் குப் குப் என்று தோன்றுவதும் கப் கப் என்று மறைவதுமாயிருந்தன. ரவிதாஸனுக்கு அந்தப் பயங்கரத் தோற்றத்தின் காரணம் என்னவென்று தெரியுமென்றாலும் அச்சமயம் அவனுக்கு ரோமம் சிலிர்த்தது.

''மந்திரவாதி! உனக்கு மந்திரம் தெரியும் என்றால், இந்தக் கொள்ளிவாய்ப் பிசாசுகளை ஓட்டுவதற்கு ஒரு மந்திரம் போடு, பார்க்கலாம்! அவை என்னைப் பாடாய்ப் படுத்தி வைக்கின்றன!'' என்றாள்.

ரவிதாஸனுக்கு அளவில்லாக் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது.

''பெண்ணே! என்னை ஏமாற்றலாம் என்று பார்க்கிறாயா?'' என்று கர்ஜித்தான்.

''உன்னை எதற்காக நான் ஏமாற்ற வேண்டும்?''

''இளவரசரும் வல்லவரையனும் இருக்குமிடத்தைக் காட்டுகிறேன் என்று சொல்லி நீ என்னை இழுத்து அடிக்கவில்லையா?''

''அவர்கள் இறந்து விட்டார்கள் என்று நான் சொன்னதை நீ நம்பவில்லை. வேறு என்ன செய்யட்டும்?''

''இளவரசர் இறந்தது உண்மைதானா? ஆணையிட்டுச் சொல்வாயா?''

''ஆணை எதற்கு? அதோ ஆகாசத்தைப் பார்!''

ரவிதாஸன் வானத்தை நோக்கினான். வால் நட்சத்திரம் தெரிந்தது.

''வால் நட்சத்திரம் தோன்றினால் அரச குலத்தில் மரணம் என்று உனக்குத் தெரியாதா? அப்படியே நடந்து விட்டது!'' என்றாள் பூங்குழலி.

''பெண்ணே! அப்படியானால் உன் கையில் உள்ள கெண்டியை இப்படிக் கொடு! அதில் ஏதாவது மிச்சம் இருக்கிறதா? உன்னோடு ஓடி வந்ததில் எனக்குத் தாகம் எடுத்து விட்டது...!''



ங்குழலி திடீரென்று மறுபடி ஓட்டம் பிடித்தாள். மேட்டிலிருந்து தாவிக் குதித்து இறங்கிக் கொள்ளிவாய்ப் பிசாசுகள் தோன்றி

மறைந்த சதுப்பு நிலப் பரப்பை நோக்கி ஓடினாள்.

ரவிதாஸன் ஆத்திரத்தினால் அறிவை இழந்தான். பூங்குழலியைப் பிடித்து அவளுடைய கழுத்தை நெரித்துக் கொன்று விட வேண்டும் என்ற வெறியை அடைந்தான். தலை கால் தெரியாமல் அவளைப் பின் தொடர்ந்து ஓடினான்.

சிறிது தூரம் ஓடிய பிறகு பூங்குழலி சட்டென்று கொஞ்சம் குனிந்து நாலைந்தடி ஒருபுறமாக நகர்ந்து கொண்டாள்.

அதிவேகமாக அவளைத் துரத்தி வந்த ரவிதாஸனால் அவள் நின்ற இடத்தில் நிற்க முடியவில்லை. அவளுக்கு அப்பால் சில அடி தூரம் வரையில் சென்று நின்றான். திரும்பி அவளைப் பிடிப்பதற்காகப் பாயப் பார்த்தான். ஆனால் முடியவில்லை. கால்களுக்குத் திடீரென்று என்ன நேர்ந்து விட்டது? அவை ஏன் இப் பொழுது நகரவில்லை? அவை ஏன் சில்லிட்டிருக்கின்றன?

இது என்ன? உள்ளங்காலிலிருந்து சில்லிப்பு மேலே மேலே வந்து கொண்டிருக்கிறதே? இல்லை, இல்லை! கால்கள் அல்லவா கீழே கீழே போய்க் கொண்டிருக்கின்றன!

ரவிதாஸன் குனிந்து பார்த்தான். ஆம், அவனுடைய கால்கள் கீழே புதைசேற்றில் அமிழ்ந்து கொண்டிருப்பதைக் கண்டான். ஒவ்வொரு அணுவாக, ஒவ்வொரு அங்குலமாக, அவன் கால்கள் கீழே சேற்றில் மெதுவாகப் புதைந்து கொண்டிருந்தன.

ரவிதாஸன் தன்னுடைய அபாயத்தை உணர்ந்தான். சேற்றிலிருந்து வெளி வர முயன்றான். கால்களை உதறி எடுக்கப் பிரயத்தனம் செய்தான். அவனுடைய பிரயத்தனம் பலன் தரவில்லை.

கீழே சேற்றுக்கடியில் ஏதோ ஒரு பெரும் பூதம் இருந்து அவனைப் பற்றி இழுப்பது போலத் தோன்றியது.

பூங்குழலி கலகலவென்று சிரித்தாள்.

"மந்திரவாதி! என்ன விழிக்கிறாய்? பூதத்தின் வாயில் அகப்பட்டுக் கொண்டாயா? மந்திரம் போட்டுப் பார்ப்பதுதானே?" என்றாள்.

மந்திரவாதி ஒரு பக்கம் பீதியினாலும் ஒரு பக்கம் கோபத்தினாலும் நடு நடுங்கினான்.

"அடி பாவி! உன் வேலையா இது?" என்று கையை நெரித்தான்.

"என் கழுத்தைப் பிடித்து நெரிக்க வேண்டும் என்று நீ ஆசைப்பட்டாயல்லவா? அதற்குப் பதிலாகக் கையை நெரித்துக்கொள்!" என்றாள்.

ரவிதாஸன் கோபத்தை அடக்கிக் கொண்டு "பெண்ணே! சத்தியமாய்ச் சொல்கிறேன். உன்னை நான் ஒன்றும் செய்யவில்லை. சற்றுக் கை கொடுத்து என்னைக் கரையிலே தூக்கி விடு!" என்றான்.

பூங்குழலி ஹா ஹா ஹா என்று சிரித்தாள். "உன்னைக் கரையேற்றி விட என்னால் ஆகாது! உன் மந்திரத்துக்கு கட்டுப்பட்ட பேய் பிசாசுகளையெல்லாம் கூப்பிடு!" என்றாள்.

ரவிதாஸன் இதற்குள் தொடை வரையில் சேற்றில் புதைந்து போயிருந்தான்.

அவன் முகத்தைப் பார்க்கப் பயங்கரமாயிருந்தது. அவனுடைய கண்கள் கொள்ளிக்கட்டைகள் போலச் சிவப்புத் தணல் ஒளியை வீசின.

கைகளை நீட்டிப் புதை சேற்றுக்கு அப்பால் இருந்த கரையைப் பற்றினான். அங்கே நீண்டு வளர்ந்திருந்த கோரைப் புற்களின் அடிப்பகுதியைப் பிடித்துக் கொண்டான். மறுபடியும் சேற்றிலிருந்து வெளிவரப் பிரயத்தனம் செய்தான். ஆனால் புதைந்திருந்த கால்களை அசைக்கவும் முடியவில்லை.

"பெண்ணே! உனக்குப் புண்ணியம் உண்டு! என்னைக் காப்பாற்று!" என்று ஓலமிட்டான்.



தற்குள்ளே அங்கே சேந்தன் அமுதன் வந்து சேர்ந்தான். ரவிதாஸனுடைய நிலைமை இன்னதென்பதை அவன் ஒரு நொடியில் அறிந்துகொண்டான். அவனுடைய கண்களில் இரக்கத்தின் அறிகுறி புலப்பட்டது.

பூங்குழலி அவனைப் பார்த்து "வா, போகலாம்!" என்றாள்.

"ஐயோ! இவனை இப்படியே விட்டு விட்டா போகிறது!"

"ஏன்? சேற்றில் இவன் முழுதும் புதைகிற வரையில் இருந்து பார்க்க வேண்டுமென்கிறாயோ?"

"இல்லை, இல்லை! இவனை இப்படியே விட்டு விட்டுப் போனால் வாழ்நாளெல்லாம் கனவு காணுவேன். இவனைக் கரையேற்றி விட்டுப் போகலாம்."

"அத்தான்! இவன் என்னைக் கழுத்தை நெரித்துக் கொல்ல நினைத்தான்."

"அவனுடைய பாவத்துக்குக் கடவுள் அவனைத் தண்டிப்பார். நாம் காப்பாற்றி விட்டுப் போகலாம்."

"அப்படியானால் உனது மேல் துண்டைக் கொடு!" என்றாள் பூங்குழலி.

அமுதன் தன் மேல் துண்டைக் கொடுத்தான். அதன் ஒரு முனையைப் புதை சேற்றுக் குழிக்கு அருகில் இருந்த ஒரு புதரின் அடிப்பகுதியில் பூங்குழலி கட்டினாள். இன்னொரு முனையை ரவிதாஸனிடம் கொடுத்தாள்.

"மந்திரவாதி இதோ பார்! இந்தத் துண்டின் முனையைப் பிடித்துக் கொண்டிரு! அதிக பலங்கொண்டு இழுத்தால் வேரோடு வந்து விடும். ஆகையால் மெள்ளப் பிடித்துக் கொண்டிரு. நீயாகக் கரையேற முயலாதே! பொழுது விடிந்ததும் யாராவது இந்தப் பக்கம் வருவார்கள். அவர்கள் உன்னைக் கரையேற்றுவார்கள்!" என்றாள்.

"ஐயோ! இரவெல்லாம் இப்படியே கழிக்க வேண்டுமா? என்னால் முடியாது. அதைக் காட்டிலும் என்னைக் கொன்று விட்டுப் போய்விடு!"

பூங்குழலி அவன் கூக்குரலைப்

பொருட்படுத்தவில்லை. சேந்தன் அமுதனைக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு, வந்த வழியே திரும்பி ஓடத் தொடங்கினாள். அவர்கள் மேட்டின் மேல் ஏறி அப்பால் காட்டில் இறங்கும் வரையில் மந்திரவாதியின் ஓலக் குரல் கேட்டுக் கொண்டிருந்தது.

அந்தக் குரல் மறைந்த பிறகு, "அத்தான்! நல்ல சமயத்தில் வந்து சேர்ந்தாய்! நீ எப்படி இங்கு வந்தாய்? எதற்காக?" என்று பூங்குழலி கேட்டாள்.

"பாதாளச் சிறை அனுபவத்துக்குப் பிறகு தஞ்சாவூரில் இருக்க எனக்குப் பிடிக்கவில்லை. அடிக்கடி பழுவூர் வீரர்களும் ஒற்றர்களும் வந்து தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தார்கள். ஆகையால் பழையாறைக்குப் போனேன். குந்தவை தேவி என்னை இவ்விடம் அனுப்பினார். இளவரசருக்கு அபாயம் அதிகமாகியிருப்பதாகவும், ஆகையால் அவரை நாகப்பட்டினம்



சூடாமணி விஹாரத்தில் கொண்டு சேர்த்து விட்டு வரும்படியும் வந்தியத் தேவனிடம் சொல்லும்படி கூறினார். எனக்கும் உன்னைப் பார்த்து உன் பாட்டைக் கேட்க வேண்டும் என்று ஆசையாயிருந்தது..."

"பாட்டுக் கேட்பதற்கு நல்ல சமயம் பார்த்தாய்! இளைய பிராட்டி கூறியது உண்மைதான். இளவரசருக்கு ஏற்பட் டிருக்கும் கண்டங்கள் இப்படி அப்படியல்ல. பகைவர்களின் சூழ்ச்சிகளோடு குளிர் காய்ச்சல் வேறு வந்து விட்டது..."

"ஆமாம்; நானுந்தான் பார்த்தேன். நாங்கள் இரண்டு பேருமாக அவரைத் தூக்கிக் கொண்டு போய் மறைந்த மண் டபத்தில் சேர்த்தோம். அதற்கு ரொம்பக் கஷ்டப்பட்டுப் போனோம். பூங்குழலி! நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துப் புத்த பிக்ஷுக்கள் வைத்திய சாஸ்திரம் நன்கு அறிந்தவர்கள், இளவரசரைக் குணப் படுத்தி விடுவார்கள்."

"நாகைப்பட்டினத்துக்கு எப்படி கொண்டு போய்ச் சேர்ப்பது?"

"கால்வாய் வழியாகத்தான்!"

"கால்வாய் வழியாக எப்படிப் போவது? படகைத் தொலைத்து விட்டீர்களே?"

"படகு தண்ணீரில் முழுகித் தானே இருக்கிறது? திரும்ப எடுத்து விட்டால் போகிறது!"

"அப்படியானால், இன்று

இராத்திரியே கிளம்பி விட வேண்டியதுதான். அந்தச் சிறிய படகில் நாம் எல்லாரும் போக முடியாதே!''

"வேண்டியதில்லை, பூங்குழலி! அதெல்லாம் நாங்கள் பேசி முடிவு செய்து விட்டோம். வல்லவரையன் இங்கிருந்து நேரே பழையாறைக்குப் போவான். நானும் நீயும் இளவரசரைப் படகில் ஏற்றி நாகைப்பட்டினம் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டியது.''

பூங்குழலிக்குப் புல்லரித்தது. மீண்டும் இளவரசருடன் பிரயாணம்! கால்வாயில், படகில், நாகைப்பட்டினம் வரையில், வழியிலே அபாயம் ஒன்றும் ஏற்படாமல் இருக்க வேண்டும்.

இருவரும் மறைந்த மண்டபத்தை அடைந்தார்கள். மண்டபத்தை நெருங்கியதும் சேந்தன் அமுதன் பலமாகக் கையைத் தட்டினான்.

''யார் அங்கே?'' என்று வந்தியத்தேவனுடைய கடுமையான குரல் கேட்டது.

''நான்தான்; சேந்தன்!''

''இன்னும் யார்!''

''என் மாமன் மகள்!''

வந்தியத்தேவன் மண்டபத்தின் வாசலில் வந்து எட்டிப் பார்த்தான்.

''வேறு யாரும் இல்லையே?''

''இல்லை! ஏன் சந்தேகம்?''

''மெள்ளப் பேசுங்கள்; இளவரசர் தூங்குகிறார். கொஞ்ச நேரத்துக்கு முன்னால் இங்கே யாரோ ஒருவன் வந்தான். நீதானாக்கும் என்று நினைத்து வெளியில் வந்தேன். நீ இல்லை. மந்திரவாதியைப் போல் தோன்றியது.''



''அப்புறம்?''

''அச்சமயம் உன் பாட்டின் குரல் கிளம்பியது. பாடுவதற்கு நல்ல நேரம் பார்த்தாய் என்று எண்ணிக் கொண்டேன். நல்லவேளையாக அதை மந்திரவாதியும் கேட்டு விட்டுத் திரும்பிப் போனான். 'அவனை நீங்கள் பார்த்தீர்களா!''

''பார்த்தோம்.''

''அவனை என்ன செய்தீர்கள்?''

''நான் ஒன்றும் செய்யவில்லை. இவள்தான் அவனைப் புதைசேற்றுக் குழியில் இடுப்பு வரையில் இறக்கி நிறுத்திவிட்டு வந்திருக்கிறாள்!''

''இவளுடைய குரல் கூடக் கேட்டதே!''

''ஆம்; இவளும் ஒரு பாட்டுப் பாடினாள்.''

''அதைக் கேட்டதும் இளவரசருக்குச் சுய உணர்வு வந்தது போலத் தோன்றியது. 'யார் பாடுகிறது?' என்று கேட்டார். 'ஓடக்காரப் பெண்!' என்றேன். பாட்டைக் கேட்டுக் கொண்டே தூங்கி விட்டார்.''

பூங்குழலிக்கு மீண்டும் மெய் சிலிர்த்தது.

''இவன் பாட்டு மட்டுந்தானா பாடினான்? ஆந்தை போலவுங் கத்தினாளே?''

''அதுவும் என் காதில் விழுந்தது. காட்டில் ஏதோ அதிசயம் நடைபெறுகிறதென்று நினைத்துக்கொண்டேன். நீங்கள், - அத்தானும் மாமன் மகளும், வசந்தோத்ஸவம் கொண்டாடுகிறீர்களோ என்று நினைத்தேன்...''

''இது என்ன வீண் பேச்சு?'' என்றாள் பூங்குழலி.

''வேறு என்ன செய்வது? இரவை எப்படியேனும் கழித்தாக வேண்டுமே?'' என்றான் வந்தியத்தேவன்.

''இல்லை; பொழுது விடிந்து இங்கே இருந்தால் தப்பிப் பிழைக்க முடியாது. இராத்திரியே புறப்பட்டாக வேண்டும்.''

அச்சமயம் எங்கேயோ வெகு தூரத்தில் நரிகள் ஊளையிடத் தொடங்கின. அந்த ஊளைச் சத்தத்துக்கு இடையில் ஆந்தைக் குரல் ஒன்றும் கேட்டது.

சேந்தன் அமுதன் நடுங்கினான். அவன் மனக் கண்ணின் முன்னால் மந்திரவாதி சேற்றில் புதைந்திருப்பதும், அவனைச் சுற்றி நரிகள் ஊளையிட்டுக் கொண்டு நெருங்கி நெருங்கி வருவதும், மந்திரவாதி ஆந்தை போல் கத்தி நரிகளை விரட்டப் பார்ப்பதும் தென்பட்டன.

வந்தியத்தேவனும் சேந்தன் அமுதனும் இளவரசரின் தூக்கம் கலையாமல் தூக்கிக் கொண்டார்கள். பூங்குழலி பின் தொடர்ந்து சென்றாள்.

கால்வாயின் கரையை அவர்கள் அடைந்தபோது சந்திரன் உதயமாகியிருந்தது.

கரையில் இளவரசரை ஒரு மரத்தின் பேரில் சாய்ந்து படுக்க வைத்தார்கள். பூங்குழலியை அவர் பக்கத்தில் இருக்கச் செய்துவிட்டு வந்தியத்தேவனும் சேந்தன் அமுதனும் தண்ணீரில் இறங்கினார்கள். முழுகிப் போயிருந்த படகை மிகப் பிரயாசையுடன் மேலே எடுத்துக் கரையோரமாகக் கொண்டு வந்தார்கள்.

இளவரசர் கண் விழித்தார். மிக மெல்லிய குரலில், ''தாகமாயிருக்கிறது!'' என்றார்.

பக்கத்தில் இருந்து அவரைப் பார்த்துக் கொண்டிருந்த பூங்குழலி கெண்டியிலிருந்த பாலை அவருடைய வாயில் ஊற்றினாள்.

சிறிதளவு பால் அருந்திய பிறகு இளவரசர் ''பூங்குழலி! நீதானா? சொர்க்கலோகத்தில் யாரோ ஒரு தேவ கன்னிகை என் வாயில் அமுதத்தை ஊற்றுவது போலத் தோன்றியது'' என்றார்.

(தொடரும்)

# அமரர் கல்கி

## கல்கி கலெக்ஷன்

# மழையே! மழையே! ஒரு இரகு போடு!

**ச**ர்தார் வல்லபாய் படேல் எத்தகைய மகாதீரர் என்பது எல்லாருக்கும் தெரியும். பாரத நாடு சின்னாபின்னமாகாமல் பாதுகாத்தவர் அவர் என்பதும் அனைவரும் அறிந்தது.

ஆயினும் சில சமயங்களில் சர்தாரின் பேச்சுக்களைப் புரிந்துகொள்வது சாதாரண ஜனங்களுக்குக் கொஞ்சம் கஷ்டமாகவே இருக்கிறது. என்ன நோக்கத்துடனே இம்மாதிரி சர்தார் பேசியிருக்கலாம் என்று யோசிக்கும்படியாகவும் இருக்கிறது.

உதாரணமாக, சில நாட்களுக்கு முன் இந்திய சட்டசபையில் சில அங்கத்தினர் "ஐ.சி.எஸ். வர்க்கத்துக்கு இவ்வளவு அதிகப்படி சலுகைகள் ஏன்?" என்று கேட்டு விட்டார்கள். அது விஷயமாக ஆத்திரமாகவும் பேசி விட்டார்கள். எத்தனையோ வருஷ காலம் அதிகார வர்க்கத்தாரின் அமுலையும் ஊழலையும் குறித்து விளாசிக் கொண்டிருந்தவர்கள் அல்லவா? அந்த ஞாபகத்திலே கொஞ்சம் காரசாரமாகவே வெளுத்து வாங்கி விட்டார்கள்.

இவர்களுக்கு சர்தார் வல்லபாய் படேல் பதில் சொன்னார். பதில் சொல்லுகையில் குண்டாந்தடி அடியைப் போல் ஒரு போடு போட்டு விட்டார். "ஐ.சி.எஸ்.காரரர்களைப் பற்றி இப்படியெல்லாம் நீங்கள் பேசுவதாயிருந்தால் அவர்களும் நானும் ராஜினாமா செய்து விட்டுப் போய் விடுகிறோம். அப்புறம் நீங்கள் காங்கிரஸ் ஊழியர்களையே வைத்துக் கொண்டு அரசாங்கத்தைத் திவ்யமாக நடத்திக் கொள்ளுங்கள்!" என்றார்.

இந்தப் பயங்கரமான வார்த்தைகள், உத்தேசித்த பலனை உடனே தந்தன. ஆட்சேபித்த அங்கத்தினர்கள் வாயை இறுகப் பொத்திக் கொணடார்கள். ஐ.சி.எஸ். வர்க்கத்தாரை முன் போலவே 'சொர்க்கத்திலே பிறந்தவர்கள்' (Heavenborn) என்று ஒப்புக்கொண்டு தூபதீப நைவேத்தியங்களைச் செய்யவும் தயாராகி விட்டார்கள்.

சர்தார் வல்லபாய் படேல் எதற்காக அவ்விதம் பேசினார் என்பதை நாம் புரிந்து கொள்ளுவது கொஞ்சம் கஷ்டமான விஷயந்தான்.

உண்மையில் ஐ.சி.எஸ். வர்க்கத்தினர் அவ்வளவு இன்றியமையாத தெய்வப் பிறவியாளர்களா?

அல்லது ஐ.சி.எஸ். வர்க்கத்தில் அயோக்கியர் ஒருவரும் இல்லையென்று தான் சத்தியம் செய்ய முடியுமா?

வங்காளத்திலே ஒரு பெரிய ஐ.சி.எஸ். உத்தியோகஸ்தர், வீடிழந்து நாடிழந்து ஓடி வந்த அகதிகளின் சொத்தில் லட்சக்கணக்காகக் கபளீகரம் செய்து விட்டதாக நடந்த வழக்கு, சென்ற மாதத்திலேதான் முடிவடைந்து, மேற்படி உத்தியோகஸ்தர் மூன்று வருஷம் கடுங்காவல் தண்டனை அடைந்ததாகப் பத்திரிகைகளிலே செய்தி வெளியாகியிருந்தது.

அப்படியிருக்க, ஐ.சி.எஸ். வர்க்கத்தாரை அவ்விதம் ஒரேயடியாக சர்தார் பட்டேல் தூக்கி வைப்பானேன்?

அல்லது காங்கிரஸ் ஊழியர்களைத்தான் அவ்விதம் தொபுகடீரென்று கீழே தூக்கிப் போடுவானேன்?

காங்கிரஸ் ஊழியர்களிலே சிலர்

கேவலமாகவும் காங்கிரஸின் கௌரவத்தையே கெடுக்கும்படியாகவும் நடந்து கொண்டிருக்கலாம்.

அதிலிருந்து காங்கிரஸ் ஊழியர்கள் எல்லாரையுமே கேவலமானவர்கள் என்று தள்ளி விடலாமா?

உண்மையான தேச பக்தர்களும் தியாகிகளும் சன்மார்க்க சீலர்களும் காங்கிரஸ் ஊழியர்களில் எத்தனையோ பேர் இல்லையா?

அவர்களுடைய திறமைக்குத்தான் என்ன குறைவு? உதாரணத்துக்கு ஸ்ரீ காமராஜ் அவர்களைப் பார்க்கலாமே? காங்கிரஸ் ஊழியராயிருந்து தலைவராக வந்தவர் ஸ்ரீ காமராஜ் என்பது அனைவருக்கும் தெரியும். சென்ற சில வருஷங்களில் அவருடைய அதிசயமான நிர்வாகத் திறமை நன்கு வெளியாகி யிருக்கவில்லையா? அது காரணமாக அவருக்கு அகில இந்திய காங்கிரஸ் காரியக் கமிட்டியில் ஸ்தானம் கிடைக்கவில்லையா?

ஆகவே, சர்தார் படேல் அவ்விதம் பேசியதன் நோக்கம் என்ன? ஏதோ அந்தச் சமயத்தில் ஏற்பட்ட படபடப்பினால் பேசி விட்டார் என்று சொல்லக் கூடும். நாம் அப்படிக் கருதவில்லை. ஐ.சி.எஸ். காரர்களின் மனப்பூர்வமான ஒத்துழைப்பு தற்சமயம் தேச நிர்வாகத்துக்குத் தேவையாயிருக்கிறது. அவர்களைத் தட்டிக் கொடுத்து வேலை வாங்குவது அவசியமாயிருக்கிறது. சர்தார் படேல் அவ்விதம் தட்டிக் கொடுத்திருக்கிறார். அந்த வழியில் ஐ.சி.எஸ். காரர்களை சரியாக வேலை வாங்க முடியவில்லையென்றால், அடுத்தபடி வேறு முறையைக் கையாளவும் சர்தார் பின்வாங்க மாட்டார். - இவ்விதம் நாம் சர்தாரின் பேச்சுக்குப் பொருள் கொள்கிறோம்.

● ● ●

சென்ற வாரத்தில் சர்தார் வல்லபாய் படேல் இந்திய முதலாளி வர்க்கத்தை முன்னிட்டு இரண்டு பிரசங்கங்கள் செய்திருக்கிறார். இந்தப் பிரசங்கங்களைப் படிக்கும்போதும் புரிந்து கொள்வது கொஞ்சம் கஷ்டமாகத் தானிருக்கிறது. முதலாளி வர்க்கத்தின் மூர்க்கப் பிடிவாதத்துக்கும் சண்டித்தனத்துக்கும் இந்திய சர்க்கார் பணிந்து சரணாகதி அடைவதைப் போலவே தோன்றுகிறது.

"நீங்கள் எப்படியாவது எங்களுடன் ஒத்துழைக்க வேண்டும். உங்களுடைய வரிகளைக் குறைக்கிறோம். உங்கள் குறைகளைத் தீர்க்கிறோம். நீங்கள் ரொம்பப் பெரிய மனது செய்து இந்தியாவின் தொழில் பெருக்கத்துக்கு உதவி செய்ய வேண்டும்!" என்று கெஞ்சுவது போலவே சர்தாரின் பேச்சு தொனிக்கிறது.

இது மட்டுமா? "இந்திய முதலாளியின் பழைய கள்ளத்தனங்களை யெல்லாம் கவனியாமல் விட்டு விடுகிறோம்" என்கிற வாக்குறுதியும் சர்தாரின் பேச்சில் இருக்கிறது.

"வரி கொடுக்காமல் பதுக்கி வைத்திருக்கும் பணங்களை நிர்ப்பயமாக வெளியில் கொண்டு வந்து தொழில்களில் போடுவதற்கு, அநுகூலமாக ஒரு வழி கண்டு பிடித்துக் கொண்டிருக்கிறோம். யார் பதுக்கி வைத்தது என்றாவது, எத்தனை வரி கொடாமல் ஏமாற்றியது என்றாவது கேள்வி ஏற்படாமல் பார்த்துக் கொள்கிறோம். எப்படியேனும் பதுக்கி வைத்த பணத்தைக் கைத்தொழில்களிலே போட்டால் போதும்!" என்று சர்தார் படேல் சொல்லியிருப்பதைப் பத்திரிகைகளில் படிக்கும்போது, "இப்படிப் பேசுவது நம்முடைய சர்தார் வல்லபாய் படேல்தானா?" என்ற சந்தேகமே நமக்கு உண்டாகி விடுகிறது. "அயோக்யர்களுக்குத்தான் காலம்" என்று சிலர் அடிக்கடி சொல்கிறார்களே, அது வல்லவா உண்மையாகிவிடும் போலிருக்கிறது? வரி கொடாமல் பதுக்கி வைத்தவர்களுக்கு அப்படி இடம் கொடுத்து விட்டால், அயோக்யத்தனத்தை அரசாங்கம் ஆமோதித்தது போலாகுமே?

இந்திய முதலாளிகளுக்கு அவ்வளவு சலுகை காட்ட வேண்டியது அவசியமா? அவர்கள் பதுக்கி வைத்திருக்கும் பணத்தை வெளியிலே கொண்டு

வருவதற்கு வேறு திறமையான வழி எது வும் இல்லாமலா போய் விடும்? திற மைக்குப் பெயர் போன ஐ.சி.எஸ். வர்க் கம் என்ன செய்கிறது? - இத்தகைய கேள் விகள் பொது மக்களின் மனதில் உண்டாகத்தான் செய்யும்.

சென்ற ஐம்பது வருஷத்து இந்திய சரித்திரத்தை ஆராய்ந்து பார்த்தோமா னால் ஒரு விஷயம் நன்கு தெளிவாகும். அதாவது, இந்திய முதலாளிகளில் ஒரு சிலர் தேச பக்தர்களாயிருந்திருக்கின் றனர்; தேசிய இயக்கங்களுக்கு உதவி செய்திருக்கின்றனர். ஆனால் மொத்தத் தில் இந்திய முதலாளி வர்க்கம் தேச நன் மைக்கு விரோதமாகவே இருந்து வந் திருக்கிறது. சுய நலத்தையும் சொந்த லாபத்தையுமே பெரிதாகக் கருதி நடந் திருக்கிறது.

1905 - 1906ல் வங்காளத்தில் எழுந்த சுதேசி இயக்கம் இந்தியா தேசமெங்கும் பரவிற்று. அந்த சந்தர்ப்பத்தைப் பம்பாய் ஆலை முதலாளிகள் பயன்படுத்திக் கொண்டு ஆலைத் துணிகளின் விலை களை உயர்த்திக் கொள்ளை லாபம் சம்பாதித்தார்கள். இதன் காரணமாக, சுதேசி இயக்கம் அபகீர்த்தி அடைந்து தோல்வியுற்றது. மறுபடியும் மகாத்மா காந்தி தலைமைப் பீடத்துக்கு வந்த பிறகு தமது ஆத்ம சக்தியினாலே சுதேசி இயக்கத்தை உயிர்ப்பித்தார்.

சென்ற மகா யுத்தத்தின்போது இந்திய முதலாளிகள் ஒரு பக்கம் காங்கிரஸ் போராட்டத்தில் அநுதாபம் உள்ளவர் களைப் போலக் காட்டிக் கொண் டார்கள். மற்றொரு பக்கத்தில் இரகசி யமாக யுத்த காண்டிராக்டுகள் எடுத் துக் கொள்ளை லாபம் சம்பாதித்தார் கள்.

யுத்தம் முடிந்து இந்தியாவில் சுதந்தர அரசாங்கம் ஏற்பட்ட பிறகு, அதிலும் காந்தி மகான் விண்ணுலகம் எய்திய பிறகு, இந்திய முதலாளிகள் தங்கள் உண்மை சொருபத்தைக் காட்டத் தொடங்கியிருக்கிறார்கள்.

"எங்கள் இஷ்டப்படி அரசாங்கத்தை நடத்துங்கள்; நாங்கள் சொல்லுகிற வரி யைப் போடுங்கள்; நாங்கள் ஆட்சே பிக்கிற வரியை எடுத்து விடுங்கள். நாங் களாகக் காட்டுகிற கணக்கை ஒப்புக் கொள்ளுங்கள்; காட்டாத கணக்கைக் கேட்காதேயுங்கள். இப்படியெல்லாம் நாங்கள் சொல்லுகிறபடி கேட்டு நடந் தால் உங்களுடன் ஒத்துழைப்போம். இல்லாவிட்டால் சண்டித்தனம் செய் வோம். பணத்தை முடக்கி வைப்போம். தொழில்களைச் சுருக்கி விடுவோம். தேசம் நாசமாகி விடும். ஜாக்கிரதை!" என்று முதலாளிகள் பயமுறுத்தி வருகிறார்கள்.

இந்திய முதலாளிகளின் சுயநலப் பற் றும் கொள்ளை லாப மோகமும் எவ்

வளவு உச்ச நிலையை அடையக்கூடும் என்பதற்குச் சமீபத்தில் நாட்டில் ஏற் பட்டிருக்கும் சர்க்கரைப் பஞ்சம் நல்ல உதாரணமாயிருக்கிறது.

சர்க்கரைத் தொழிலை மேற்பார்வை செய்வதற்காக ஏற்பட்டிருக்கும் கமிட் டியார் சமீபத்தில் வெளியிட்டிருக்கும் அறிக்கையில் ''இப்போது ஏற்பட் டிருக்கும் சர்க்கரைப் பஞ்சம் செயற்கைப் பஞ்சந்தான்!'' என்று திட்டமாய்ச் சொல்லியிருக்கின்றனர்.

அதாவது ''சர்க்கரைக் கிராக்கி இயற் கையான காரணங்களினால் ஏற்பட்ட தல்ல, முதலாளிகள் கொள்ளை லாப ஆசையினால் வேண்டுமென்று சிருஷ்டித்த கிராக்கி'' என்று ஏற்படு கிறது.

சென்ற பதினேழு வருஷ காலமாக இந்தியாவின் சர்க்கரைத் தொழிலுக்கு இந்திய சர்க்கார் பாதுகாப்பு அளித்து வந்திருக்கிறார்கள்.

ஜாவா முதலிய வெளிநாடுகளிலிருந்து சர்க்கரையைத் தாராளமாகத் தடை யின்றி இறக்குமதி செய்ய அநுமதித்தால் சர்க்கரை பொது ஜனங்களுக்கு மலிவான விலைக்குக் கிடைக்கும். அவ்வளவு மலி வான விலைக்கு உள்நாட்டில் உற் பத்தியாகும் சர்க்கரையை விற்க முடி யாது. ஆகையால் வெளிநாட்டிலிருந்து இறக்குமதியாகும் சர்க்கரைக்கு ஏராள மான வரி போட்டு வசூலித்து வரு கிறார்கள். வெளி நாட்டுச் சர்க்கரையை வரியுடன் சேர்த்து விற்கும் விலைக்கு உள்நாட்டுச் சர்க்கரை வரி கொடாமல் விற்கப்படுகிறது. இப்படிப் பதினேழு வருஷ காலம் இந்திய சர்க்கரைத் தொழில் பாதுகாப்பைப் பெற்று வருகிறது.

ஆயினும் இந்திய சர்க்கரைத் தொழில் முதலாளிகள் இப்போது எப்படி நடந்து கொண்டார்கள்? வெளிநாட்டுச் சர்க்கரைக்குத் தடை விதித்த நிலைமை யைப் பயன்படுத்திக் கொண்டார்கள். உள்நாட்டில் உற்பத்தியாகும் சர்க் கரையை முழுதும் வெளியில் விடாமல் பதுக்கி வைத்தார்கள். இவ்விதம் செயற்கை முறையில் சர்க்கரைக்குக் கிராக்கி உண்டு பண்ணினார்கள். தலைப்பிலே உள்ள சர்க்கரை ஆலை முதலாளியிலிருந்து சில்லறை மளிகைக் கடை வியாபாரி வரையில் கையிருப் பிலிருந்த சர்க்கரையின் விலையை அசாத்தியமாக ஏற்றினார்கள். சர்க்கரை உபயோகித்துப் பழக்கமான மக்கள் சொல்ல முடியாத கஷ்டங்களை அடைந்தார்கள்.

இது எப்படிப்பட்ட அநியாயம் என்று சொல்லவும் வேண்டுமா? காந்தி மகாத்மா இப்போது ஜீவியவந்தராயிருந் திருந்தால் இந்த அக்கிரமத்துக்குப் பரிகாரமாக ஒரு கடும் விரதம் மேற் கொண்டிருப்பார்.

சர்க்கரை ஆலை முதலாளிகளின் மனோபாவந்தான் பணம் படைத்த முதலாளிகள் பலருக்கும் இருந்து வரு கிறது. அவர்களுடைய பேச்சுகளினாலும் நடவடிக்கைகளினாலும் இது நன்றாய்த் தெரிந்து வருகிறது.

அப்படிப்பட்ட முதலாளிகள் விஷ யத்திலா சர்தார் படேல் இவ்வளவு பணி வாகப் பேசுகிறார்? இப்படி அவர் களுடைய தாவாக் கட்டையைப் பிடித்துக் கெஞ்ச வேண்டிய அவசியம் என்ன? – இதை நினைத்தால் வியப்பாகத்தான் இருக்கிறது.

ஆயினும் சர்தார் வல்லபாய் படேலின் ஆற்றலை நாம் நன்கறிந்திருக்கி றோம். பல அசாத்தியமான காரி யங்களில் அவர் வெற்றி பெற்றிருப்பதை யும் பார்த்திருக்கிறோம்.

ஆகவே இந்திய முதலாளிகளுக்குச் சர்தார் வல்லபாய் படேல் ஓர் இறுதி எச்சரிக்கை விடுத்திருக்கிறார் என்றே நாம் கொள்ள வேண்டியிருக்கிறது. இவ்வளவு பணிவாக வேண்டுகோள் விடுத்த பிறகும் இந்திய முதலாளிகள் சர்க்காருடன் ஒத்துழைக்க முன்வரா விட்டால் வேறு தக்க நடவடிக்கைகள் எடுப்பதற்குச் சர்தார் படேல் ஆயத்தமா யிருக்கிறார் என்றே நம்புகிறோம். ''மயிலே! மயிலே! ஒரு இறகு போடு!'' என்று சர்தார் வல்லபாய் படேல் இந்திய முதலாளிகளைப் பார்த்துக் கேட்பது இதுவே கடைசித் தடவை என்றும் நம்புகிறோம்.

**(கல்கி, நவம்பர் 20, 1949)**

FREE LABELS

LAZY SUMMER 'NOONS ARE FOR READING GOKULAM!





A PAINTING CONTEST WITH APPU AND KUKU

# GOKULAM

*The monthly magazine for children*

MAY '99

Rs. 6/- only

47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097

சிம்ம ராசிக்காரரான ஜெவுக்கு கிரகங்கள் சாதகமா இல்லையாம். மத்த கட்சித் தலைவர்கள்கிட்ட மரியாதையா நடந்துக்கணுமாம்!



# நடக்குமென்பார், நடக்கும்!



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

இந்த வாரம் உங்க காரியங்கள் வெற்றியடையறது, நீங்க மத்தவங்க கிட்ட பழகற விதத்துலதான் இருக்கு. இனிமை யான பேச்சு, புன்னகை மாறாத முகம், மத்தவங் களுக்கு சிறு உதவிகள் செய்யறது - இதெல்லாம் ரொம்ப அவசியம். உல்லாசமா ஏதாவது டூர் போக மாட்டோமான்னு ஏங்குவீங்க. ஆனா, சூழ்நிலை கொஞ்சம் சரியா இல்லையே? பணப் பிரச்னை இருக்காதுதான். அதுக்காக தாம்தூம் செலவு செய்யாதீங்க. வீட்டுல கணவன் மனைவி உறவுல சிறு சலசலப்பு இருக்கும். விட்டுக்குடுத்து நடந்துக்கங்க.



**ரிஷபம் :** (கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)

எத்தனை எத்தனை திட்டம் போடறீங்க! அடேயப்பா, உங்க தன்னம்பிக்கை அபாரமான துங்க. எப்படியும் ஜெயிப்போம்ங்கற உங்க தன்னம்பிக்கை தாங்க உங்களோட மூலதனமே. இந்த வாரம் ஆபீஸ்ல கடுமையான போராட்டங் களைச் சந்திக்க வேண்டி வரும். வீட்டுல சம் சாரம்/வீட்டுக்காரரால சில்லறை நச்சரிப்புகள் இருக்கும். மங்களம்தான். ஆனாலும் உங்க சாமர்த்தியம் காப்பாத்திடும். இத்தனைக்கும் நடுவுல, நல்ல உடல் நலம், உல்லாச அனுபவங் கள், படையப்பாவுக்கு பாக்ஸ் டிக்கெட்னு கலக்குவீங்க. ஷேர் மாதிரி விஷயங்கள் மட்டும் இப்ப வேணாம். சிலருக்கு மட்டும் வீடு, மனை வாங்கற யோகம் இருக்கு.

**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*



சாப்பாட்டுல கட்டுப்பாடு அவ சியங்க. ஹோட்டல் கண்ட இடத்துல யெல்லாம் சடன் பிரேக் போட்டு நின் னுடாதீங்க. இந்த வாரம் உங்க ஸ்டொமக் உங்களுக்கு வில்லனாகற சான்ஸ் இருக்கு. மத்தபடி உங்க நீண்ட நாள் கனவு ஒண்ணு இப்ப நிறைவேறலாம். அரசாங்கத்தால ஏதாவது அனுகூலம் நடக்கும். விருந் தாளிகள் பலர் உங்களைத் தேடி வரு வாங்க. வாரக் கடைசில ஒரு லெட் டரோ, போன்காலோ நீங்க எதிர் பாராத சமயத்துல வந்து குஷிப்படுத் தும். பெண்டாட்டி பிள்ளைங்களோட எங்கி யாவது வெளியூர் போயிட்டு வரவேண்டிய தானே? அதான் எதிர்பாராத பணவரவு வேற இருக்குதே?



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

வெயில் ஏன் வீணாப் போகு துன்னு ரொம்ப அலைவீங்க. உடம்பைப் பார்த் துக்கங்க. ஏன்னா, மருத்துவச் செலவைத் தாங்கக் கூடிய அளவுக்கு இந்த வாரம் பொருளாதார நிலைமை அவ்ளோ திருப்தியா இல்லை. ரொம்ப வேண்டப்பட்டவங்க யாராவது வேற கடன் கேட்கலாம். உதட்டைப் பிதுக்கிட்டு, முழிக்கா தீங்க. உங்க நிலைமையை விளக்கிச் சொல்றது மூலமா நல்லுறவைக் கெடுத்துக்காம இருக்க லாம். பணம்தான் சிக்கலே தவிர, வீட்டுல மகிழ்ச்சிக்குக் குறைவிருக்காது. சிலருக்குப் புதிய வேலை வாய்ப்பு வரும். ப்ரமோஷன் கூட நடக்க லாம். பெண்களுக்கு தாய் வழியில ஏதாவது உதவி கிடைக்கும்.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

கிரகங்கள் சாதகமா இல்லை. நீங்க எச்சரிக்கையா இருக்க வேண்டியது அவசியம். வீண் செலவுகள், வாக்குவாதங்கள் வேண்டாம். பயணத்துல எச்சரிக்கை அவசியம். டூ வீலர் பயணம் இந்த வாரம் வேணாம். சிறு விபத்துகள் - அட்லீஸ்ட், நடு ரோடுல டயர் பஞ்சர் ஆகற துக்காவது சான்ஸ் இருக்கு. தெரு நாய்கள் கிட்ட உஷாரா இருங்க. மேலதிகாரிகள் கிட்ட (வீட்டு லேயும்!) மரியாதையா நடந்துக்கங்க. கடன் அன்பையும் எலும்பையும் முறிக்கும். ஸோ, அது வும் வேணாம். இந்த வாரம் மௌனமா இருக் கறது மூலம் பல பிரச்னைகள் லேருந்து நீங்க தப்ப முடியும்.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம்*

வரை)

பலருக்குக் கல்யாண யோகம் வந்திருக்கு. வீட்டுல மகிழ்ச்சிக்குக் கேக்கணுமா? டௌரி கேட்டு பெண் வீட்டார் மகிழ்ச்சியைக் கெடுக்காம இருங்க. புது வீடு, மனை வாங்கறதுக்கு சரியான டைம். சிலருக்கு அரசாங்க அனுகூலமும் இருக்கு. பெண்களுக்குப் புதுப் புடைவைகள் நிறைய சேரும் வாய்ப்பு இருக்கு. வெளியூர் பயணங்களால நல்ல ஆதாயம் உண்டு. பெரியவங்க கிட்ட கருத்துக் கேட்டுத் தொடங்கற புது முயற்சிகள் கட்டாயம் வெற்றி பெறும். வயசானவங்களுக்கு மட்டும் கால் சம்பந்தமான சிறு உபாதைகள் இருக்கும்.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

ரொம்ப குழம்பறீங்க. சின்ன விஷயங்களுக்கு ஏன் நிறைய அலட்டிக்கறீங்க? இந்த வாரம் நீங்க ஆபீஸ்ல நிறைய டோஸ் வாங்க வேண்டி வரும். சக ஊழியர்கள்கிட்ட கசப்புணர்வு உண்டாகும். காரணம்? உங்க மூடு சரியா இல்லாததுதான். புது ப்ராஜக்ட் எதுவும் இப்ப தொடங்காதீங்க. வெயில்ல அலையறதைக் குறைச்சிக்கங்க. வாரக் கடைசில நிலைமை கொஞ்சம் சீராகும். சில அனுபவங்கள் நிகழும். அதுவரைக்கும் சைலண்டா இருக்க முயற்சி பண்ணுங்க.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உடல் ஆரோக்கியம் சீரா இருக்கும். மனசுல புதுப்புது திட்டங்கள் உருவாகும். வீடு, மனை வாங்கற யோகம் சிலருக்கு இருக்கு. ஆனா, கடன் மட்டும் வாங்கிடாதீங்க. வேலையில்லாம திரிஞ்சிட்டிருக்கவங்களுக்கு நல்ல வேலை கிடைக்கும். சிலருக்கு வெளிநாடு சான்ஸ் கூட வரலாம். ஆனா, வீட்டுல கொஞ்சம் பிரச்னைகள் வரும். கணவன் - மனைவி உறவுல லேசான ஊடல்கள் வரலாம். எதிலும் நீங்க விட்டுக் கொடுத்துடறது ரொம்ப நல்லது. மூத்த பையன்/பெண் மூலமா ஒரு நல்ல செய்தி வந்து சேரும். எழுத்தாளர்கள், கணிதத் துறைக்காரங்களுக்குப் புகழ் கூடும் வாரம் இது.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

நிறைய ட்ராவல் பண்ணுவீங்க. வெளி இடங்கள்ல சாப்பிட வேண்டி வரும். எச்சரிக்கையா இருங்க. சட்டுனு ஏதாவது உடம்புக்கு வந்து அவஸ்தைப் படப் போறீங்க. இந்த வாரம் உங்க பிளான் எல்லாம் சரிவர நடக்கும். எதிர்பார்த்த உதவிகள் கிடைக்காது. பணப் பிரச்னை இருக்காது. ஆனா, சிலருக்குப் பொருள் நஷ்டம் ஏற்படலாம். பிக்பாக்கெட்காரங்க கிட்ட உஷாரா இருங்க. ரெண்டுல கேது, எட்டுல ராகு உலவறதால, வீட்டுல ஏதாவது பிரச்னை வரலாம். எதையும் புத்திக் கூர்மையோட அணுகணும். உங்களுக்குத் தெரியாதா என்ன?



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

சும்மா ஃப்ரிட்ஜ்ல வெச்ச தக்காளிப் பழம் மாதிரி குளுகுளுன்னு இருக்குமே மனசு? கல்யாணம், ப்ரமோஷன், அதிகப் பண நடமாட்டம்னு ஒண்ணு மேல ஒண்ணா பல ஜாலி சமாசாரங்கள் நடந்தா இருக்காதா பின்னே? இந்த வாரம் உங்களுக்கு உல்லாச அனுபவங்கள் பல கிடைக்கும். புதிய பாய்/கேர்ல் ஃப்ரெண்ட் கிடைப்பாங்க. புதுப் பொருள் சேர்க்கையும் கிடைக்கும். வீட்டுல இருந்து வந்த பிரச்னைகள் வரிசையா தீரும். இனி கொஞ்ச நாளைக்கு உங்க காட்டுல கன மழைதான்!



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

சீரான வாழ்க்கைன்னா அது உங்களுக்குத்தாங்க. இந்த வாரம் ஃப்ளாட், மனை ஏதாவது வாங்குவீங்க. வீட்டுல மகிழ்ச்சிகரமான காரியங்கள் ஏதாவது நடக்கும். உங்க மகன் அல்லது மகள் மூலம் புகழ் வந்து சேரும். சிலருக்கு திடீர் பொருள் சேர்க்கை, வெளிநாடு சான்ஸ் கூட வரலாம். ஆனா அதிக அலைச்சல் மூலம் உடம்பைக் கெடுத்துப்பாங்க. கால் சம்பந்தமான பிரச்னை ஏதும் வரலாம், உஷாரா இருங்க. வயசானவங்களுக்கு எதிர்பாராத விதமான புதுப் புடைவை வேஷ்டி யோகம் இருக்கும்!



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

கிரகங்கள் சாதகமா இல்லை. உங்க ஒவ்வொரு நடவடிக்கையையும் யோசிச்சி செய்யுங்க. ஆபீஸ்ல உங்களை மட்டம் தட்ட ஒரு கும்பல் காத்துட்டிருக்கு. கவனமா நடந்துக்கங்க. வீண் விவாதங்கள்ல கலந்துக்க வேணாம். கடன் வாங்காதீங்க. அதிக செலவு செய்யாதீங்க. வீட்டுல ஏதாவது பிரச்னையும் தொடர்ச்சியா சிறு சச்சரவும் வரும். எல்லாரையும் அனுசரிச்சி நடந்துக்கங்க. உங்க பலவீனத்தைப் பயன்படுத்தி நண்பர்கள் கூட உங்களை ஏமாற்றப் பார்க்கலாம். எச்சரிக்கை! எச்சரிக்கை! ரொம்ப எச்சரிக்கை! ○

## ஏப்ரல் 21 முதல் 27 வரை

## அக்னிசர்மா பக்கம்

**அஞ்சலி** தகழி சிவசங்கர பிள்ளை என்றதும் உடனே நம் நினைவுக்கு வருவது 'செம்மீன்' தான். நாவலாக வந்து இலக்கியவாதிகளின் கவனத்தைப் பெற்றதென்றால், திரைப்படமாக வந்து அனைவரின் கவனத்தையும் ஈர்த்தது. எழுதுவதும் விருதுகள் பெறுவதும் பெரிதல்ல. சமூக அக்கறையுடனும் பொறுப்புடனும் எழுதுவதுதான் பெரிது. அதைச் செய்தவர் தகழி. மலையாள இலக்கியத்தின் நவீனத்துக்கு வித்திட்டவர்களில் மட்டுமல்ல; மலையாள இலக்கியத்தின் மீது உலகளாவிய பார்வைபடச் செய்தவர்களிலும் தகழி மூக்கியமானவர்.



கைகளை நீட்டியவாறு, தலையை ஒரு பக்கமாகச் சாய்த்து, வார்க்கச்சை அவிழ்ந்து, ஒட்டிய வயிறுடன், சற்றே மலர்ந்த உதடுகளுடன், பாதி திறந்த விழிகளால் உயரப் பார்த்துக் கொண்டிருக்கும் சிலுவையில் அறையப்பட்டிருந்த அந்த உருவத்தைத் திரேஸ்யா உற்று நோக்கினாள். அணையப்போகும் விளக்கின் மங்கிய ஒளியில் அந்த உதடுகள் அசைவதாக அவளுக்குப் பட்டது. கர்த்தர் என்னவோ சொல்லவிரும்புகிறார் என்று அவள் உள்ளூர எண்ணினாள். ''கருணை கூர்ந்து காத்தருளும்'' என்று தாயார் திரும்பவும் ஜபித்தாள். ஆனால் திரேஸ்யா அதை மறு மொழியவில்லை.

பக்கத்தில் படுத்துத் தூங்குகின்ற ரோஸா அப்படியும் இப்படியுமாகப் புரண்டு கொண்டிருந்தாள். திரேஸ்யா மறுபடியும் கேட்டாள்:

## தகழி சிவசங்கர பிள்ளை

# மாத்தனின் கதை

"அம்மா! அப்பா இன்னைக்கும் வரமாட்டாரா?'' - ஜபித்துக் கொண்டிருப்பதற்கிடையில் திரேஸ்யா தன் தாயாரிடம் கேட்டாள்.

ஜபித்துக் கொண்டிருக்கையிலும், துறையில் படகு நெருங்கும் சத்தம் கேட்கின்றதா என்று கவனித்துக் கொண்டிருந் தாள்

"அப்பா வராவிட்டால் நாம் எப்படி அம்மா இராச் சாப்பாட்டைச் சாப்பிடறது?''

அந்த இல்லாள் சொன்னாள்: ''வருவார் கண்ணு, அப்பா இன்னைக்கு நிச்சயம் வருவார்.''

''அம்மா! இதோ விளக்கு அணையப் போறது!''

மரியம். அவள் சொன் னாள் :

"வருவார் கண்ணு, இன்னைக்குக் கட்டாயம் வருவார்.''

மரியம் அன்றைய அப்பத்திற்காகப் பிரார்த்தித்தாள். கிடைத்த அப்பத்திற்காகக் கர்த்தருக்கு நன்றி கூறினாள். திரேஸ்யா அதை மறுமொழிந்தாள்.

மரியம் சிம்னி விளக்கை எடுத்துக் குலுக்கிப் பார்த்தாள்.

அந்தி மயங்கியது. மழை மேலும் பலமாகத் தூறிக் கொண்டிருந்தது. கூடவே

காற்றும் வீசியது.

மரியம் கண்களை மூடி மௌனமாக உட்கார்ந்திருந்தாள். மௌனப் பிரார்த்தனையை இதுவரை யாராலும் எழுத்தில் எழுத முடியவில்லை. ஆள் உயரத்தில் அலையடிக்கும் காயலைக் கடந்து, பிரசண்ட வேகத்தில் பாயும் ஆற்றின் பிரவாகத்திற்கு எதிராகப் படகு செலுத்தி மலையடிவாரம் வரை போயிருந்தான் அவள் கணவன். பார்வைக்கு எட்டுமட்டும் காயலின் மறுகரை தெரியாது. காக்கைக் குஞ்சு பறப்பது கூடத் தெரியாது. ஆற்றில் ஆங்காங்குச் சுழிகளும், மலரிகளும் உள்ளன. கையில் இருக்கும் மூங்கில் கம்பு உடைந்தால்... மரியம் கர்த்தரின் பாதங்களைக் கட்டிப் பிடித்தாள். அவளுக்கு இருப்பதோ இரண்டு பெண் குழந்தைகள்.

திரேஸ்யா கேட்டாள்: "அப்பா இந்த மழையில் நனையமாட்டாரா? ஜுரம் வந்தால் என்ன செய்யறது?"

மரியம் கண்களைத் திறந்தாள். திரேஸ்யா சொன்னதைத்தான் இப்போது அவளும் யோசித்துக் கொண்டிருந்தாள். இதோ விளக்கு அணையப் போகிறது! துறையில் படகு வந்தடைந்த சத்தம் கேட்டதுபோல் இருந்தது. தாயும் மகளும் வெளியே பார்த்தார்கள். கும்மிருட்டு. எதையும் காண முடியவில்லை. மறுபடியும் சத்தம்!

"அம்மா! அப்பா வந்துட்டார்!"

''கண்ணு திரேஸ்



யாம்மா!" - வெளியே கூப்பிடும் குரல் கேட்டது. "அந்த விளக்கை இப்படி எடுத்து வாம்மா!"

"அப்பா! விளக்கிலே எண்ணெய் இல்லை." இருந்தாலும் திரேஸ்யா விளக்கை எடுத்துக் கொண்டு வாசற்பக்கம் போனாள். அதற்குள் அது அணைந்து விட்டது.

மாத்தன் வாசற்படியண்டை வந்தான். அவன் கையில் ஒரு மூட்டையும் இருந்தது.

"கண்ணு! அந்த விளக்கைக் கொஞ்சம் ஏற்றேன்."

"நெருப்புப் பெட்டி இல்லையே, அப்பா!"

தந்தையைக் கட்டி அணைத்துக் கொள்வதற்காக திரேஸ்யா இரண்டு கைகளையும் நீட்டித் தேடிக் கொண்டிருந்தாள். ஆனால் அப்பா எங்கே இருக்கிறார் என்று அவளுக்



"கம்பெனிக்காரங்க ஜனங்களை முட்டாளா நினைக்கறாங்க..."

"எப்படி?"

"எங்க கம்பெனி கூல்டிரிங்ஸ் வாங்கிச் சாப்பிடுங்கள்; பாட்டிலுக்கு உள்ளே கார் இருந்தால் அதை நீங்களே எடுத்துக்கொள்ளலாம்னு விளம்பரம் பண்றாங்க!"

– பா. ஜெயக்குமார்

குத் தெரியவில்லை. இதற்குள் ரோஸாவும் விழித்துக் கொண்டாள். அப்பாவைத் தேடிக் கட்டி அணைக்கும் முயற்சியில் ரோஸாவின் தலை திரேஸ்யாவினுடைய உதடுகளுடன் இடித்துக் கொண்டது.

"அடுப்பிலே நெருப்பில்லையா கண்ணு?" என்று கேட்டான் மாத்தன்.

"இன்று அடுப்பே மூட்டலே அப்பா!"

மாத்தனின் உடலுக்குள் ஒரு ஜுவாலை புகுந்ததுபோல் இருந்தது. இன்று அடுப்பு மூட்டவில்லை!

"என் குழந்தைகள் எதுவுமே சாப்பிடலையா? ஏண்டி, குழந்தைகளுக்கு ஒன்றுமே கொடுக்கலையா?"

"அப்பா நனைந்திருக்காரு!" என்றாள் ரோஸா. அவள்தான் முதலில் அப்பாவைக் கட்டி அணைத்துக் கொண்டது.

"அவளுக்குக் காலையிலும் மத்தியானமும் சாப்பாடு கொடுத்தேன். சாயரச்சே ஏதும் கொடுக்க முடியவில்லை" என்றாள் மரியம்.

பக்கத்து வீட்டிலிருந்து இரண்டு வேளையும் குழந்தைகளுக்குச் சாப்பாடு கிடைத்தது. அன்று அவளால் வேலை ஏதும் செய்ய முடியவில்லை. நாள் முழுவதும் விடாமல் மழை பெய்து கொண்டிருந்தது. பலமான காற்று வேறு. வீட்டிலோ எதுவும் இல்லை.

"அப்படியானால் நீ ஒன்றுமே சாப்பிடவில்லையா?" என்று மாத்தன் மனைவியிடம் கேட்டான்.

அவள் தன் நிலையைச் சொன்னாள்: "சுருக்கமாகச் சொன்னால்... இல்லை."

மகளைக் கீழே இறக்கிவிட்டு மாத்தன் நெருப்பு கொண்டு வருவதற்காக வெளியே போனான். அன்று நள்ளிரவிற்குப் பிறகுதான் அந்த வீட்டில் வெளிச்சம் அணைந்தது. அதற்குப் பிறகும், கணவனும் மனைவியும் வெகுநேரம் வரையில் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"அவர் மூன்று ரூபாய் கூலி கொடுத்தார். பிறகு காரில் ஏறி எர்ணாகுளம் போய் விட்டார்" என்றான் கணவன்.

"அப்போ இந்த நாலு சக்கரம் எங்கிருந்து வந்தது?"

"அதுவா? முந்தாநாள் பாலாயிலே காப்பி குடிப்பதற்காக அவர் கொடுத்தார். பழங் கஞ்சி இருக்கவே, நான் காப்பி குடிக்கலே."

"இந்த அரிசி எங்கிருந்து?"

"வழிச் செலவுக்குத் தந்ததிலே மிச்சம் பிடிச்சேன். ஆமாம் எவ்வளவு இருக்கு?"

"இரண்டு ஆழாக்கு!"

மாத்தன் பாலாய்க்குப் போன பிறகு வீட்டில் எப்படிக் காலட்சேபம் நடந்தது என்பதை மரியம் விவரித்தாள். 'மற்றக் காட்டு'க்குத் தென்னோலை முடைவதற்காக அவள் இரண்டு நாள் போனாள். ஒன்பது சக்கரம் கிடைத்தது. இன்னொருநாள் நெல் குற்றப் போனாள். நான்கு தேங்காய்கள் பறித்துக் கொடுத்தாள். இன்று மழையாயிருக்கவே எந்த வேலையும் அவளால் செய்ய முடியவில்லை. "அதுக்காக நான் குழந்தைகளைப் பட்டினி போடலே" என்றாள் மரியம்.

"ஆனால், நீ பட்டினி கிடந்தே; அப்படித் தானே?"

மீண்டும் அங்குச் சிறிது நேரம் மௌனம் குடிகொண்டது. அது நித்திரையின் நிசப்தம்

அல்ல; துயரம் நிறைந்த அமைதி; எந்த நிமிடமும் அது கலையக்கூடும்!

"இப்போ எவ்வளவு சேர்ந்திருக்கு?"

"இதையும் சேர்த்தால் பதினாலு ரூபாய் ஆச்சு."

"எல்லாவற்றையுமே கொடுக்கப் போறீங்களா?"

"பின்னே கொடுக்காமே? ஒரு வருஷமாகச் சேர்த்து வைத்தும் இவ்வளவுதானே ஆச்சு! அவளுக்கு வயசு எட்டாச்சே! இனி அஞ்சோ ஆறோ வருஷம்தானே இருக்கு."

"எல்லாவற்றையும் கொடுத்தால் நாளைய பொழுதை எப்படிக் கழிக்கிறது?"

"கவலைப்படாதே... எப்படியாவது நடக்கும்."

சற்று நேரம் பேசாமல் இருந்தபின் மாத்தன் மறுபடியும் கூறினான்: "பத்து ரூபாய் அதிகம் கொடுக்க முடிந்தால் அதுக்குத் தகுந்த பையன் கிடைப்பான். அதுக்கு நாம் இப்போ கொஞ்சம் கஷ்டப்படணும்."

கணவனின் கூற்றை மனைவி சரி என்று ஒப்புக் கொண்டாள்.

எதிர்காலத்திற்கான திட்டங்களைத் திட்டிக் கொண்ட அவர்கள், கனவுகள் கண்டிருக்கலாம்... மகளின் திருமணம்... வீடு... வாசல்... இப்படி என்ன என்னவோ!

**பொ**ழுது விடிவதற்குள்ளாகவே மாத்தன், முதலாளி சாக்கோவின் வீட்டை அடைந்தான். அவனுக்கு முன்பாக அவரைக் காண ஐந்தாறு பேர் அங்குக் கூடியிருந்தார்கள்.

சாக்கோ ஊரிலே பெரிய பணக்காரர். வீடுகளும் நிலபுலங்களும் ஏராளம். அவரிடமிருந்த பணத்தைப் பற்றி எத்தனையோ கதைகள் வழங்கின. எந்த வம்புக்கும் போகமாட்டார்; சில்லறை விஷயங்களில் தலையிடமாட்டார். எல்லோரிடமும் இன்முகத்துடன், இனிக்க இனிக்கப் பேசுவார். அவர் கடவுள் பக்தியைப் பற்றி எவ்வளவு புகழ்ந்தாலும் தகும். ஒரு ஞாயிற்றுக்கிழமையாவது மாதாகோவிலுக்குப் போகத் தவறியதில்லை. கடவுளை முன் நிறுத்தித்தான் எதையும் பேசுவார். அண்மையில் ஊர் மாதாகோவிலுக்கு ஆயிரம் ரூபாய் நன்கொடை அளித்தார்.

சாக்கோ தூங்கி எழுந்து வெளியே வந்தவர் மாத்தனைப் பார்த்தார். பார்த்து அவர் கேட்டார்: "எப்போ வந்தே, மாத்தா?"

"நேற்று ராத்திரி."

மாத்தன் முதலாளி சாக்கோவைத் தனிமையில் சந்திக்க நினைத்தான். ஆனால் ஐந்தாறு பேர் அவர் பேட்டிக்காக அங்கே காத்திருந்தார்கள். எனவே, என்ன செய்வது என்று புரியாமல் அவன் தயங்கினான்.

அப்போது சாக்கோவின் மகள் அங்கே வந்து, "காப்பி தயார்" என்று சொன்னாள். வந்திருந்தவர்களைச் சற்று நேரம் இருக்கச் சொல்லிவிட்டுச் சாக்கோ உள்ளே போனார். இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு மாத்தன் அவர் பின்னால் போனான். சற்று நேரத்திற்கெல்லாம் மாத்தன் திரும்பி வந்தான். அப்போது அவன் முகத்திலிருந்த மகிழ்ச்சியைப் பார்க்க வேண்டுமே! ஏதோ பெரிய சாதனை புரிந்தது போன்ற மன நிறைவு. அவன் தன்னிடமிருந்த மூன்று ரூபாயைப் பத்திரமாகச் சாக்கோவிடம் சேமிப்புத் தொகையாகக் கொடுத்தான். அவனது வாழ்க்கையின் அனைத்துமான திரேஸியாவின் வரதட்சிணைக்காகப் பதினான்கு ரூபாய் சேர்த்தாகிவிட்டது!

வீட்டுத் தேவைக்குக் கொஞ்சம் விறகு பிளப்பதற்காக மாத்தனை வடக்கு முற்றத்திற்கு வரும்படி சாக்கோவின் மனைவி கேட்டுக் கொண்டாள். விறகு பிளந்தபிறகு ஏதோ காரியத்திற்காகச் சாக்கோ கூப்பிட்டார். அவருக்கு அக்கரை போக வேண்டியிருந்ததால் மாத்தன் படகு செலுத்த வேணும், அவ்வளவுதான்.

படகில் போகும்போது, முதலாளி சாக்கோவின் பேரும் புகழும் எங்கெல்லாம் பரவியுள்ளது என்பதை மாத்தன் விவரித்தான். பாலாயிலே சாக்கோவைத் தெரியாதவர்களே கிடையாது. ஊர்ப் பேரைச் சொன்னாலே போதும்; சாக்கோ ஐயாவைத் தெரியுமா என்று கேட்கிறார்கள். ஐயா மகளுக்கு ஒரு



"நம்ம தலைவர் முகத்துலே '8'ன்னு நம்பர் பதிஞ்சிருக்கே! அது என்ன?"

"நம்ம தலைவியுடைய 'ஹைஹீல் ஷு' அளவு!"

— சம்பத் குமாரி

வரன் கூட மாத்தன் பார்த்து வைத்திருக்கிறான். அப்பாவுக்கு ஒரே பிள்ளை. கோடிசு வரன். தோட்டங்களோ ஏராளம். 'ஆகட்டும், பார்க்கலாம்' என்றார் சாக்கோ. அக்கரையிலிருந்து திரும்பி வந்ததும் மாடுகளுக்குத் தீவனம் வைக்கும் வேலையை மாத்தன் மேற்கொண்டான். அதன் பின் தென்னை ஓலையைப் பிளந்தான். பிறகு பத்து கலம் நெல் அளக்க வேண்டியிருந்தது. அப்படியும் இப்படியுமாக வெகு நேரமாகி விட்டது.

மாத்தனால் சரியாக நிமிர்ந்து கூட நிற்க முடியவில்லை. கை கால்கள் தள்ளாடுவது போல் தோன்றின. சாக்கோ வீட்டுச் சமையல்காரியிடம் ஒரு குவளை வெந்நீர் கேட்டான். உலையில் அரிசி வெந்து கொண்டிருந்தது. அதனால் அவளால் வெந்நீர் தர இயலவில்லை. அப்போது சாக்கோ முதலாளி வந்தார்.

"என்னப்பா, இப்போ வெந்நீர் கேட்கறே?"

சிறிது வெட்கத்துடன் மாத்தன் சொன்னான்: "ஒண்ணுமில்லை, கொஞ்சம் களைப்பா இருக்கு."

"மத்தியானம் மூக்குப் பிடிக்கச் சாப்பிட்டிருப்பே?"

"சாப்பாடு ஏதுங்க?"

"ஏன்?"

"வீட்டில் ஏதாவது இருந்தால்தானே?"

அப்போது சில தொழிலாளிகள் கூலி வாங்குவதற்காக அங்கே வந்தார்கள். "நீ அவங்களுக்குக் கூலி நெல்லைக் கொஞ்சம் அளந்து கொடேன்" என்றார் முதலாளி சாக்கோ மாத்தனிடம்.

**"உங்க பையன் ரஜினி ரசிகனா?"**
**"எதுக்காகக் கேட்கறீங்க?"**
**"ஜலதோஷம் வந்தாக் கூட ரஜினி குரல்ல இரும வழி உண்டான்னு கேட்கறான்!"**
**– அம்பை தேவா**



கூலி நெல்லை அளந்து கொடுத்து முடித்தபோது அந்திப் பொழுதாகிவிட்டது. சாக்கோ ஜபத்துக்குப் போக வேண்டிய நேரம் வந்து விட்டது. நிலைகுலைந்த உள்ளத்தோடு மாத்தன் தலையைச் சொறிந்தவாறு சாக்கோவைப் பின் தொடர்ந்தான்.

"என்னப்பா இன்னுமா போகலை?" – சாக்கோ மாத்தனிடம் கேட்டார்.

"நாலு படி நெல் வேணுமுங்க."

"நெல்லா? எதுக்கு?"

"வீட்டிலே குழந்தைகளுக்குச் சாப்பிட ஒண்ணுமில்லைங்க."

"ஜபம் முடித்துக் கொண்டு வருகிறேன்."

நாலு படிக்குப் பதிலாக ஆறு படி கேட்டிருக்கலாமோ என்று எண்ணினான் மாத்தன்.

காலம் ஏழையின் வாழ்க்கையிலும் பல நிகழ்ச்சிகளைப் புரிந்து கொண்டு தன் பயணத்தைத் தொடர்ந்தது. இன்னும் எப்போதாவது மாத்தன் பாலாய்க்குப் படகோட்டிச் செல்வதுண்டு. ஆனால் முன் போல் அவன் உடலில் பலம் இல்லை. அவனால் படகு செலுத்தவோ, கடினமான வேறு வேலை செய்யவோ முடியாது என்பதனால் மக்கள் அவனை ஒதுக்கலாயினர்.

சமயம் போதுக்குத் தன் படகிலும் பயணம் செய்யும்படி மாத்தன் மக்களிடம் கெஞ்சுவான். வேறு படகு ஏதும் கிடைக்காவிட்டால் மாத்தனுடைய படகில் பயணம் செய்வார்கள். ஏதாவது கொடுத்தால் போதும் என்றாலும் அவன் பேரம் பேசுவான். சாக்கோ முதலாளி வீட்டில் மாத்தன் செய்யக்கூடிய எடுபிடி வேலைகள் நிறைய இருந்தன. வேறு எந்த வேலையும் கிடைக்காவிட்டால் மாத்தன் முதலாளி சாக்கோவின் வீட்டிற்குப் போவான். மாலையில் வேலையாட்களுக்குக் கூலி நெல் அளந்து கொடுக்கும் போது அவனும் இரண்டு, மூன்றுபடி நெல் கேட்டு வாங்குவான். மரியத்துக்கும் அங்கே வேலை இருக்கும். எப்படியோ நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. ஆனால் இப்படி நாட்களைப் போக்கினால் மட்டும் போதுமா?

உடுக்க வேண்டாமா? கூரை வேய வேண்டாமா? மாதா கோவிலுக்கு வேண்டிக் கொண்டுள்ள நேர்த்திக் கடன்களை நிறைவேற்ற வேணும். குழந்தைகளின் படிப்புச் செலவு வேறு. எல்லாமே சாக்கோமுதலாளியின் தயவினால்தான் நடந்தன. இதற்கிடையில் யாருக்காவது நோய் நொடி வந்தால்

வைத்தியச் செலவுக்கும் சாக்கோ முதலா ளியே உதவினார்.

"அவர் இல்லாவிட்டால் நம் கதி என்ன?" என்று மாத்தன் மனைவியிடம் அடிக்கடி சொல்வதுண்டு.

"நானும் அதைத்தான் யோசிக்கிறேன்."

ஆம், அவர்கள் கதி என்னவாயிருக்கும்? திங்களைக் காக்கும் தேவனாக தோன்றினார் சாக்கோ. அவர்களிடம் முகம் சிணுங்க ஒரு வார்த்தை பேசினதில்லை அவர். என்ன இரக்கம்! என்ன பரிவு! அவருடைய கடவுள் பக்திதான் என்ன! இப்படி இருப்பதனால் தான் சாக்கோ ஐயாவுக்கு செல்வம் கொழிக் கிறது!

அந்த ஏழையின் கனவுகள் எல்லாமே, தன் செல்வங்களின் எதிர்காலத்தை எப்படி உருவாக்க வேண்டும் என்பதுதான். அவர் களது வாழ்க்கைச் சாதனைகள்தாம் எவ் வளவு குறைச்சல்; நொடிப் பொழுதில்கூறி முடித்துவிடலாம். குழந்தைகள் பிறந்தன. அந்த இளம் பிஞ்சுகளின் கைகால்கள் அசைந்தன. அவை தவழ்ந்தன; உட்கார்ந்தன; மண்டியிட்டு நடந்தன; இவ்வாறு அந்தச் சின்னஞ் சிறுசுகள் வளர்ந்தன. சின்ன வேட்டியை உடுத்தி அந்தக் குழந்தைகள் பள்ளிக்கூடம் போகலாயின.

இது மட்டுமா அவர்கள் சாதித்தது? குழந் தைகள் வளர்கையில் அவர்கள் தங்கள் மனத்தில் ஒரு கணக்கும் போட்டு வைத்திருந் தார்கள். நாட்கள் செல்லச் செல்ல அந்தக் கணக்கும் வளர்ந்து கொண்டிருந்தது. இப்படி யாக ஒரு தொகை பெருகிக் கொண்டிருந்தது. அது தொண்ணூறு ரூபாயை எட்டியது!

கடமை உணர்வு அவர்களது வாழ்க்கைக் குத் தூண்டுகோலாக அமைந்தது.

தங்களுக்கும் குழந்தைகள் இருக்கிறார்கள் எனும் எண்ணமே அவர்களைப் பொறுத்த வரை அவர்களது உயிர்மூச்சு. அவர்கள் உயிர் வாழ்வதே குழந்தைகளுக்காகத்தான். இரவில் தூங்குவதற்கு முன் கணவனும் மனைவியும் கணக்குக் கூட்டிப் பார்க்கத் தவறியதில்லை. தொகை பெருகுவதினால் அவர்கள் மனநிறைவு பெற்றார்கள். ஆம், அந்தத் தொகை வளர்ந்து கொண்டிருந்தது. இப்படிப் பெருகிப் பெருகி...

"எத்தனை சக்கரம் இருந்தால் சுமா ரான வரன் கிடைக்கும்?" என்று கேட்டாள் மரியம், ஒரு நாள் கணவனிடம்.

"பதினாயிரம் சக்கரம் இருந்தால் வீடு வாசல் இருக்கிற பையனாகக் கிடைக்கும்."

அவ்வளவு தொகை சேருவதற்கு இன்னும் எத்தனை வருஷங்கள் பிடிக்குமோ என்று மனைவி திரும்பவும் கணக்குப் போடு வாள்.

குழந்தைகளுக்காகச் சேமித்து வைக்கி றோமே என்னும் நிம்மதி அவர்களுக்கு வாழ் வில் மகிழ்ச்சியை அளித்தது. பட்டினியே கிடந்தாலும் வீட்டில் முணுமுணுப்புக் கிடை யாது. எப்போதும் அவர்கள் உற்சாகத்துடன் இருந்தார்கள். பெண்களின் திருமணத்திற்கு அவர்கள் பணம் சேர்க்கிறார்களே!

ஊரே மாத்தனது உற்சாகத்தைக் கண்டு பொறாமைப்பட்டது.

தாயாரும் தந்தையும் இரவில் பேசுவதைத் திரேஸ்யா காது கொடுத்துக் கேட்பதுண்டு. ஒவ்வொரு நாளும் அவர்களுடைய சேமிப்பு வளர்கிறது என்பதை அவளும் அறிவாள்.

**''தினமும் நைட் ஒரு வேளை மட்டும் வயித் தைக்காயப் போடுங்க... தொந்தி தானாக் குறைஞ் சிடும்!''**

**''அதை மத்தியான வேளையில வச்சுக்கிட்டா என்னங்க டாக்டர்?''**

**''ஏன் அப்படி?''**

**''நைட்ல வெயில் அடிக்காதே!''**

**– ஸ்ரீதர்**

சில சமயம் கணக்குப் போடும்போது அவர்கள் 'மூன்றும் நான்கும் எட்டு' என்பது போன்ற தவறுகள் செய்வார்கள். தவறை எடுத்துக் கூற திரேஸ்யா துடிப்பாள். வாய் அசைந்தாலும் வார்த்தை வெளியே வராது. சின்னவளானாலும் அவளும் ஒரு பெண் அல்லவா?

திரேஸ்யா தன்மானக்காரி; நல்ல விவேக முள்ளவள். தனது நிலைமை அப்படியொன் றும் பரிதாபத்துக்குரியதல்ல என்று அவள் தெரிந்து வைத்திருந்தாள்.

ஒரு நாள் மீன் வியாபாரி தோமனின் மகள், "நாங்கள் ஏழைங்க" என்று பேச்சுக் கிடையே சொன்னாள்.

"நாங்கள் ஏழைங்களாக இருந்தாலும், ஏழைங்க அல்ல" என்றாள் திரேஸ்யா.

அவள் சொன்னதற்குப் பொருள் விளங்காமல் மரியக்குட்டி சிரித்தாள். அப்போது ரோஷத்தோடு திரேஸ்யா திரும்பவும் அதே வாக்கியத்தைச் சொன்னாள்.

ஆம், திரேஸ்யாவிற்கு மட்டுமே அந்த வாக்கியத்தின் பொருள் தெரிந்திருந்தது.

நண்பகலில் திரேஸ்யாவும், தோழிகளும் பள்ளிக்கூடத்துத் திடலில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். பாண்டு வாத்தியம் காதில் விழவே எல்லோரும் ஆற்றுத் துறையை நோக்கி ஓடினார்கள். ஒரு கல்யாண ஊர்வலம் போய்க் கொண்டிருந்தது.

திருமணம் முடிந்தபின் மணமகனும் மணமகளும் பந்துக்களுடன் மாதாகோவிலிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். மரியக்குட்டிக்கு அவர்களைத் தெரியுமாம்.

"அது எங்க பக்கத்துவீட்டு அன்ன அக்கா! வரனின் ஊர் அவிச்சேரியாம்."

மணப்பெண்ணின் பார்வை மரியக்குட்டியின் மீது விழுந்தபோது அவள் இலேசாகச் சிரித்தாள்.

"வரதட்சிணை எவ்வளவு என்று உனக்குத் தெரியுமா?"

"எனக்குத் தெரியாது" என்றாள் மரியக்குட்டி.

ஊர்வலத்தைப் பார்த்தபடி, மனத்தில் எதையோ எண்ணியவாறு பதுமையென நின்றிருந்தாள் திரேஸ்யா. அவள் நினைவெல்லாம் எங்கோ லயித்திருந்தது. சுற்றுமுற்றும் என்ன நடக்கின்றது என்பது கூட அவளுக்குத் தெரியாது. பாண்டு வாத்தியத்தைப் பின் தொடர்ந்து அவளது மனம் சென்றது.

சிநேகிதிகளெல்லாம் போய்விட்டார்கள். திரேஸ்யா மட்டும் சிலையென நின்றுவிட்டாள். சிறிது தூரம் போனபின் மரியக்குட்டி திரேஸ்யாவைக் கூப்பிட்டாள். கனவு கலைந்த அவள் ஓடோடி அவர்களுடன் சேர்ந்து கொண்டாள்.

"பாவம், கல்யாணத்தை நினைச்சு அங்கேயே நின்று போய் விட்டாள்!" என்றாள் ஒரு தோழி.

"மாப்பிள்ளை எந்த ஊரோ?" என்று கேட்டாள் மற்றொருத்தி.

திரேஸ்யாவிற்கு ஒரே கோபம். அவள் அழகு காட்டவே, எல்லோரும், 'கொல்' என்று சிரித்தார்கள்.

"ஏண்டி, எல்லோரும் சிரிக்கிறீங்க. எனக்காக, அப்பாவும் அம்மாவும் வரதட்சிணைக்குப் பணம் சேர்க்கறாங்க; தெரியுமா?" என்று ரோஷத்துடன் சொல்லித் திரேஸ்யா 'விர்' என்று அங்கிருந்து போனாள்.

ஒன்றன்பின் ஒன்றாக ஆண்டுகள் பல உருண்டோடின. உடலோடு திரேஸ்யாவின் உள்ளமும் வளர்ந்தது. அவள் ஒரு பருவ மங்கையானாள். சேமிப்பை எடுக்க வேண்டிய காலம் நெருங்கியது. அவர்களைப் போலுள்ள ஏழைகளான அக்கம் பக்கத்து வீட்டார்கள் எல்லாம் தங்களுடைய பெண்களின் திருமணத்தைப் பற்றிக் கவலைப்படும் போது, மாத்தன் மட்டும் கவலை என்பதையே அறியாதவனாக உற்சாகத்தோடு இருந்தான். அவனுடைய பெண்ணிற்கு ஒரு நல்ல வரன் கிடைக்காமல் போகாது.

கணவனும் மனைவியும் கணக்குக் கூட்டிப் பார்க்கும்போது நித்திரையில் ஆழ்ந்த திரேஸ்யாவின் மனம் இந்தப் பரந்த உலகில் சஞ்சரித்துக் கொண்டிருக்கும். எங்கோ ஓர் ஆண்மகன் அவளுக்காகக் காத்திருக்கிறான்! அவன் எப்படி இருப்பான்? என்ன செய்து கொண்டிருப்பான்? கோட்டும், சூட்டும் தரித்து, தலையில் தொப்பி அணிந்து அவளது கழுத்தில் தாலி கட்ட மாதாகோவிலுக்கு வரும் அவனை, அவள் கற்பனையில் கண்டாள்... புகுந்த வீடு! அது எப்படி இருக்கும்? ஒன்று மட்டும் நிச்சயம். அவர்களுடைய வீடும் தோட்டமும் அவர்களுக்கே சொந்தமானதாயிருக்கும். அவள் அவனை நேசிப்பாள்; அவனுக்குப் பணிவிடை புரிவாள். அவனும் அவளை அதே போல் நேசிப்பானா....? நிச்சயமாக அவன் அவளை நேசிப்பான். அவள், தாய் ஆவாள். துயில் கொள்ளும் அவனை அவள் எழுப்பு

---



"வங்கி திறப்பு விழாவுல, தலைவர் இப்படி அசட்டுத்தனமா பேசுவார்னு கொஞ்சம் கூட எதிர்பார்க்கல...!"

"அப்படி என்னதான் பேசினாரு?"

"இந்தியன் வங்கி, அது உங்களுடைய வங்கி உலக வங்கி அது எங்களுடைய வங்கின்னு பேசினாரு...!"

- யு. அரசுதேன்மொழி

வான்; திரேஸ்யா நாணுவாள் - இப்படியெல்லாம் எண்ணுவாள் திரேஸ்யா.

திருமணவயது என்பது என்ன? பதினாறு வயதில் கல்யாணமானவர்கள் பலரையும் அவள் அறிவாள். அவளுக்குப் பதினேழு வயதாகி விட்டது. ஒருவேளை அவளுக்கு என்ன வயது என்பதே அப்பாவுக்குத் தெரியாதோ? ஆனால் அம்மாவுக்குத் தெரியுமே!

"அப்பாடி!" என்று பெருமூச்சு விட்டாள் திரேஸ்யா.

"எனக்குத் தெரியும், நான் சும்மா இருக்கேன் என்று நினைக்கிறாயா? நல்ல பையனாகக் கிடைக்க வேண்டாமா? பத்து ரூபாய் அதிகமாகக் கொடுக்க முடிந்தால் அதுக்குத் தகுந்தபடி நல்ல பையன் கிடைப்பான்."

நாட்கள் சில சென்றன. பாலாய்க்குப் போய்த் திரும்பிய மாத்தன் ஒரு செய்தியைக் கொண்டு வந்தான்.

"பையன் கிடைத்துவிட்டான். லட்சணமாக இருக்கிறான். இருபது வயது இருக்கும். பீடிகூடப் பிடிப்பதில்லை. அப்பா அம்மாவிற்கு அவன் ஒரே பிள்ளை. அஞ்சு ஏக்கர் நிலம் இருக்கு. எல்லாம் நிச்சயம் பண்ணியாச்சு. அடுத்த ஞாயிற்றுக்கிழமை பெண் பார்க்க வாராங்க."

"வரதட்சிணை எவ்வளவு?" என்று கேட்டாள் மரியம்.

"ஐயாயிரம் சக்கரம்."

திரேஸ்யா தன் புகுந்த வீட்டை மனத்தில் கண்டாள். அவளுக்கு மாமனாரும் மாமியாரும் வரப்போகிறார்கள்! அவர்களுடனும், கரம் பற்றிய கணவருடனும் அவள் வாழ்க்கை நடத்தப் போகிறாள்!

ஞாயிற்றுக்கிழமை பெண் பார்க்க வந்தார்கள். அவளது கனவு நனவாகப் போகிறது! தன்னை மணக்கவிருக்கும் கணவனை அவள் கண்டாள். அவனும் அவளை நோக்கினான். தனது வாழ்க்கை நிறைவு பெற்றதாகத் திரேஸ்யா உள்ளம் மகிழ்ந்தாள்.

எல்லாம் நிச்சயமாயிற்று. வரதட்சிணை ஐயாயிரம் சக்கரம். அதை என்றைக்குக் கொடுப்பது என்றும் முடிவாகியது. அடுத்த ஞாயிற்றுக்கிழைமை பணம் கொடுப்பதாகப் பேச்சு.

திரேஸ்யாவின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. தோழிகள் அவளைக் கேலி செய்தார்கள். அவள் வயதை ஒத்த சில மணமான பெண்கள் அவளுக்குச் சில பாடங்களைச் சொல்லிக் கொடுத்தார்கள்.

கணவனும் மனைவியும் கணக்குப் போட்டார்கள். வரதட்சிணையும் கல்யாணச் செல



**"தலைவரே... அ.இ.கா.வா கட்சி நமக்கு ஆதரவு தர்றதா அறிக்கை விட்டிருக்காரு...!"**

**"அப்படியா! முதல் காரியமா, எத்தனை வருஷத்துக்கு ஆதரவுன்னு ஸ்டாம்பு பத்திரத்துல அக்ரிமெண்ட் போட்டு ரிஜிஸ்தர் பண்ணு!"**

**- கவிட். ரவி**

வும் போகக் கொஞ்சம் பணம் மிச்சம் வரும். அதை அப்படியே வைத்துக் கொண்டு ரோஸாவுக்காகவும் சேர்க்க ஆரம்பிக்க வேண்டும். கணக்கும் போட்டார்கள்; திட்டமும் திட்டினார்கள்.

பாலாய்க்குப் பணம் கொண்டு போக இரண்டு மூன்று நாட்கள் இருந்தன. வெளியே போயிருந்த மாத்தன் திரும்பி வந்ததும் மரியம் சொன்னாள்: "சாக்கோ முதலாளி ஊருக்கு வந்திருக்கார்; நாளைக்குக் காலையில் சந்தைக்குப் போய்விட்டு அங்கிருந்து அப்படியே கோட்டயத்துக்குப் போகப் போறாராம். நீங்கள் இன்னிக்கே போய் பணம் வாங்கி வந்துடுங்க."

"அவர் எங்கே போகப் போறார்? இந்த ஞாயிற்றுக்கிழமை அவர்தானே மாதா கோவிலிலே திருவிழா நடத்துறார்!"

"அதுக்கான ஏற்பாடுகளையெல்லாம் செய்து விட்டுத்தான் போறாராம்."

மாத்தன் நேராகச் சாக்கோ முதலாளி வீட்டுக்குப் போனான். உற்சவத்திற்கான ஏற்பாடுகளில் மும்முரமாக இருந்தார் முதலாளி. இருந்தாலும் மாத்தனைப் பார்த்து அவர் புன்முறுவல் பூத்தார். "என்னப்பா, எல்லாம் நிச்சயமாச்சா?"

மாத்தன் தலையைச் சொறிந்தான். "ஐயாவைப் பார்த்த பிறகு நிச்சயிக்கலாம் என்று இருந்தேன். ஆனால்...."

"என்னப்பா செய்யறது; போன இடத்தில் நினைச்சதைவிட பத்து நாள் அதிகமாச்சு. அதுக்கென்னப்பா, எல்லாம் நடக்கட்டும், சரி வரதட்சிணை எவ்வளவு?"

"ஐயாயிரம் சக்கரம்."

**''பால் ஆயிட்டியான்னுதான் கேட்டேன்: அதுக்கு ஏன் உங்க பையன் குடிச்சிட்டிருந்த பாலை கீழே ஊத்திட்டான்?''**

**''ஊத்திக்கிச்சுன்னு உங்களுக்கு சிம்பாலிக்கா தெரிவிக்கிறானாம்!''**

**– சீர்காழி ரேவதி**

♠♠♠♠♠♠♠♠♠♠♠♠♠♠♠♠♠♠♠♠♠♠♠♠

"கல்யாணச் செலவு எல்லாம் சேர்ந்து ஏழாயிரமாகுமே."

மாத்தன் சிரித்துக் கொண்டே 'ஊம்' கொட்டினான். சாக்கோ பையனின் நிலைமையைப் பற்றி விசாரித்தார்.

மாத்தன் எல்லாம் விவரமாகச் சொன்னான்.

"எங்கிருந்தப்பா இவ்வளவு ரூபாய் வரும்? எங்காவது புதைச்சு வைச்சிருப்பே, அப்படித்தானே?"

மாத்தன் வெலவெலத்துப் போனான்.

இதுவரை இதைப் போன்ற பேரிடி அவன் மீது விழுந்ததில்லை. என்ன சொல்வது என்றே அவனுக்குத் தெரியவில்லை. வாயிலிருந்து வார்த்தை வெளிவந்தால்தானே?

"அப்பப்போ ஐயாகிட்டே கொடுத்த சக்கரம்...?" – எப்படியோ அவனை அறியாமலே இந்த வார்த்தைகள் அவனிடமிருந்து வெளிவந்தன.

"அப்பப்போ கொடுத்த சக்கரம்?" என்று கேட்டார் சாக்கோ.

இடிபோல் அந்தச் சொற்கள் அவன் காதுகளில் ஒலித்தன.

சாக்கோ மேலும் சொன்னார்: "எல்லாத்துக்கும் கணக்குக் கொண்டுவா, உனக்குத் தெரியுமே? நீ வாங்கினதெல்லாம் போகப் பாக்கி இரண்டு ரூபாய் பதினேழு சக்கரம் இருக்கும்."

"நான் வாங்கினேனா?"

"ஆமாம்."

"அப்போ நான் இங்கே வேலை செய்ததுக்கு?"

"நீ இங்கே வேலை செய்தாயா? கடவுளுக்குப் பயந்தவங்க யாராவது உன்னிடம் வேலை வாங்குவாங்களா? எழுந்து நடக்கவே உன்னால் முடியாதே."

"நான் ஓலை வெட்டினேன். கூலி நெல்லை அளந்தேன்..."

சாக்கோ சிரித்து கொண்டே சொன்னார்: "அதுக்கு உனக்குக் கூலி வேணுமா?"

மாத்தனின் சப்த நாடியும் ஒடுங்கியது.

"பெண்ணிற்கு அதிர்ஷ்டமிருந்தால் எல்லாம் நடக்கும். நான் பதினஞ்சு ரூபாய் தாரேன். நம்ம கையில் என்ன இருக்கு; கர்த்தர் இருக்கார்" என்றார் சாக்கோ முதலாளி.

யாரோ சில பெரிய மனிதர்களும், தலைமைப் பாதிரியும் துறைக்கு வரவே அவர்களை வரவேற்பதற்காகச் சாக்கோ அங்கிருந்து விரைந்தார்.

**நே**ரம் இருட்டியது. மாத்தனுடைய வீட்டில் வெகு நேரம் வரை விளக்கு எரிந்து கொண்டிருந்தது. எண்ணெய் இல்லாமல் திரி மட்டும் சிறிது நேரம் எரிந்து அணைந்தது; ஆனாலும் மாத்தன் வரவில்லை. தாயும் பெண்களும் கண் விழித்து இருட்டில் காத்திருந்தார்கள். இராச் சாப்பாடு சில்லிட்டது.

மறுநாள் காலை மரியம் சாக்கோவின் வீட்டிற்குப் போனாள். வீட்டின் தெற்குத் திண்ணையில் கூனிக் குறுகி மாத்தன் இருப்பதை யாரோ பார்த்தார்களாம்.

மறுநாளும் மாத்தன் வீட்டிற்குத் திரும்பவில்லை.

சாக்கோ வீட்டில் எல்லோரும் திருவிழாவிற்காக ஓடியாடி வேலை செய்து கொண்டிருந்தார்கள்.

மறுநாள் ஞாயிற்றுக்கிழமை. அன்று மாதாகோவிலில் சாக்கோ நடத்தும் திருவிழா.

ஒரு சடலம் மாத்தனுடைய வீட்டிற்கு எதிரிலுள்ள துறையில் மிதந்து கொண்டிருந்தது. அதன் இரு கைகளும், கால்களும் ஏதோ கொடியால் கட்டப்பட்டிருந்தன. சடலம் மாத்தனுடையதே.

திருவிழாவின் போது வானத்தைப் பிளக்கும் வெடிச் சத்தம் சாக்கோவின் புகழையும், பெருமையையும், கடவுள் பக்தியையும் பறை சாற்றிக் கொண்டிருக்கையில், ஒரு தாயும், இரு பெண்களும் அந்தச் சடலத்தைக் கட்டியணைத்து அழுது கொண்டிருந்தார்கள். ●

**(நன்றி : கதா பாரதி மலையாளச் சிறுகதைகள்; நேஷனல் புக் டிரஸ்ட் வெளியீடு)**

✉ அடுத்த (எதிர்) பிளாட்காரர் யார் என்றே அறியாத இயந்திர கதியாக வாழ்வை ஓட்டிக் கொண்டிருக்கும் இந்நாளில், ஸ்டோர் குடித் தனங்களுள் அன்பும், வாத்சல்யமும் எவ்வளவில் 'ஸ்டோர்'ஆகிக் கொண்டுள்ளன என்பதை விவரித்த விதம் வெகு இதம்!

நெய்வேலி-7, சாந்தி சுந்தர்.

✉ ரஜினிக்கென்று உள்ளது ஒரு தனிப்படை யப்பா... பாடல்கள் பற்றி கல்கி விரித்தது தகவல் கடையப்பா. எமக்குக் கிடைத்தது கல்கி மூலம் நல்லதொரு விடையப்பா. கல்கிக்கு நன்றி சொல்ல இல்லையொரு தடையப்பா!

அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

✉ வாண்டு சைகாலஜியில் பயனுள்ள நிறைய விஷயங்களைத் தெரிந்து கொண்டோம். நம் பெற் றோர்களுக்குக் குழந்தை வளர்ப்பு குறித்தான அடிப்படை விஷயங்கள்கூடத் தெரிவதில்லை. அவர்களுக்கு ஒளி காட்டியிருக்கிறீர்கள்.

மொரட்டுப்பாளையம், சுநா. இராஜேஸ்வரன்.

✉ வாண்டு சைக்காலஜியை திடீரென்று இப்படி முடித்து விட்டீர்களே! நான் ரொம்பவும் 'இன் வால்வ்' ஆகிப் படித்து வந்த ஒரு அருமையான தொடர் அது!

நாராயணபுரம், சுப்ர. வைத்யநாதன்.

✉ 11.4.99 கல்கி இதழில் வட்ட மேஜை பகுதி யில் நிதித்துறை துணைச்செயலர் வி.எஸ். சந்திரசேகரன், (நீங்கள் வெளியிட்டுள்ளதுபோல் 'இணைச் செயலர்' அல்ல), அமைச்சர் வீர பாண்டி ஆறுமுகம் அவர் களின் பணி பாராட்டுக் குரிய பணியல்ல என எழுதி யிருந்த கடிதத்தைப் பிரசுரித்துள் ளீர்கள். தலைமைச் செயலகப் பணிகளுக்கு தேர்வாணைய முதுநிலைப் பட்டியல்படிதான் பதவியுயர்வு அளித்திருக்க வேண்டும். அவ் வாறல்லாமல் நிதித்துறையிலுள்ளவர்களுக்கு முன்னரே பதவியுயர்வு அளித்ததால் அவர்களை விட பணியில் மூத்தவர்கள் பாதிக்கப்பட்டுள் ளனர். எனவே நிதித்துறையில் இளையவர் பதவியுயர்வு பெற்ற நாளிலிருந்து மூத்தவர் களுக்குப் பதவியுயர்வு மற்றும் பணப் பயன் அளிக்கப்பட வேண்டும் என்ற நிர்வாக தீர்ப் பாயத்தின் ஆணையினைச் செயல்படுத்தவே பணியாளர் மற்றும் நிர்வாக சீர்திருத்தத் துறை, நிதித்துறை, சட்டத்துறை செயலாளர்கள், தலைமைச் செயலாளர் மற்றும் முதலமைச்சர் அளவில் தலைமைச் செயலகச் சங்கத்துடன் பேச்சுவார்த்தை நடந்தது. இப்பிரச்னைக்கு சுமுக மான தீர்வு ஏற்பட மாண்புமிகு வேளாண்மைத் துறை அமைச்சர் பாடுபட்டார். இதனால் அர சுக்கு ஏற்படவிருந்த சில கோடி ரூபாய் செல வினத்தைத் தவிர்த்தார். இந் நிகழ்வில் சிறப்பாகப் பணியாற்றிய அமைச்சரின் பணி பாராட்டுக் குரியதே. இது குறித்து வி.எஸ். சந்திரசேகரன் நிர்வாக தீர்ப்பாயத்தில் தொடர்ந்த வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது. இவரது துணை வியார் லீலா சந்திரசேகரன் பெயரில் உயர்நீதி மன்றத்தில் தொடர்ந்த வழக்கும் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்படாமலேயே தள்ளுபடி செய்யப்பட்டது.

சென்னை - 9, ஞா. தேவதாஸ் (செயலாளர்)
ஆர். பத்மநாபன் (தலைவர்)
தமிழ்நாடு தலைமைச் செயலகச் சங்கம்.

✉ பா. ராகவன் எழுதிய 'ஒருமுள், இன்னொரு முள்' சிறுகதை படித்து உள்ளம் நெகிழ்ந்தேன். பொதுவாக இவரது கதைகளைப் படித்து முடித் ததும் நம் இதயம் கனக்க ஆரம்பித்து விடுகிறது.

சென்னை - 91, ரா. கண்ணன் மகேஷ்.

✉ 'சென்றார், பார்த்தார், தோற்றார்...' தலை யங்கம் கண்டேன். இன்றைய அரசியல் கோமாளிக் கூத்துக்களைத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டி இருக்கிறீர்கள். சரியான நேரத் தில் சோனியாவுக்கும் எச்சரிக்கை மணி அடிக் கப்பட்டிருக்கிறது. வேளைக்கொரு பேச்சு நாளுக்கொரு கொள்கை என்ற

## வட்ட மேஜை

## எச்சரிக்கை மணியடித்த தலையங்கம்!

ஜெ.வின் பச்சோந் திப் போக்குக்குப் பெயர் ராஜதந்திரமல்ல; நரிக்குணம்!

கொரநாட்டுக் கருப்பூர், க. தியாகராசன்.

✉ நான் கடந்த இருபது வருடங்களாக கல்கி வாசகன். ஆனால் இனி தங்கள் பத்திரிகையை வாங்கப் போவதும் இல்லை, படிக்கப் போவதும் இல்லை. காரணம் தாங்கள் நடுநிலைமையைக் காப்பாற்றவில்லை. எனக்கு பாரதிய ஜனதா கட்சி மீது பிடிப்பு உள்ளது. (ஆனால் வெறி யன் அல்ல). பா.ஜ.க ஆட்சிக்கு வந்ததிலிருந்து நீங்கள் அந்தக் கட்சியைத் தாக்கி எழுதி வருகிறீர்கள்.

ராயப்பூர், ஆர். ஸ்ரீதர்.

✉ கல்கி (11.4.99) இதழில் 'தராசு' பதிலளிக்கையில் ''அரசின் மெத்தனம் மாறாவிட்டால் தனி யாரிடம் பஸ் போக்குவரத்தை விடுவது காலப் போக்கில் நிகழ்ந்தே தீரும்'' என்று பதிலளித் துள்ளார். தனியார் மயமாக்கும்போது, தொழி லாளர்களுக்கு சகல வசதிகளும் செய்து தரும் TVS, LGB, ABT போன்ற நிறுவனங்களிடம் மட் டுமே போக்குவரத்துத் துறையை ஒப்படைக்க வேண்டும். இல்லையென்றால், தொழிலாளர் களின் கதி அதோகதிதான். தற்போது தமிழகம் முழுவதும் உள்ள தனியார் போக்குவரத்துக் கழக ஊழியர்களின் கஷ்டங்கள் சொல்லி மாளாது என்பதைப் பிறர் உணர வேண்டும்.

வக்கம்பட்டி, 'ஈநாடு' பாலசுப்பிரமணிதாசன்.

ஜெயலலிதாவைக் காட்டிலும் அக்கிரமமான நிபந்தனைகள் விதிக்கக்கூடிய ஒருவர் உண்டெனில் அது கிச்சாவின் தாத்தா சி.பி கமலநாதன் **ஐ.பி.எஸ்** (ரிடையர்ட்)! லெட்டர்ஹெட்டில் இப்படித்தான் அச்சடிப்பார்!

ஓய்வென்பது அவர் காவல்துறை பணிக்குத் தானேயொழிய குடும்பத் தலைவர் பொறுப்புக்கல்ல. கிச்சாவின் அப்பாவுக்கே காதோர நரை கணிசமாகிவிட்ட பின்னரும் தாத்தா அவரை எஃப் த்ரீ ஸ்டேஷன் கான்ஸ்டபிள் மட்டத்தில்தான் வைத்திருந்தார்.

கிச்சாவின் நிலைமையைச் சொல்லவே வேண்டாம். சப் ஜெயில் பள்ளிப் பருவமும் சென்ட்ரல் ஜெயில் கல்லூரிப் பருவமும் கஷ்டப்பட்டு கடந்து வந்து விட்டான். இப்போது அவனை ஆயுள் தண்டனைக்கு ஆயத்தப்படுத்த வேண்டும் என்றார் தாத்தா. அதாவது, கிச்சாவுக்குக் கல்யாணம் பண்ண வேண்டும்!

ஒரு சுபயோக சுப தினத்தில் அவர் குடும்ப கவுன்சிலைக் கூட்டி ஆலோசனை நடத்தி ஏகமனதாக எடுக்கும்படி வற்புறுத்திய தீர்மானம் இதுதான்:

கிச்சாவுக்குப் பெண் பார்க்க வேண்டும். பேப்பர் கிப்பரிலெல்லாம் விளம்பரம் போடக்கூடாது. கண்ணில், காதில் விழும் வரன்களைப் பரிசீலிக்கலாம். கல்லூரி படித்த, வேலைக்குப் போகிற/போகாத பெண் பொருந்தும். அவளை கிச்சாவுக்குப் பிடித்திருக்க வேண்டும் என்று அவசியமில்லை; அவன் அம்மாவுக்குப் பிடித்திருந்தால் போதும். அதை விட முக்கியம் - கமலநாதனுக்குப் பிடிக்காத நைட்டி என்கிற அந்த காட்டுமிராண்டி



உடையை அவள் ஒருபோதும் அணியக் கூடாது.

இந்த நிபந்தனை தெரிந்ததும் கலங்கிப் போனான் கிச்சா! அவன் வாலிபக்

**சில்மிஷா**

கனவுகளில் நைட்டி அணிந்த தேவதைகள் வந்து நடனமாடி ஹிம்சித்ததெல்லாம் கிடையாது. எனினும் காலத்துக்குப் பொருந்தாத ஒரு நிபந்தனை மூலம் தாத்தா தனது நிரந்தர பிரும்மசார்யத்துக்கு வழி கோலுவதை உணர்ந்து நொந்தான். அவன் ஆற்றாமையெல்லாம் அவன் அம்மா ஆனந்தவல்லி பேரில் திரும்பியது.

"வெளியில சொன்னா சிரிப்பாங்க...! அவர்தான் விவரமில்லாம பேசறார்னா நீங்களெல்லாம் கேட்டுக்கிட்டு இருக்கறதா...? நைட்டி போடக் கூடாதுன்னு சொன்னா இந்தக் காலத்துல எந்தப் பொண்ணு ஒத்துக்கும்...? இவர் மட்டும் ஏன் லுங்கி கட்டிக்கிட்டு கட் பனியனோட காத்தாடத் தூங்கறாராம்...? காக்கி யூனிஃபார்மை மாட்டிக்கிட்டுப் படுத்துக்கப் போகட்டுமே..."

"ஏண்டா என்னைக் காய்ச்சறே! நம்ப மதில்சுவர்லே பூனை உட்கார்ந்து கையை நக்கினாக்கூடா 'எச்சில் பண்ணாதே!'ன்னு அதட்டறவர் உங்க தாத்தா. இந்தக் கம்பீர விலாஸோட கௌரவம்தான் அவருக்கு முக்கியம். அவர்கிட்டேயே போய் உன் கேள்வியையெல்லாம் கேட்க வேண்டியது தானே!

காத்து - கருப்பு டீவி சீரியலெல்லாம் பார்த்து உரமேறியிருந்தாலும் கிச்சாவின் நெஞ்சில் தாத்தாவை எதிர்த்துப் பேசும் தைரியமில்லை.

ஒருநாள் மாலை, ஆபீஸ் வேலை முடித்துவிட்டு நைட்டி கடைகளே கண்ணில் படாத ரூட்டில் கஷ்டப்பட்டு வீடு திரும்பினான் கிச்சா. சோர்ந்து போய் வாசல் படியேறியவனின் காதில் காட்பரீஸ் சாக்லேட்டைக் கரைத்து ஊற்றும் அந்த உரையாடல் விழுந்தது.

அம்மாதான் - போனில் பேசிக் கொண்டிருந்தாள்: "நிஜமாவேவா! நைட்லகூட நைட்டி போட மாட்டாளா நிர்மலா? நிச்சயமா தெரியுமா...? என் வயித்துல பாலை வார்த்தே பத்மா... நாளைக்கே என் மாமனாரைக் கூட்டிட்டுப் பெண் பார்க்கப் போறேன்... சே சே! கல்யாணம் மாமனாருக்கில்லே என் பிள்ளை கிச்சாவுக்குத்தான் இந்த வரன்..."

கிச்சா - நிர்மலா கல்யாணம் இனிதே முடிந்து ஆறு மாதங்கள் இருக்கும்...

"என்னங்க, ஒரு குட் நியூஸ்" என்று நிர்மலா ஓர் இரவு அவன் பக்கத்தில் வந்து கன்னத்தைத் திருப்பினாள்.

"அடி, கள்ளி!" என்று கஷ்டப்பட்டு சினிமா ஹீரோ குரலில் நடித்தான்.

"வழியாதிங்க... நீங்க நினைக்கறமாதிரி குட்டிப் பிசாசு நியூஸில்ல. இது குட்டி பிஸினஸ்..."

"என்னது...?"

"என் ஃப்ரெண்ட் சுமதியோட அண்ணன் ஒரு கார்மெண்ட் எக்ஸ்போர்ட் நடத்தறாரில்லே... அதுல கழிச்சுக் கட்டற துணியெல்லாம் மலிவா தர்றேன்னார். நம்ம தோட்டத்துல ஷெட் போட்டு விற்கறதுக்கு ஏற்பாடு பண்ணிட்டேன்..."

"ஐயோ! தாத்தா..."

"அவர்கிட்டே பேசறதுக்குள்ள உங்களுக்குக் குளிர் ஜுரம் வந்துடும்னு எனக்குத் தெரியாதா.... நானே பேசி ஓகே வாங்கிட்டேன்..."

ஒரு புதிய மரியாதையுடன் கிச்சா அவளைப் பார்த்தபோது நிர்மலா மனத்துக்குள் சிரித்துக்கொண்டாள்.

'இங்கு 'எக்ஸ்போர்ட்' ரக ரெடிமேட் ஆடைகள் மலிவாகக் கிடைக்கும்' என்று பலகை எழுதி வைத்த இரண்டு வாரத்துக்குள் வீட்டைக் கூட்டம் நிரப்ப ஆரம்பித்தது.

கம்பீர விலாஸ்

## "டிஸ்கவரி டிஸ்கவரிதான்!"



- தொலைக்காட்சி/நாடக நடிகை நித்யா

● 'வணக்கம் தமிழகத்'தில் சரத்குமார் பேட்டி வெகு யதார்த்தம். சைக்கிள் பெடலை உதாரணம் காட்டி "நம் படம் வெற்றியடையும்போது அதிகம் துள்ளாமல் இருந்தால், அடுத்த படம் தோல்வியடைந்தாலும் இடிந்து போகாமலிருக்கலாம்" என்றார்.

● ஏஷியாநெட்டில் வரப்போகும் உஷா உதுப்பின் நிகழ்ச்சிக்கான ட்ரெயிலர். நிகழ்ச்சியைப் பார்க்கத் தூண்டும் விதத்தில் இருந்தது. புடைவையும், பந்துப் பூவும் மட்டுமல்ல உஷாவின் டிரேட் மார்க்குகள்; நிறைவைத் தரும் அவரது சிரித்த முகமும்தான்.

● மஹரிஷி வேதாவிஷன் – ஆன்மீகத்திற்காகவே ஒரு சானல். பல தேவையான விஷயங்கள் வெளிப்பட்டன. என்றாலும் தொடர்ந்து ஒரு பெரியவரே பேசிக் கொண்டிருப்பது... விஷுவல்களையும் சேர்த்தால் சோர்வு ஏற்படாதல்லவா!

● இரவு வேளையில் சாலை விபத்தில் அடிபட்டு வரும் ஒருவருக்கு சிகிச்சை அளிப்பதை டிஸ்கவரி சானலில் படமாக்கியிருந்தார்கள். நிகழ்ச்சிக்காக அல்ல; நிஜமாகவே விபத்தில் பாதிக்கப்பட்டவர். அவரது வேதனையும், டாக்டர்களின் வேகமும்... அடடா! நாமே அந்த இடத்தில் இருப்பது போன்ற உணர்வு ஏற்பட்டது.

● ராஜ் டி.வி.யில் இசை நிகழ்ச்சிக்கு 'மியூசிக் ஸ்டேஷன்' என்று பெயர் வைத்திருந்தனர். ரயில்வே ஸ்டேஷன் போன்ற செட் அமைப்பு. இரண்டு குழுக்களும் ராஜ்தானி, சதாப்தி என்று பெயர். அவை அளவுக்கு வேகமில்லையென்றாலும், நிகழ்ச்சி 'பாஸஞ்சர் ரயில்' அளவுக்கு ஸ்லோவுமில்லை.

● 'சந்திப்போமா?' படத்தில் ஒரு தாயின் ஆழ்ந்த உணர்ச்சிகளை ராதிகா வெகு நன்றாக உணர்த்தினார். கிழக்கே போகும் ரயிலில் அவரைப் பார்த்த யாருமே அவர் இந்த லெவலுக்கு நடிப்பில் புதுப் பரிணாமம் காட்டுவார் என்று எதிர்பார்த்திருக்க முடியாது.

— ஜி.எஸ்.எஸ்

"டோன்ட் யூ ஹாவ் எ சேஞ்சிங் ரூம்?" என்று வந்த பெண்களெல்லாம் வெள்ளிரிப் பிஞ்சுக் குரலில் வற்புறுத்தவும், தட்டிகட்டி ஒரு மறைப்பும் முழு உயர நிலைக் கண்ணாடியும் ஏற்பாடு செய்தாள் நிர்மலா.

அது சமயம் சொந்த ஊரான மேல் மங்கலம் போயிருந்த தாத்தா, திரும்பி வந்த தினத்தில் அந்த அமங்கலமான காட்சியைக் கண்டு மீசை துடித்தார். விதவிதமான அளவுகளிலான பேதை, பெதும்பை, பேரிளம் பெண்கள் விதவிதமான நைட்டிகளை அணிந்து வந்து கண்ணாடியில் அழகு பார்த்துக் கொண்டிருந்தார்கள். 'கம்பீர விலாஸ்' என்ற தம் பூர்வீக வீட்டுக்கு வந்த அபகீர்த்தி கண்டு கொதித்தார்!

"நிர்மலா ஆஆஆ!..." பெட்டி படுக்கையோடு வாசலில் நின்றபடி இரைந்தார்.

"இதோ வரேன் தாத்தா..." என்று ஒரு கத்தை ஐநூறு ரூபாய் நோட்டுகளை கிரைக்கட்டு தூக்கும் அலட்சியத்துடன் கொண்டு வந்து தாத்தா கையில் திணித்தாள் நிர்மலா.

"ஒரு மாமி தன் குடும்பத்துக்கே நைட்டி வாங்க வந்திருக்காங்க... பெரிய ஜாயின்ட் ஃபாமிலி – ஏழு மருமகப் பொண்ணுங்களாம். பதிமூணு பேத்திகளாம். நிறைய ஃபைவ் ஹன்ட்ரட்ஸ் கொடுத்துருக்காங்க. கொஞ்சம் சீரியல் நம்பரை நோட் பண்ணிக்கறீங்களா... சீக்கிரம்... ப்ளீஸ்! ஸாரி தாத்தா! வந்ததும் வராததுமா வேலை வைக்கறேன்னு நினைக்காதீங்க."

'கிரைக்கட்டு' கை மாறியது.

அன்று மாலை கிச்சா வீடு திரும்பிய போது தாத்தா ஒரு கல்லா மேஜை போட்டுக் கொண்டு ஐநூறு ரூபாய் நோட்டுகளைத் தொட்டுத் தொட்டுப் பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்கு நேர் எதிரே ஸைன் போர்ட் சிங்காரம் உட்கார்ந்து 'நிர்மலா நைட்டீஸ்' என்ற பெயர்ப்பலகை எழுதிக் கொண்டிருந்தான்...

"என்ன தாத்தா...?" என்றான் கிச்சா

"ஒண்ணுமில்லைடா..." எஃப் த்ரீ கான்ஸ்டபிள் போல நெளிந்தார் சி.பி. கமலநாதன் ஐ.பி.எஸ் **ரிடையர்ட்!**

● ஜி. செல்வராஜன், ரிஷிவந்தியம்.

*? ஜனநாயக நதியில் மக்கள் ஓட்டெடுப்புக்கும் நம்பிக்கை ஓட்டெடுப்புக்கும் உள்ள நிலை குறித்து...?*

! நம்பிக்கை வோட்டெடுப்பு படகைக் கவிழ்த்தால், மக்கள் வோட்டெடுப்பு அதை மறுபடி நிமிர்த்தி மிதக்கச் செய்யும்.

● எம். இராஜேந்திரன், லால்குடி.

*? தான் போட்ட வழக்குகளால் ஜெயலலிதாவை ஒன்றும் பண்ண முடியவில்லை. குறைந்தபட்சம் மத்திய அமைச்சரவையிலிருந்து விலக வைத்தாவது பழிவாங்கலாம் என்று சு. சுவாமி நினைத்துள்ளாரோ...?*

! இன்னும் சில மாதங்கள் சென்று அரசியல் வியூகங்கள் மாறி, ஜெவுக்கு எதிரான ஓர் அணியில் சு. சுவாமி இருக்கிறபோது இத்தகைய விளக்கத்தை அவர் அளிக்க முன்வந்தால் வியப்பதற்கில்லை!

● அதிரடி ஆனந்தன், சேலம் – 7.

*? 'இந்தியாவின் ஜனாதிபதி பதவியில் பா.ம.க. தலைவர் இராமதாஸை அமர வைப்பேன்' என மதுரை ஆதீனம் கூறியிருப்பதைப் பற்றி என்ன கருதுகிறீர்கள்?*

! ஜோக் அடிக்கும் உரிமை ஆதீனகர்த்தர்களுக்கும் உண்டு.

● ந. வந்தியக்குமாரன், சென்னை – 41.

*? மீண்டும் பாராளுமன்றத்துக்குத் தேர்தல் வந்தால் நான் வோட்டுப் போடுவதில்லை என்று முடிவெடுத்திருக்கிறேன் – இது தவறா?*

! ஆமாம். கள்ள வோட்டை ஊக்குவிக்கும் குற்றத்துக்கு ஆளாவீர்கள்.



• பிறந்தநாள் 'பேருந்து'!



• ஜெயிக்கும்...

● அஜார், தேனாம்பேட்டை.

*? தமிழ் – வழிக் கல்வி வேண்டி நூறு சான்றோர்கள் சாகும் வரை உண்ணாவிரதம் இருக்கப் போகிறார்களாமே?*

! தொடக்கக் கல்வியைப் பொருத்தமட்டில் போராட்டம் சரி; அதற்கு மேல் படிக்கிற அத்தனை பேருக்கும் தமிழ்நாட்டிலேயே வேலை வாய்ப்பு உறுதி என்று அரசு உத்தரவாதம் கொடுத்தால் நான் கூட இதற்காக உண்ணாவிரதம் இருக்கத் தயார்! அது சாத்தியமில்லாதபட்சத்தில், ஆங்கிலத்தைப் புறக்கணிப்பது வடிகட்டிய முட்டாள்தனம். கும்மிடிப்பூண்டியைத் தாண்டினால் தமிழ் பருப்பு வேகிறதில்லை என்பதுதான் நிதர்சன உண்மை.

● என். ஜெயராமச்சந்திரன், இட்டிகை (கர்நாடகா.)

*? ஜெ செய்யும் காரியங்கள் அனைத்தும் சிறுபிள்ளைத்தனமானவை என எல்லோருக்குமே தெரிந்திருந்தும் அவரைக் கண்டு பயப்படுவது ஏன்...?*

! தமிழக வாக்காளர்கள் அந்தச் சிறுபிள்ளைத்தனத்தை ஊக்குவித்து, ஜெ கட்சியினருக்கு வாக்களித்து நாடாளுமன்றத்தில் அக்கட்சியின் பலத்தைக் கணிசமாக்கியிருப்பதால் தான்.

## 'ஜெ'லைவப்



• ....ஜோடி!



• வியூகமும் விளக்கமும்

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.

*? வாஜ்பாய் அரசு கவிழ்ந்தால் மாற்று அரசு தயார் என்று முலாயம் சிங் யாதவ் தெரிவித்துள்ளாரே?*

! அரசு அமைக்க பலரும் காத்துக் கொண்டிருக்கலாம்; நிலைப்பார்களா என்பதுதான் கேள்வி. அதற்கு பதிலைக் காணோமே யாரிடமும்!

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

*? ஜெயலலிதாவுக்கு உலக ராஜதந்திரி விருதை அமெரிக்கா வழங்குகிறதாமே?*

! அமெரிக்காவிலுள்ள அ.தி.மு.கவினர் வழங்குவது அமெரிக்காவே வழங்குவது போல் ஆகுமா!

● ஆர். ராஜதுரை, சீர்காழி – 10.

? ஜூன் 3 முதல்வர் கருணாநிதி பிறந்த நாளையொட்டி சென்னையில் நூறு புதிய பஸ்கள் விடப்படும் என அறிவிக்கப்பட்டுள்ளது. இது அதிகார துஷ்பிரயோகமில்லையா?

! மக்கள் வசதிக்காக போக்குவரத்துக் கழகம் புதிய பஸ்கள் விடுவது அதிகார துஷ்பிரயோகமல்ல; அதை முதல்வரின் பிறந்த நாளோடு பிணைப்பது அதிகார துஷ்பிரயோகம்தான். ஆனால் இதுபோன்ற ஜனநாயகக் கோட்பாடு மீறல்கள் இன்று மத்தியிலும் மாநிலங்களிலும் வாடிக்கையாகி விட்டன. பஸ்கள் வாங்கப்பட்டதில் ஊழல் இல்லாமலிருந்தால் அதுவே பெரிய விஷயம்!



• தமிழகத்தின் ஆசியுடன்...!

● கு. நாகராஜன், நாமக்கல்.

? ஜெயலலிதாவின் தொடர் தொந்தரவுகளிலிருந்து வாஜ்பாய் விடுதலையடைந்து விட்டாரா?

## பழிவாங்குகிறாரா சு. சுவாமி?

! ஜெ மட்டுமென்ன... இனி ஆட்சிப் பொறுப்பின் தொல்லைகளிலிருந்தே விடுதலைதான்!

● வி. சிவா, மதுரை – 16.

வாசிம் அக்ரம் தலைமையில் பாகிஸ்தான் கிரிக்கெட் அணி வெற்றிகளாகக் குவித்திருக்கிறதே?

! ஜடேஜாவின் தலைமையில் இந்தியாவும்தான் இங்கிலாந்து, பாகிஸ்தான் அணிகளைத் தோற்கடித்து வெற்றிகளைக் குவித்துள்ளது. அஷாரை விட ஜடேஜா தலைமை எவ்வளவோ மேல் என்று விமர்சனங்களும் ஆரம்பித்து விட்டன!

● க. பவளமல்லி, நெய்வேலி. ❑

? ஜெயைப் பற்றி கார்ட்டூன், தலையங்கம் வெளியிடுவதில், காதில் விழுந்த செய்திகள் வெளியிடுவதில், தமிழ் இதழ்களிலேயே கல்கிதான் முதலிடம் வகிக்கிறது. இம்மாதிரி ஏன் மற்ற தலைவர்களைப் பற்றி வெளியிடுவதில்லை...?



• சிரிப்புச் சுனாமி!



• இல்லாத பதில்!

! ஏனென்றால் மற்ற தலைவர்களை விட 'ஜெ'தான் அதிகமாகச் செய்திகளில் அடிபடுகிறார்; மற்ற தலைவர்களை விட 'ஜெ'தான் தேசநலன் கருதும்போது அதிக ஆபத்தானவர்.

● எம். கார்த்திகேயன், கோவை – 11.

? 'உதயம்' சமஸ்கிருத வார்த்தை. 'சூரியனும்' அதுவே. அப்படியிருக்க அந்தப் பெயர்கொண்ட கட்சிச் சின்னம் உடையவர்கள் 1999 சமஸ்கிருத ஆண்டு எனக் கொண்டாடப்படுவதைக் கிண்டலடிக்கிறார்களே? முரண்பாடாக இல்லை...?

! உதயசூரியன், கருணாநிதி, தயாளு என்ற பெயர்த் தொடர்புகளெல்லாம் இல்லாவிட்டாலும் சமஸ்கிருத ஆண்டைக் கேலி செய்ய வேண்டியதில்லை. தமிழைப் போல, அதுவும் ஒரு தொன்மையான, அழகான வளமான மொழிதான். நாம் தமிழ் மாநாடு கொண்டாடவில்லையா? அதைப் போல் சமஸ்கிருத ஆண்டு கொண்டாடுவதில் தவறென்ன!

● ஜி. ஜெயராமன், கூந்தலூர்.

? மனித மூளை – கம்ப்யூட்டர் மூளை – வித்தியாசம் என்ன...?

! மனித மூளை கம்ப்யூட்டரை இயக்கும். கம்ப்யூட்டர் மனித மூளையை இயக்க முடியாது. அதாவது கம்ப்யூட்டருக்குச் சுயமாக மூளை கிடையாது!

● க. நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.

? நாம் கற்றுக் கொண்டிருக்கும் கல்வி நம் பண்பாட்டை போதிக்கிறதா?

! கல்வி, பண்பாட்டை போதிக்கவில்லை. டிவியோ பண்பாட்டை மென்னி பிடித்துத் திருகுகிறது – லேட்டஸ்டாக ஃபேஷன் சானல் என்ற ஆபாசக் களஞ்சியம்.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
க. பவளமல்லி,
7, தேனி தெரு, வட்டம் - 12,
நெய்வேலி - 607 802.

**சமீபத்தில் மறைந்த ஏ.கே.ஏ. அப்துஸ்சமது பற்றிச் சொல்கிறார் அவரது கல்லூரித் தோழரும், முன்னாள் சட்டமன்ற உறுப்பினருமான வந்தவாசி கே.ஏ. வஹாப்.**



# “நின்று போன பூங்காற்று”

சட்டக் கல்லூரியில் அப்துஸ்சமது அவர்கள் மாணவராக இருந்த போது விழா ஒன்றுக்குப் பேரறிஞர் அண்ணாவும், சி. சுப்பிரமணியமும் அழைக்கப்பட்டிருந்தார்கள். அந்நாட்களில் தி.மு.க. சார்பு மாணவர்களின் பேச்சுத்தான் சிறப்பாக இருக்கும் என்ற பொதுவான கருத்து இருந்தது.

ஆனால் சமது அவர்களின் அழகான பேச்சைக் கேட்ட சி.எஸ். அவர்கள் அண்ணா அவர்களிடம், “தி.மு.க.வைச் சேராத ஒரு முஸ்லீம் மாணவன் எப்படி ஆற்றொழுக்கு நடையில் பேசுகிறான் பார்த்தீர்களா!” என்று வியந்து கூறினார். ‘தி.மு.க.வைச் சாராதவர்கள் கூட மேடைப் பேச்சில் சிறந்து விளங்க முடியும்’ என்று அண்ணாவுக்குச் சொல்வது போல் சி.எஸ். பேச்சு இருந்தது. சி.எஸ். அவர்களுக்கு அண்ணா பதில் ஏதும் சொல்லவில்லை. மைக்கில் பேசிக் கொண்டிருந்த சமது முடிக்கும்போது, “நான் ஓரளவு நன்றாகப் பேசுவதற்குக் காரணம், அண்ணாவின் பல்கலைக்கழகத்தில் நான் கற்ற பாடம்தான்” என்று சொல்லி முடித்தார். அப்போது அண்ணா பெருமைபொங்க சி.எஸ். அவர்களைப் பார்த்தார்!

சமது அவர்களின் அரசியல் ஆசான் [illegible]தமில்லத் அவர்கள்தான். ஆனால் [illegible]ன் மேடைப் பேச்சு, திராவிட [illegible]த்தவர்களையே வியக்க வைக்கும் பேச்சு. தமிழகம் முழுவதும் அவர் பேசாத இடங்கள் இல்லை. ஒருமுறை விழுப்புரத்தில் நடந்த மீலாது விழாவில் அண்ணாவும் பேசுவதாக இருந்தது. சமது பேசிக் கொண்டிருந்தபோதே அண்ணா அவர்கள் மேடைக்கு வந்து விட்டார். சமது தமது பேச்சை முடித்துக் கொண்டு அண்ணாவுக்கு வழி விட்டார். உடனே அண்ணா மைக்கிற்கு வந்து, “இது மீலாது விழா; சமது அவர்களின் பேச்சைக் கேட்கவே நான் வந்தேன். அவர் பேசி முடித்தபின் நான் பேசுவேன்” என்று கூறி அமர்ந்து விட்டார். சமது அரைமணி நேரம் பேசியதைக் கேட்ட பிறகே அண்ணா பேசினார். சமது அவர்களின் மேடைப் பேச்சாற்றலைப் பாராட்டும்விதமாகத்தான் சட்டமன்றத்தில் இரங்கல் தீர்மானத்தில் பேசிய கலைஞர் அவர்கள் கூட, ‘மேடையில் வீசிய மெல்லி பூங்காற்று நின்று விட்டது’ என்று பொருத்தமாகக் கூறினார்.

சமது அவர்களின் தந்தை அப்துல்

ஹமீது பாகவி ஒரு சிறந்த இஸ்லாமிய மார்க்க அறிஞர். இஸ்லாமைப் பற்றிய பல புத்தகங்களை அவர் எழுதியிருக்கிறார். திருகுர்ஆனை தமிழில் மொழிபெயர்த்த சிந்தனையாளர் அவர். எட்டாவது படித்து முடித்திருந்த சமது, அப்பாவுக்கு உதவியாக, அவர் சொல்லச் சொல்ல தமிழில் மொழிபெயர்ப்பை எழுதி உதவினார். "குர்ஆனை இருபது முறை நல்ல தமிழில் பிரதி எடுத்து எழுதிய காரணத்தால் என் தமிழ் எழுத்தும் சிறந்தது. தலை எழுத்தும் சிறந்தது" என்று சமது அவர்களே சொல்லியிருக்கிறார்.

வேலூர் கோட்டையில் அமைந்துள்ள ஜலகண்டேஸ்வரர் கோயில் தொல்பொருள் இலாகாவின் ஆளுகையில் இருந்ததால் பக்தர்கள் கோயிலுக்குச் செல்ல முடியாதது மட்டுமல்ல; பூஜை நடத்த முடியாத நிலையும் இருந்தது. சமது அவர்கள் அந்தத் துறையுடன் போராடி பக்தர்கள் வழிபாட்டுக்கு ஏற்பாடு செய்தார்.

"முஸ்லீம் சிறுபான்மை மக்களின் உரிமைக்காகவும், நல்வாழ்விற்காகவும்; மற்றவர்கள் போராட வேண்டும்; அந்த அளவுக்கு நாம் நடந்து கொள்ள வேண்டும்" என்று சொல்வார் சமது. சமீப காலங்களாக முஸ்லீம் இளைஞர்கள் சிலர் திசைமாறிப் போனது கண்டும் மனம் வெதும்பியிருக்கிறார்.

உலகில் முதலில் தோன்றிய பள்ளிவாசல் மெக்காவில் உள்ள காஃபா எனப்படும் பள்ளிவாசல். வருடத்திற்கு ஒருமுறை அதைத் திறந்து, பன்னீரைத் தெளித்து மயிலிறகால் சுத்தம் செய்வார்கள். சவுதி அரேபிய மன்னர்களுக்கும் அவர் வாரிசுகளுக்கும் உள்ள பிரத்யேக உரிமை அது. ஆனால் ஒருமுறை பள்ளிவாசலை மன்னர் வாரிசுகளுடன் சேர்ந்து சுத்தப்படுத்தும் பெரும் பாக்கியம் எங்கள் சமது அவர்களுக்குக் கிடைத்தது.

சந்திப்பு: **ஸ்ரீநிவாசன்**

# ரயிலில் கிடைத்த உதவி!

ஆறு வயதில் நான் மாண்டலின் கற்றுக் கொள்ள ஆரம்பித்தேன். ஒன்பது வயதில் அரங்கேற்றம். இன்று முப்பது வயதாகி விட்டது. ஆனால், அன்றும் சரி, இப்போதும் சரி, பண விஷயங்களை நான் நேரடியாக கவனித்ததே கிடையாது. அப்பாதான் அதையெல்லாம் பார்த்துக் கொள்ளுவார். இப்போது அவருக்கு வயதாகி விட்டது. என் மானேஜர் கவனித்துக் கொள்ளுகிறார். என்றாலும் எனக்கும் சில அனுபவங்கள் உண்டு.

ஒன்பது வயதில், விஜயவாடா அருகில் குடிவாடா என்கிற இடத்தில் என் முதல் கச்சேரி. கச்சேரி ஆரம்பிக்கிறபோது, இது என்ன சின்னதாய் ஒரு வாத்தியம்! இவனும் பொடிப்பயல்! என்று நினைத்துக் கொண்டு விட்டார்கள் போலும் பொதுமக்கள்! கச்சேரி ஆரம்பிக்கிற போது பத்து, இருபது பேர் கூட இல்லை. மூணு மணி நேரக் கச்சேரியை நான் முடித்தபோது சுமார் இரண்டாயிரம் பேர் கூடி விட்டனர். அந்தக் கச்சேரிக்கு எனக்கு ஐநூறு ரூபாய் சன்மானம். முழு பணத்தையும் வீட்டுக்கு வந்து அட்வான்ஸாகவே கொடுத்து விட்டுப் போய் விட்டார்கள். அந்தக் காலகட்டத்தில் எங்கள் குடும்பத்தைப் பொறுத்தவரை ஐநூறு ரூபாய் என்பது பெரிய தொகை. மறுபுறம் அந்த ஐநூறு ரூபாயை விட, இரண்டாயிரம் பேரின் கைத்தட்டல் எனக்கு அதிக சந்தோஷத்தைத் தந்தது.

பணத்தை விட ரசிகர்களின் அன்பும் ஆதரவும்தான் முக்கியம் என்பதை எனது ஒன்பதாவது வயதில் முழுமையாகப் புரிந்து கொள்ளாவிட்டாலும் ஓர் உள்ளுணர்வால் உணர்ந்தேன். இந்த உண்மை எனக்கு முழுதும் புலனானது ஒரு ரயில் பயணத்தின்போது

மாண்டலின்
யு. ஸ்ரீநிவாஸ்



## பேனாவுக்கு ஊசி போடுங்கள்!

'பார்க்கர்' போன்ற சில உயர் ரகப் பேனாக்களின் உள்ளே இங்க் காட்ரிஜ் (catridge) இருக்கும். இங்க் தீர்ந்துவிட்டால் புதிய காட்ரிஜ் மாற்ற வேண்டும். இங்கே அதன் விலை மிகவும் அதிகம். பழைய காட்ரிஜ்ஜில் இங்க் நிரப்ப முடியுமானால்...? நான் உடனே, ஒரு ஊசி போடும் 'சிரிஞ்ச்' வாங்கி, அதில் மையை நிரப்பி, ஊசிமுனை வழியாக நல்ல அழுத்தத்துடன் மையை காட்ரிஜ் உள்ளே செலுத்தினேன். காட்ரிஜ் நிரம்பியது.

தகவல்: 'தாரக சாரதி'

தான்.

கேரளாவில் கொச்சியிலோ, எர்ணாகுளத்திலோ கச்சேரி. நவம்பர் மாதம் பன்னிரெண்டாம் தேதியன்று புறப்பட வேண்டும். அன்றைய தினம் பிற்பகலில்தான் எனக்கும், என் அப்பாவுக்கும் டிக்கெட் வந்து சேர்ந்தது.

வீட்டில் நிறைய விருந்தினர்கள் வந்திருந்ததால், ஸ்டேஷனுக்குப் புறப்படுவதற்குக் கொஞ்சம் தாமதமாகி விட்டது. அடித்து, பிடித்துக் கொண்டு ரயில் புறப்பட ஐந்து நிமிடம் முன்பாக ஸ்டேஷனுக்குப் போய்ச் சேர்ந்தோம். எங்கள் கோச்சைக் கண்டுபிடித்து ஏறுவதற்கும், ரயில் புறப்படுவதற்கும் சரியாக இருந்தது. டிக்கெட் பரிசோதகர் வந்து, டிக்கெட் கேட்ட போது, எங்கள் டிக்கெட்டை எடுத்துக் காட்டினோம். "இது அடுத்த மாதம் பன்னிரண்டாம் தேதிக்குரிய டிக்கெட்!" என்றார் டி.டி.ஈ. எங்களுக்கு அதிர்ச்சி.

டிக்கெட் புக் செய்தவர்களின் குளறுபடி புரிந்தது. எனக்கும், என் அப்பாவுக்குமாக முதல் வகுப்பு ஏசி, டிக்கெட், அபராதம் எல்லாம் போட்டு, அவர் சொன்ன தொகையைச் செலுத்துமளவுக்கு எங்களிடம் பணமில்லை. "பணமில்லையெனில், அடுத்த ஸ்டேஷனில் இறங்கிக் கொள்ளுங்கள். வேறு எதுவும் என்னால் செய்ய முடியாது!" என்று அவர் கூறி விட்டார்.

என்ன செய்வது என்று புரியாமல் கையைப் பிசைந்து கொண்டு நின்றோம். ரயிலை விட்டு இறங்கி விடலாம். ஆனால், மறுநாள் கச்சேரிக்கு எப்படிப் போவது?

அந்தச் சமயத்தில், எங்களுடன் பயணம் செய்த ஓர் அன்பர், என்னை அடையாளம் தெரிந்து கொண்டு, "கவலைப்படாதீர்கள். உங்கள் டிக்கெட், அபராதம் எல்லாவற்றையும் நானே கட்டுகிறேன்" என்றார். அதை ஏற்க எங்களுக்குக் கொஞ்சம் தர்ம சங்கடமாகத்தான் இருந்தது. ஆனால், அந்த இக்கட்டான சூழ்நிலையில், காலமறிந்து, அவர் செய்த உதவியை ஏற்பதுதான் புத்திசாலித்தனம் என்ற முடிவுக்கு வந்தோம். அவரிடம் பணத்தை வாங்கி, டி.டி.ஈயிடம் கொடுத்து, ரசீது பெற்றோம். நிம்மதிப் பெருமூச்சு விட்டோம்.

அவரது முகவரியை வாங்கிக் கொண்டு, நன்றி செலுத்தினோம். கச்சேரி முடிந்து சென்னை திரும்பியவுடன், அண்ணா நகரிலிருந்த அவரது வீட்டுக்கு நானே நேரில் சென்று, பணத்தைத் திருப்பிக் கொடுத்து, நன்றி சொன்னேன். அச் சமயத்தில் உதவிய அந்த அன்பரின் பெயர் வெங்கடேஷ். நான் வணங்கும் வெங்கடேசப் பெருமாளே, அவர் உருவில் வந்து எனக்கு உதவியதாக நினைத்து நெகிழ்ந்து போனேன்!

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**
படம் : **யோகா**



"தலைவர் ஒரு மாதிரி...! எப்போது கூட்டணியிலிருந்து யாரை தூக்கி வீசுவார்னு சொல்லவே முடியாது!"
– குல்லூர



# 'ஈராஸை' நெருங்கும் 'நியர்' விண்கலம்

சூரியக் குடும்பத்தைச் சேர்ந்த கோள்களான செவ்வாய் - ஜூபிடர், இவ்விரண்டிற்கும் இடைப்பட்ட பிரதேசத்தில் பல நூறாயிரம் பாறைச் சிதறல்கள், 'குறுங்கோள்'கள் என்னும் பெயரில் வளைய வந்து கொண்டிருக்கின்றன.

இவை பற்றி ஆராய்வதற்காகவே 1996 பிப்ரவரியில் NEAR (நியர்) (Near Earth Asteroid Rendeguous) விண்கலம் செலுத்தப்பட்டது.

முதலில் செவ்வாய்க்கோளின் சுற்றுப் பாதையைக் கடந்து சென்ற இக் கலம் சுமார் 16 மாத பிரயாணத்தின் முடிவில், 1997 ஜூன் 27ல் 'குறுங்கோள் 253' எனக் குறிப்பிடப்படும் 'மத்தில்டே(Mathilde) யை 750 மைல் தொலைவில் கடந்து சென்றது.

எரிகற்களாய் பூமியின் வளி மண்டலத்தை ஊடுருவிக்கொண்டு சீறி வரும் இரவுப்பூக்களில் காணப்படும் 'கார்பனேஷி'யஸ் கொன்டிரைட்ஸ் (Carbonaceous Chondrites) என்னும் கனிமப் பொருளை மிகுதியாக உடையது, இந்த 'மத்தில் டே' குறுங்கோள்.

'மத்தில்டே'யைக் கடந்த இவ் விண்கலம், மீண்டும் பூமியை நோக்கித் திரும்பி 1998 ஜனவரி 23ந் தேதி பூமிக்கு மிகச் சமீபமாக சுமார் 335மைல் தொலைவில் பயணம் செய்தது. தனது இறுதி இலக்கான 'ஈராஸை'ச் சென்றடையத் தேவையான வேகத்தைப் பெறும் பொருட்டு, இது பூமியில் 'கவர்ச்சி' விசையினைப் பயன்படுத்திக் கொள்ளும் நோக்கத்திலேயே இவ்வாறு பூமியை ஒட்டித் தனது பாதையை வகுத்துக் கொண்டது.

இது இவ்வருட ஆரம்பத்தில் (1999 ஜனவரியில்) 'அஸ்டிராய்ட் 433' எனப் படும் ஈராஸ் (Eros) குறுங் கோளைச் சென்றடைந்து, அதன் தரையில் இருந்து சுமார் 120 மைல் உயரத்தில் வலம் வர ஆரம்பித்துள்ளது.

காலப் போக்கில், விண்கலத்துக்கும் - குறுங் கோளுக்கும் இடையில் உள்ள தூரம் படிப் படியாக குறுகி வர- 2000 ஆவது ஆண்டின் முற்பகுதியில் 'ஈராஸி'ல் கலம் தரையிறங்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

செவ்வாயின் சுற்றுப்பாதையையும் கடந்து, நமது பூமிக்கு அண்மையில் வரும் குறுங்கோள் களின் பட்டியலில் முதலில் இடம் பெற்றிருப் பது இந்த 'ஈராஸ்'தான்! 1.76 வருடத்திற்கு ஒருதடவை சூரியனைச் சுற்றி வருகிறது. 1931ம் வருடம் பூமியை ஒட்டி மிகவும் சமீபித்ததாகச் சொல்லப்படும் இக் குறுங்கோள் மீண்டும் 1975ல் பூமியை மிகக் குறுகிய தொலைவில் கடந்து சென்றிருக்கிறது.

'நியர்' விண்கலத்தில் பொருத்தப்பட்டிருக் கும் இரண்டு 'ஸ்பெக்ட்ராமீட்டர்'களும் ஈராஸில் உள்ள கனிமங்களின் விகிதத்தை ஆராயும் பணியில் ஈடுபடவுள்ளன. 'அல்டிமீட்டர்' (altimeter) கருவி குறுங்கோளின் மேற்பரப்பில் காணப்படும் ஏற்ற இறக்கங்களை ஒவ்வோர் இருபது அடி இடைவெளியிலும் கணக்கிட்டுத் தகவல் தரும் வலிமை வாய்ந் ததாகும். இதில் இணைக்கப்பட்டிருக்கும் 'மக்னெட்டோ மீட்டர்' (Magnetometer) கோளின் காந்தப்புல வலிமையைத் துல்லிய மாக அறியவல்லது.

'ஈராஸ்' குறுங்கோள், 'மத்தில்டே'யைப் போலன்றி அதன் கனிமக் கட்டமைப்பிலும் பெரிதும் மாறுபட்டுள்ள தாக கருதப்படுகிறது.

இது 'எஸ்' (S) ரக குறுங்கோள் இனத்தைச் சார்ந்தது என்கிறார்கள். 'எஸ்' என்பது அதில் உள்ள 'சிலிகேட்' மூலகத்தைக் குறிப்பிடு வதாகும். இத்தகைய குறுங்கோள்களில் இரும்பு, மக்னீசியம், சிலிகேட், சிறிதளவு நிக்கல், இரும்பு கலந்த உலோகப் படிமங்கள் விரவிக் கிடப்பதாகத் தெரிகிறது. 'நியர்' ஆய்வுக்கலம் இதை நமக்கு உறுதி செய்யும். அப்புறம் அங்குள்ள உலோகங்களை பூமிக்கு எடுத்து வர விண்கலங்கள் அனுப்பப்படும். அவற்றை அனுப்புவதில் வல்லரசு நாடுகளுக் கிடையில் போட்டிகளும்- சண்டை களும் உருவாகும்! ஆக மனித குலத் தின் அமைதிக்காகவும் ஏதாவதொன்று அனுப்பப்படுமா என்பதுதான் நம் கேள்வி.

— சர்வசித்தன்



# விதியை எதிர்த்து ஒரு போராட்டம்!

• கேப்டன் சிவகுமார்

ஓரிரு விஷயங்கள் கூட தெரியாத மனவளர்ச்சிகுன்றிய குழந்தைகள்! இவர்களும் தன்னிறைவுடன் கௌரவமான வாழ்க்கை வாழ வேண்டும் என்று செயல்படுகிறது 'புனர்ஜன்மம்.' கோவை மாவட்டம் உடுமலை-பொள்ளாச்சி பிரதான சாலையில் எண்ணி 8-வது கி.மீ. தூரத்தில் பூலாங்கிணறு பக்கம் அந்தியூர் கிராமம். கிராமத்துச் சூழலில் ஓர் ஒதுக்குப்புறமாய் தனிமையில் அமைந்துள்ள அமைப்பு-பள்ளி-கோயில் என்று கூடக் கொள்ளலாம்!

"அரசும் அரசியல்வாதிகளும் இதுமாதிரி கிராமப்புற பகுதி சிறப்புப் பள்ளிகளைக் கண்டுகொள்வது இல்லையே. இங்கே ஊனமுற்றோர் இல்லையா? அவர்களை வைத்துக் கொண்டு பராமரிக்க அவஸ்தைப்படும் பெற்றோர்கள் இல்லையா? அப்படி இந்தக் குழந்தைகள் செய்த பாவம் என்ன? கிராமத்துப் பெற்றோர்கள் செய்த பாவம்தான் என்ன...!"

– என்று அடிக்கடி நியாயமான தமது உள்ளக் கொந்தளிப்பை வெளிப்படுத்தும் கேப்டன் சிவக்குமார் இதன் ஸ்தாபகர். ராமேஸ்வரத்துக்காரர். பூனாவில் பயிற்சி எடுத்து ராணுவத்தில் பதினைந்து வருடங்கள் கேப்டனாக பணியாற்றியவர். மனைவி விஜயா ராணுவ ஹாஸ்பிடலில் சீனியர் நர்ஸ். தங்களது குழந்தை காவ்யா அபூர்வமான மூளைச் சிதைவு நோயினால் பாதிக்கப்பட, அவள் சிகிச்சை நிமித்தம் சென்னை வந்திருக்கிறார்கள். குழந்தை உயிரிழக்க, இருவரும் ராணுவப் பணியை விட்டுவிட்டு இது மாதிரி குழந்தைகளின் வாழ்க்கைக்காக போராடப் புறப்பட்டதாகக் கூறுகின்றனர்.

"காவ்யாவை பெற்று, வளர்த்து, இழந்ததில் ஏற்பட்ட அனுபவம், அதிர்ச்சி, சோகம் ரொம்ப ஆழமானது. எங்களைப் போன்ற பெற்றோருக்கும் காவ்யா போன்ற குழந்தைகளுக்கும் உதவுவது எங்கள் லட்சியம் என்று முடிவு செய்தோம்."



• மனவளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்குப் பயிற்சி...

"ஊனமுற்றவர்களுக்கும் உரிமை இருக்கிறது. அவர்களுக்கு வசதி செய்து கொடுக்க சட்டம் இருக்கிறது. அவர்கள் சுயமரியாதையைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு இந்தச் சமூகத்துக்கு இருக்கிறது. இந்தப் பிரக்ஞையை வளர்க்க நாங்கள் பாடுபடுகிறோம்."

"இது மாதிரி தொண்டு நிறுவனங்களுக்கு அரசு உதவிகள் நிறைய வருமே?"

"மான்யம் நிறைய இருக்கிறது. ஆனால் அதை கிடைக்கச் செய்வது பெரும்பாடு. முதல்ல குழந்தைகளோட அப்பா அம்மா பொருளுதவி செய்யணும். அப்புறம் அக்கம் பக்கம் உள்ளவங்க செய்யணும். பெரிய கம்பெனிகள், செல்வந்தர்கள் செய்யலாம். அப்புறம் வருவதுதான் அரசு. அரசுக்கு எத்தனையோ தலைவலிகள். தொண்டு நிறுவனம் என்பதே என்னைப் பொறுத்தவரை தப்பான வார்த்தை. 24 மணி நேரமும் இலவசமா மாதக் கணக்கில், வருடக் கணக்கில் 'தொண்டு' செய்வதென்பதை ஒப்புக் கொள்ளவே இயலாது. மன ஊனமுற்ற குழந்தைகள் ஒரு நாள் வளர்ந்து இளைஞர்கள் ஆவார்கள். வயது வந்த இத்தகைய பெண்கள் நிலை என்ன என்று யோசிக்க வேண்டாமா? அதற்கான செயல்திட்டத்தைத்தான் இங்கே வகுத்துப் பாதுகாக்க உள்ளோம் பெற்றோர்களின் உதவியோடு.

புனர்ஜென்மம் வளாகத்தில் தனியாக மருத்துவ அறைகள். வகுப்பு அறைகள். சமையல் கூடம். விதிவிலக்காய் ஒரு 'ஒர்க் ஷாப்'.



இரும்புப் பட்டறை.

எதற்கு? கேட், ஜன்னல், கட்டடம், பெயிண்டிங் எல்லாமே இங்கே கேப்டனின் கை வண்ணமாம். அது பற்றி அவரிடமே கேட்டபோது,

"ஊனமுற்றவர்களுக்கு ஒரு தொழிற் பயிற்சி மையம் ஏற்படுத்த ஒரு திட்டம் இருக்கு. ஏற்கெனவே இங்கே பம்ப்-செட் அசெம்பல் செய்தோம். அப்புறம் மின்சார உபகரணங்கள், பனியன் தொழில்னு தொடரலாம்னு இருந்தோம். பணம் போதல. பல பேர்கிட்டே தொழில் ஆர்டர் கேட்டோம். ஊனமுற்றவர்கள் செய்வதனாலோ என்னவோ பதிலே வரலை. ஊனமுற்றவங்களை நம்பத் தயாராயில்லை. இதுதான் உண்மை. இருந்தாலும் நாங்க எங்க நோக்கத்தைக் கைவிடத் தயாராயில்லை" என்கிறார் உறுதியோடு.

மனவளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்கு தியான மண்டபம் கட்டுவது, பொழுதுபோக்கு அம்சத்திற்கு விளையாட்டுத் திடலை விஸ்தரிப்பது, ரிட்டையர்டு எம்ப்ளாயீஸ் இல்லம் ஒன்று ஏற்படுத்துவது என கனவுகளை விரிக்கிறார்.

இதற்கெல்லாம் நிதி?

"மிலிட்டரியில ஈட்டிய வருவாய். சவுதியில என் மனைவி இதற்கென இரண்டு வருடம் தங்கி உழைத்து ஈட்டிய சம்பாத்தியம்.. எல்லாவற்றையும் போட்டாகிவிட்டது. உடுமலை வாடகைக் கட்டடத்தில் இயங்கியபோது இருந்த 42 குழந்தைகள், இப்போது இங்கே 22-ஆகக் குறைந்துவிட்டன. அங்கிருந்து இங்கே வந்து போக ஆகிற வேன் கட்டணம் கொடுக்க முடியாமல் பின்வாங்கி விட்ட பெற்றோர்கள்! குறைந்தபட்சக் கட்டணமே வசூலிக்கிறோம். தினம் தினம் போராட்டம்தான். ஆனால் எங்கள் குழந்தைகள் விதியை எதிர்த்துப் போராடுவதைப் பார்க்கும்போது பணக்கவலை பற்றிய சோர்வு பறந்து போகிறது!

கட்டுரை, படங்கள்:
**கா.சு. வேலாயுதன்**

# தயவுசெய்து...

**மா**வட்ட ஆட்சியாளர் அலுவலகத் தின் வாசலில் வந்து நின்ற அரசாங்க காரி லிருந்து இறங்கிய அனிதா கொண்டை போட்டிருந்தாள். கண்ணாடி அணிந்திருந் தாள். வெளிறின ஊதா நிறத்தில் காட்டன் புடைவை கட்டியிருந்தாள்.

கையில் டைரியுடன், பாக்கெட்டில் மூன்று பேனாக்களுடன் ஸஃபாரி சூட் அணிந்து இணையாக நடந்த செயலா ளரிடம் ஆங்கிலத்தில் ஏதோ விவாதித்தபடி உள்ளே நடந்தாள்.

ஒரு அடுக்கு அரசாங்கக் கோப்புகளு டன் டவாலி முன்னால் ஓடிச் சென்று கலெக்டரின் தனியறை மேஜையில் வைத் தான்.

## 1

வழியில் வணக்கம் சொன்ன சிலருக்கு பதில் வணக்கம் சொல்லி, சிலருக்கு புன் னகை செய்து விவாதத்தைத் தொடர்ந்த அனிதா, தன் அறைக்குள் நுழையும் முன் பாக, "டிலே பண்ணிடாதீங்க. நான் சொன்னதெல்லாம் இன்னிக்கே நடந்தா கணும்" என்றாள் ஆங்கிலத்தில்.

"யெஸ் மேடம்" என்றார் செயலாளர்.

தன் அறைக்குள் வந்து மகாத்மா காந்தி யின் புகைப்படத்தை வணங்கி விட்டு நாற்காலியில் அமர்ந்தாள்.

கம்ப்யூட்டரை உயிர்ப்பித்து அதில் அவளின் அன்றைய அலுவல் பட்டியலைப் பார்த்துக் கொண்டு இரண்டு தொலை பேசிகள் செய்துவிட்டு கோப்புகளைக் கையில் எடுத்துக் கொண்ட போது உள் தொலைபேசி அழைத்தது. எடுத்தாள்.

"சொல்லுங்க... அப்படியா?" என்று வாட்ச்சைப் பார்த்துவிட்டு, "அவருக்கு பத்து முப்பதுக்குத்தானே அப்பாயிண்ட் மெண்ட் கொடுத்திருக்கேன்? அஞ்சி நிமி ஷம் கழிச்சி உள்ளே அனுப்புங்க" என்று வைத்தாள்.

ஐந்து நிமிடங்கள் கழித்து கதவைத் தட்டி அனுமதி பெற்றுக் கொண்டு பட்டு வேட்டி, பட்டுச் சட்டையில் அறை முழுக்க ஜவ்வாது வாசனையைப் பரப்பியபடி



உள்ளே வந்த ஐம்பது வயதுப் பிரமுகர் முகத்தில் நிரந்தரமாகப் புன்னகை இருந்தது.



"வணக்கம்மா!"

''வணக்கம். உக்காருங்க.''

நாற்காலியை ஓசை செய்து நகர்த்தி அமர்ந்த அவர், கொண்டு வந்த சிறிய சூட்கேசை மடியில் வைத்துக் கொண்டார். கிட்டத்தட்ட எல்லா விரல்களிலும் மோதிரம் அணிந்திருந்தார்.

''சொல்லுங்க சார். என்ன விஷயம்?'' என்றாள் அனிதா பார்த்துக் கொண்டிருந்த கோப்பை மூடி வைத்துவிட்டு.

"தியேட்டர் லைசென்ஸ் விஷயமாத்தான்..."

"அதான் அன்னிக்கே தீர்மானமா சொல்லிட்டேனே. சைட் இன்ஸ்பெக்ஷன் வந்தப்போ எனக்கு ரொம்ப ஆச்சரியமா இருந்திச்சு. அந்த இடத்தில தியேட்டர் கட்டறதுக்கு எப்படி அப்ரூவல் கொடுத்தாங்கன்னே எனக்குப் புரியலை."

''அதெல்லாம் எதுக்கும்மா மறுபடி பேசிக்கிட்டு. அப்ரூவல் வாங்கியாச்சு! கட்டியும் முடிச்சாச்சு. எழுபது லட்சம் போட்ருக்கேன். இப்ப வந்து நீங்க லைசென்ஸ் கொடுக்க மாட்டேன்னு பிடிவாதம் பிடிச்சா எப்படி?"

"இதோ பாருங்க. நான் சட்டப்படிதான் போக முடியும். அந்த ரோடு இருபதடி கூட இல்லை. அந்த இடத்தில அடிக்கடி டிராஃபிக் ஜாம் ஆகுதுன்னுதான் 'ஒன் வே' பண்ணிருக்கு. தியேட்டர் வந்தா என்னாகும்? நெரிசல் கட்டுப்படுத்த முடியாதபடி ஆய்டும். அதே ரோட்ல மூணு ஸ்கூல் இருக்கு. ஸ்கூலுக்குப் போற குழந்தைங்க ரொம்ப சிரமப்படுவாங்க. தியேட்டர்ல சரியான பார்க்கிங் வசதி இல்லை. பாதி வண்டி வெளிலதான் நிறுத்துவாங்க. எப்படிப் பார்த்தாலும் பொது மக்கள் அவதிப் படுவாங்க."

''சும்மா அதையும் இதையும் பேசாதீங்கம்மா. வெளிப்படையாப் பேசுவோம். நீங்க லைசென்ஸ் கொடுக்கறதுக்கு என்ன எதிர்பார்க்கறீங்க?" என்று அவர் சூட்கேஸை எடுத்து மேஜை மேல் வைத்தார்.

அனிதா முகம் சிவந்தாள்.

"சார், லட்சங்கள் சம்பாரிக்கிறதுக்காக படிச்சவ இல்லை நான். லட்சியத்தோட ஐ.ஏ.எஸ். படிச்சவ! எனக்கு லஞ்சம் கொடுக்க முயற்சி செஞ்சீங்கன்னு உங்க மேல நடவடிக்கை எடுக்க வேண்டியதாயிடும். எந்திரிச்சிப் போயிடுங்க!"

ஆவேசமாக எழுந்தார் அவர்.

"என்னோட சொந்த சித்தப்பா ஒரு மத்திய அமைச்சர்ன்னு உங்களுக்குத் தெரியுமா? இந்தச் சின்ன விஷயத்துக்கெல்லாம் அவரைத் தொந்தரவு செய்ய வேணாமேன்னு பார்த்தேன்."

பட்டுக்கோட்டை பிரபாகர்



''மாப்ளை டீ.வில கிரிக்கெட் மாட்ச்சுகளை ஒன்னு விடாமல் பார்ப்பார் போலிருக்கு...''

''அதெப்படி உங்களுக்குத் தெரியும்?''

''அங்கே பாருங்க... போண்டாவை எடுத்து பேண்ட்ல தேய்ச்சி... தேய்ச்சி எச்சில் தடவி ஷைன் ஏத்தறாரு...!''

– ஓரியூர் கே. சேகர்

''அதிகபட்சம் என்னை நீங்க டிரான்ஸ்ஃபர் செய்ய வைக்கலாம். அவ்வளவுதான். அதுக்கெல்லாம் பயப்படறவ இல்லை நான். ஏற்கெனவே எட்டு ஸ்டேட் பார்த்தாச்சு! புறப்படறீங்களா?''

''உங்களை.... பார்த்துக்கறேன்!'' கோபமாகப் புறப்பட்டு அவர் செல்ல...

மகாத்மா காந்தியை பெருமிதத்தோடு பார்த்த அனிதாவைத் தட்டி எழுப்பினான் மகேஷ், ''அனிதா, எந்திரிம்மா. ஏதோ ப்ராஜெக்ட் வொர்க் கம்ப்ளீட் பண்ணிட்டு ஸ்கூலுக்குப் போகணும்னு சொன்னியே... கமான்! கமான்! எந்திரி.''

படுக்கையை விட்டு எழுந்து உட்கார்ந்த அனிதா பாதி ஷேவிங்கில இருக்கும் அப்பாவைப் பார்த்தாள். அருகில் உடம்பைக் குறுக்கி உறங்கும் தம்பியைப் பார்த்தாள். கிச்சனில் இருந்து மிக்ஸி சப்தம் கேட்டது. கூடவே, ''என்னங்க, அவ எந்திரிச்சாளா, இல்லையா?'' என்று அம்மாவின் குரலும் வந்தது.

வாஷ்பேசின் கண்ணாடி பார்த்து ஷேவிங்கைத் தொடர்ந்த மகேஷ் திரும்பிப் பார்த்து, ''என்ன? இன்னும் தூக்கம் வருதா? இன்னும் அஞ்சே அஞ்சி நிமிஷம் மட்டும் தூங்கறியா?'' என்றான்.

''வேணாம்'' என்று போர்வையை மடித்துப் போட்டு விட்டு தன் இரட்டைப் பின்னலில் காய்ந்து ஒட்டிக் கொண்டிருந்த பூச்சரத்தை கூந்தல் இழைச் சிக்கல்களிலிருந்து விடுவித்தபடி, ''ஒரு அருமையான கனவு டாடி'' என்றாள்.

''என்ன?''

''நான் ஐ.ஏ.எஸ். முடிச்சி டிஸ்ட்ரிக்ட் கலெக்டராயிட்டேனாம். ஒரு தியேட்டருக்கு லைசென்ஸ் வாங்க என்கிட்ட ஒரு ஆள் லஞ்சம் கொடுக்க வர்றானாம்.''

''வாங்கினியா இல்லையா?'' என்று சிரித்தான் மகேஷ்.

''போங்க டாடி! நான் வாங்குவேனா? அவனை லெஃப்ட் அண்ட் ரைட் வாங்கிட்டேன். இந்தக் கனவுல எனக்கு ஒரே ஒரு வருத்தம்'' என்றாள் டூத் பிரஷ்ஷில் பேஸ்ட் பிதுக்கிக் கொண்டு.

''என்ன?''

''கனவுல நான் கண்ணாடி போட்டிருந்தேன் டாடி, விச் ஐ டோண்ட் லைக்! ஐ.ஏ.எஸ். படிச்சி முடிக்கிறதுன்னா கண்ணாடி போட்டாகணுமா?''

''அப்படியெல்லாம் எதுவும் இல்லை. நான் உனக்கு கண்ணுக்கு எக்ஸர்சைஸ் சொல்லித் தர்றேன்.''

''அதெல்லாம் அப்புறம் சொல்லித் தரலாம். முதல்ல அவ குளிச்சுட்டு வந்துடட்டும். அனிதா, போ! குளி!'' என்று அங்கு வந்த சித்ரா, ''டேய்! படவா! எந்திரிடா! தூங்கற மாதிரி நடிக்காதே! நீ கண்ணு முழிச்சிப் பார்த்ததை நான் பார்த்துட்டேன்'' என்று விஷ்ணுவை கிச்சுகிச்சு மூட்ட....

அவன் துள்ளியெழுந்து, ''அம்மா, இவளைப் பாரு! இன்னும் காலேஜுக்கே போகலை. அதுக்குள்ளே கலெக்டரா யிட்டதா கனவு காணறா!'' என்றான்.

இணைந்த குளியலறையில் பக்கெட்டில் நீர் நிரப்பிக் கொண்டிருந்த அனிதா, ''பாரும்மா! என்னை அவ, இவன்னு சொல்லக் கூடாதுன்னு நீ சொல்லியிருக்கில்லே. உனக்கு முன்னாடியே சொல்றான் பாரு! போடா! இன்னும் ரெண்டு வருஷம்தான் எனக்கு ஸ்கூல். அப்புறம் காலேஜ் போயிடுவேன். நீ காலேஜ் போக இன்னும் எட்டு வருஷமாகுமே!'' என்றாள்.

''பரவால்லை, போடீ!'' என்றான் விஷ்ணு.

''ஏய்! உதை வாங்குவே!'' என்றான் மகேஷ்.

''அய்யோ! அம்மா, இங்க வாயேன்!'' திடீரென்று அனிதா பதறி அலற.. தன் மேல் தொற்றியிருந்த விஷ்ணுவை இறக்கி விட்டு விட்டு பாத்ரூமுக்கு ஓடி வந்தாள் சித்ரா.

''என்ன? என்னம்மா?''

''அதோ பாரு...!'' என்று மூலையில் காட்டினாள் அனிதா.

''ச்சே! கரப்பான்பூச்சிக்குத்தான் இப்

படிக் கத்தினியா?''

எட்டிப் பார்த்துச் சிரித்த மகேஷ், "அய்யே! ஷேம் அனிதா! ஒரு கலெக்டர் கரப்பான்பூச்சிக்கு பயப்படலாமா?" என்றான்.

''அப்படிக் கேளுங்க டாடி'' என்று அப்பாவின் கையைப் பிடித்துக் குலுக்கினான் விஷ்ணு.

அவன் தலையில் செல்லமாகத் தட்டிய சித்ரா, "அன்னிக்கு வீட்டுக்குள்ளே வெட்டுக்கிளி வந்துட்டதுக்கு எவ்வளவு பயந்தே நீ! பெரிய தைரியசாலின்னு நினைப்பு!" என்றாள்.

"நான் டாடி மாதிரியே ஒரு கம்ப்யூட்டர் என்ஜினியராத்தானே வரப் போறேன். கம்ப்யூட்டர் என்ஜினீயர் தைரியசாலியா இல்லாம இருந்தா பரவால்லை. ஆனா ஒரு கலெக்டர் இப்படி பயந்தாங்கொள்ளியா இருக்கலாமா?"

"டேய்! போதும்டா. அப்புறம் அக்கா அழுதுடுவா! நீ குளிச்சுட்டு வா!"

"ஒரு கலெக்டர் அழவும் கூடாதே!"

''சரிதான் வாடா!'' என்று அவனை ஹாலுக்கு இழுத்து வந்த மகேஷ், "போ! நீ அந்த பாத்ரூம்ல குளிச்சுட்டு வா!" என்று பின்பக்கம் தட்டி அனுப்பிவிட்டு நியூஸ் பேப்பரை எடுத்தான்.

அனிதா குளித்து ஸ்கூல் யூனிஃபார்ம் அணிந்து, பெல்ட் போட்டு, பேட்ச் பின் செய்து சீப்பும், எண்ணெய் பாட்டிலும் எடுத்துக் கொண்டு அம்மாவிடம் வர... பேப்பரில் இருந்து நிமிர்ந்தான் மகேஷ்.

''என்ன அனிதா இது, டாடி என்ன சொல்லிருக்கேன். உன் வேலைகளை நீயே செய்துக்கணும்னு சொல்லிருக்கேனா இல்லையா? பதினஞ்சி வயசாச்சு. இன்னும் அம்மாதான் உனக்குத் தலைபின்னி விடணுமா?"

''எனக்குச் சரியா வர மாட்டேங்குது டாடி.''

''முதல் தடவை வராது. நாலு தடவை போட்டுப் பழகு. வந்துடும். என்ன, பெரிய விஷயமா தலை பின்னிக்கிறது? கம்ப்யூட்டர் கேம்ஸ்ல ஃபைனல் ஸ்டேஜ் வரைக்கும் வர்றே! இதென்ன பிரமாதம்."

"சரி, நானே பின்னிக்கிறேன், விடும்மா."

"இப்ப டைமாச்சி. ஸண்டே பின்னிப் பழகிக்கோ" என்றாள் சித்ரா.

"சித்ரா, ஒண்ணும் டைம் ஆகலை. விடு! அவளே பின்னிக்கட்டும்."

அனிதா தலை பின்னி இரட்டைப் பின்னல்களின் முனைகளில ரப்பர் பாண்ட் போட்டு வந்து மகேஷிடம் காட்ட... "நல்லாத்தானே இருக்கு! வெரிகுட்!" என்றான்.

"டாடி, இன்னிக்கு ஸ்கூல்ல ஸ்போர்ட்ஸ் மீட் இருக்கு. அதனால எனக்கு அரை நாள்தான்."

''அப்படீன்னா நான் ஆபீஸ்லேர்ந்து நாலு மணிக்கே வந்துடறேன். உன்னை இன்டர்நெட் சென்டருக்குக் கூட்டிட்டுப் போறேன். ஓகே?''

"ஓகே டாடி."

அனிதா சாப்பிட்டு முடித்து ஸ்கூல்பேக், லஞ்ச் பேகுடன் வாசலில் தன் சைக்கிளில் புறப்பட... மகேஷ், சித்ரா இருவரும் நின்று கையசைத்து 'பை' சொல்லிவிட்டு உள்ளே வந்தார்கள்.



**''இந்த படிச்சீங்களா? 'எம்.பிக்கள் வாங்க, விற்க அணுகவும்'னு போன் நம்பரைப் போட்டு வரி விளம்பரம் வந்துருக்கு!''**

**– வளர்மதி ஆசைத்தம்பி**

இரண்டு பைக்குகளில் சாய்ந்தபடி நின்ற நான்கு இளைஞர்களில் கூலிங்கிளாஸ் அணிந்த செல்வா, "என்னடா இது... உன் ஏரியால ஃபிகர்கள் பூத்துக் குலுங்கும்னு சொன்னே... ஒண்ணும் சரியில்லையே. ஆல் தொத்தல்ஸ் மாம்'' என்றான்.

''நல்ல ஃபிகராவே வந்துட்டாலும் என்ன செஞ்சிடப் போறே நீ?''

"என்ன செய்யணும்? நீ ஆளைக் காட்டு பிரதர். நீ சொல்ற ஆளுக்கு நான் முத்தம் கொடுத்துக் காமிக்கிறேன். தைட்டு பார்பில்லு உன்னோடது. அதான் பெட்டு! என்னன்றே?''

தூரத்தில் சைக்கிளில் வந்து கொண்டிருந்தாள் அனிதா.

(தொடரும்)

ராம்குமார் கழுத்தைத் திருப்பி உள்ளே பார்த்தான்.

அகிலா வாழைப்பூ நறுக்கிக் கொண்டிருந்தாள். சமையலறையின் சுவரில் சாய்ந்து உட்கார்ந்து நிதானமாக கள்ளனை ஆய்ந்து கொண்டிருந்தவளின் முகம் வெறுமையாக எந்த உணர்வையும் வெளிப்படுத்தாத பாறைத்தனத்துடன் தெரிந்தது.

"அரை தம்ளர் காப்பி..." என்றான்.

பதில் சொல்லாமல் உடனே எழுந்தாள். தயாராக இருந்த பாலையும் டிகாக்ஷனையும் சர்க்கரையையும் கலந்து சூடாக்கி அரை தம்ளர் நிறைந்ததும் எடுத்துக் கொண்டு வந்து அவன் எதிரிலிருந்த டீப்பாய் மேல் வைத்தாள். மறுபடியும் போய் வாழைப்பூவிடம் உட்கார்ந்து விட்டாள்.

நீண்ட பெருமூச்சுடன் அவன் பேப்பரைக் கீழே வைத்துவிட்டு காப்பியை எடுத்துக் கொண்டான்.

அகிலா ஏன் இவ்வளவு மாறி விட்டாள் என்று இதயம் லட்சத்தோராவது தடவையாக நினைத்தது.

முன்பெல்லாம் வாழைப்பூ நறுக்குகிற வேலை என்றால் இப்படியா கிச்சனுக்குள் முடங்கிக் கொள்வாள்?

தரையில் பெரிய தமிழ் பேப்பரை விரித்



துப் போட்டு ஹாலில் வந்து உட்கார்ந்து விடுவாள். அவனிடம் ஏதாவது பேச்சுக் கொடுத்துக் கொண்டே மடலைப் பிரிப்பாள். சில சமயங்களில் டி.வி. கூட ஓடும். ஏதாவது நகைச்சுவை காட்சியென்றால் அவளுக்கு உற்சாகம் பிய்த்துக் கொண்டு போகும். சிரிக்கும் போது முகம் தாமரைப் பூவாய் மலர்வதைப் பார்க்கும் போதே அவனுக்கும் பரவசமாய் இருக்கும். சோபா விட்டிறங்கி தரையில் உட்கார்ந்து அவனும் நறுக்கி மோர்த் தண்ணீரில் போடுவான்.

இப்படியா ரோபோ மாதிரி காப்பியை தொப்பென்று வைத்து விட்டுப் போவாள்?

ஞாயிற்றுக் கிழமைகளில் மட்டும்தான் இரண்டாவது டோஸ் காப்பி சாப்பிடுகிற வழக்கம் அப்போதெல்லாம். எட்டு மணி அடித்ததுமே நுரை ததும்ப கமகம வாசனையுடன் வந்து அவன் கையில் கொடுப்பாள். பேப்பரை செல்லமாகப் பிடுங்கிக் கீழே வைத்து விட்டு, ''எதையும் அனுபவிச்சுச் செய்யணும்... மத்த நாள்ல எல்லாம் இந்த எட்டு மணிங்கறது எவ்வளவு டென்ஷனும் பரபரப்புமா இருக்கும்? இன்னிக்கு ஒரு நாளாவது ஆற அமர ரசிச்சுக் குடியுங்களேன்.. பருப்புருண்டை மோர்க் குழம்பும் கொத்தவரங்காய் உசிலியும் பண்ணலாம்னு இருக்கேன். மத்தியான டிபனுக்கு ஜவ்வரிசி வடை... புதுசா ட்ரை... சரியா? இல்லேன்னா வேற ஏதாவது சாப்பிடணும்னு ஆசையா இருக்கா?'' என்று அழகாக விசாரிப்பாள்.

அந்த அகிலா எங்கே போனாள்?

இருபத்தோரு வருட தாம்பத்தியம் அலுப்பான ஒரு எல்லைக்கு வந்து நிற்கிறதா? ஆபீஸ், வேலை, குழந்தை, படிப்பு, வீடு, வாசல், வாகனம் என்று ஒரு சக்கர வட்டம் சுற்றி விட்டு இறங்கியாயிற்றா? என்ன இருக்கிறது புதிதாக என்று ஒரு விரக்தி அவளை பின்னிக் கொண்டு விட்டதா?

ராம்குமார் எழுந்து ஷர்ட்டை மாட்டிக் கொண்டான். குனிந்து கண்ணாடி பார்த்து தலைவாரிக் கொண்டபோது இரண்டு காதுகளைச் சுற்றியும் தலைமயிர் சுத்தமாக வெளுத்திருந்தது தெரிந்தது.

''வரேன்'' என்று செருப்பை மாட்டிக் கொண்டான்.

''ம்...'' என்று பதில் வந்தது.

கிரில் கதவை உட்பக்கமாய்த் தாழ்ப்பாள் போட்டு படியிறங்கியபோது மனம் எதையோ எதிர்பார்க்க, அவன் மறுபடி திரும்பிப் பார்த்தான்.

அவன் அதே போல சுவரில் சாய்ந்தபடி பொடிப் பொடியாக நறுக்கிக் கொண்டிருந்தாள்.

''பஸார் வரைக்கும் போறதா இருந்தா வரும்போது கொள்ளு வாங்கிட்டு வாங்க

ளேன்... ஒரு புத்தகத்துல படிச்சேன் இன்னிக்கு... கொள்ளு சூப் சாப்பிட்டா எக்ஸ்ட்ரா சதை, ரப்பிஷ் எல்லாம் குறைஞ்சு 'சிக்'குனு ஆய்டலாமாம்... என்றபடி துள்ளிக் கொண்டு வந்து இமைகள் படபடக்கச் சொல்வாள். அவனும், 'கொள்ளா? மாட்டுத் தீவனக் கடைல கேட்டு வாங்கணுமா?' என்று சிரிக்காமல் கேட்பான். லேசாக சிணுங்கிய படி அவள் 'நவதானியம் விக்கற கடைல கேளுங்களேன்... நான் கொடியிடை மாதிரி இருந்தா உங்களுக்குத்தானே பெருமை?' என் பாள். 'கொள்ளு சாப்ட்டுட்டு சேணம் கட்டி கிட்டு குதிரைக்குட்டி மாதிரி ஓடணும்... அப்பதானே உடம்பு இளைக்கும்?' என்பாள். 'மொதல்ல கெளம்புங்க நீங்க... இதே மாதிரி பேசினா எனக்கு காலடில குளம்பு முளைக் கிற மாதிரி இருக்கு...' என்று முதுகில் கைவைத்து மெதுவாகத் தள்ளுவாள்.

பலவந்தமாக ஓடிவந்த பழைய நினைவு களை பின்னுக்குத் தள்ளிவிட்டு அவன் வேகமாக நடந்தான்.

வெயில் சுதந்திரமாக முழுமையாக ஆக்கிரமித்து விட்டது. தலையில் துணியை சுற்றிக் கொண்டு மோர் வியாபாரிகள் கறு கறுப்பாக இருந்தார்கள். மார்க்கெட்டில் கத் தரியும் வெள்ளரியும் எண்ணெய் தடவின மாதிரி மின்னின. புதினா வாசனை காற்றை நிறைத்திருந்தது.

"ஹலோ ராம்குமார்... என்ன காய்கறி பர்ச்சேஸா?" முதுகில் யாரோ தட்ட, திரும் பியபோது சுதர்ஸன் சிரித்தான்.

"ஹலோ சுதர்ஸன்" என்றான் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு.

"பட்டாணி கிலோ பத்து ரூபாயாமே... தொரத்தாத குறை அவ என்னை... நீயும் அதுக்குத்தானா?" என்றான் சுதர்ஸன்.

"ஆ... ஆமா"

"ரெண்டு நாள் ட்யுவா ஷேவிங்...? காடு மாதிரி தலைகூட கலைஞ்சு... ஏய் ராம் குமார்... என்னப்பா உடம்பு சரியில்லையா?"

"சேச்சே... அயாம் ஆல் ரைட்..."

"காஞ்சிபுரம் போயிட்டு வரலாம்னு ப்ளான்... ஸெல்லதான்.. வரியா?"

"இல்லப்பா... நீ போயிட்டு வா.. இட்ஸ் வெரி ஹாட்... வரட்டுமா?"

சுதர்ஸன் விழித்தபடி தலையாட்ட, இவன் எதிர்ப்பக்கமாய் நடந்தான்.

முதன் முதல் கார் வாங்கியபோது அகிலா அப்படியே அயர்ந்து போனாள். குழந்தை மாதிரி கூட்டு சாதத்தை கிண்ணத்தில் போட்டுப் பிசைந்து எடுத்துக் கொண்டு காரில் உட்கார்ந்து சாப்பிட்டாள். ஸ்டீரி யோவில் போட்ட பாட்டையே திரும்பத் திரும்ப கேட்டாள். அதுவும் டிரைவர் வைத்துக் கொண்டு காஞ்சிபுரத்திற்கு முதலில் போய் கோவில்களை ரவுண்ட் அடித்து விட்டு சென்னையில் பத்தாயிரம் ரூபாய் விற்கிற பட்டுப் புடைவையை ஏழாயிரத் திற்கு வாங்கிக் கொடுத்து வயிற்றுவலி என்ற டிரைவரை பஸ்ஸில் ஏற்றி அனுப்பி விட்டு இரவு நெடுஞ்சாலையில் அவனே சர்வஜாக் கிரதையாய் வண்டி ஓட்டிக் கொண்டு வந் ததை பிரமித்துப் போய்ப் பார்த்தாள்.

தொடர்ந்து வந்த நாட்களில் அவன் தான் மிகப் பெரிய ஹீரோ அவளுக்கு. வீட்டுக்கு வருகிற மனிதர்கள் எல்லாரிடமும் காஞ்சி புரத்துக் கதையை திகிலுடனும் பரவசத்துட னும் பரபரப்புடனும் விவரிப்பாள்.

கரண்ட் போய் விட்டால் உடனடியாக மொட்டை மாடிக்குப் போயாக வேண்டும் அவளுக்கு. அவனும்தான். கார் வாங்கின புதிதில் அடிக்கடி மொட்டை மாடிக்குப் போக வேண்டி வந்தது. அபூர்வமாக அமைந்த சாக்லெட் நிறத்தையும், உயர்ரக ஸ்டீரியோவையும், எப்படி அவன் அலைந்து திரிந்து நாலு பேரிடம் திர விசாரித்து பெஸ்ட் டாக எதையும் வாங்கி வருகிறான் என்பதை யும் நிஜமான ஆச்சரியத்தோடு கண்கள் விரிய அவள் பேசும் போது, அடுத்ததாக எதை அடைந்து அவளை அசந்து போக வைக்கலாம் என்று அவன் தீவிரமாக யோசிக் கத் தொடங்குவான்.

தெரு நீண்டு கொண்டே இருந்தது. இடிக் கிற மாதிரி ஆட்டோ ரிக்ஷா எதிரில் வர, அவன் சடாரென்று நகர்ந்து கொண்டான்.

"ஏன் சார்... பாங்க் மானேஜர் மாதிரி பந்தாவா இருக்கீங்க... ரோட்டுல இடது பக்கம் நடக்கணும்னு கூடவா தெரியாது?" என்று தலையை நீட்டி ஆட்டோக்காரர் திட்டி விட்டுப் போக –

அப்போவும் அகிலாதான் நினைவுக்கு வந்தாள்.

"மானேஜரா... நீங்களா? நாப்பத்திரண்டு வயசுலேவா? எப்படிங்க? ஒங்களுக்கு முன்னால ரெண்டு பேர் இருக்காங்கன்னீங்களே?"

"என்னோட பர்ஃபாமன்ஸ்ல சேர்மன் ரொம்ப இம்ப்ரஸ் ஆகியிருக்கார் அகிலா... கம்பெனி டர்ன் ஓவர் ரெண்டு மடங்கு அதிகம் ஆகியிருக்கே..."

"அய்யோ... நம்பவே முடியலீங்க... வீடு கட்டின வேளை இவ்வளவு நல்ல வேளையா இருக்கும்னு நெனைக்கவே இல்லீங்க... எல லாரும் சொல்ற மாதிரி நா ரொம்ப அதிர்ஷ்

டக்காரிதான் போலிருக்கு... சிட்டிக்குள்ளயும் இல்லாம அதுக்குன்னு ரொம்ப ரொம்பத் தள்ளியும் போயிடாம ஐடியலா இடம் வாங்கி, கச்சிதமா ஆயிரத்து நூறு சதுர அடில பாத்து பாத்துக் கட்டினீங்களே.. கிரஹப்பிரவேசத்துக்கு வந்த அத்தனை பேரும் வீட்டைப் பார்த்து அசந்து போயிட்டாங்களே... என்ஜினீயரிங்கோ, ஆர்க்கிடெக்சரோ படிக்காமலே உங்க வீட்டுக்காரர் எப்படி இவ்வளவு அற்புதமா கட்டினார்னு மூக்கு மேல விரலை வெச்சாங்களே...! அந்த சந்தோஷத்துலேருந்து மீளறதுக்குள்ளே ப்ரமோஷன்னு வந்து நிக்கறீங்க... அய்யோ, என் கண்ணே பட்டுடும் போல இருக்கே..."



**''தலைவரே... உங்களைப் பற்றி ஒரு மந்திரி ஆவேசமா ஏதேதோ புகார் சொல்லியிருக்காரே?''**

**''நானும் கூப்பிட்டு விசாரிச்சேன்யா... அவர் சொன்னது எல்லாம் மனசாட்சியோட கருத்துக்களாம். அதுக்கும் அவருக்கும் எந்த சம்பந்தமும் கிடையாதாம்!''**

**– அம்பை தேவா**

அளவுக்கதிகமா பேசி விட்டதாலோ என்னவோ அகிலா இப்போதெல்லாம் பேசுவதைக் குறைத்துக் கொண்டு விட்டாள்.

ராம்குமார் சட்டென்று நின்றான்.

வேண்டுமென்றேதான் குறைத்து விட்டாளா?

என்னிடம் பேச எதுவுமேயில்லையா? ஆச்சரியங்கள் முடிந்து விட்டனவா? நாற்பத்தைந்து வயதுக்குள் வாழ்க்கையின் எல்லா உயரங்களையும் தொட்டு விட்டு மறுபடி இறங்கி வந்தாயிற்றா? இனி அவனும் சாதாரண புருஷன்தான். இனி என்ன சுவாரஸ்யம் இருக்கிறது?

வீடு வந்து விட்டது. அவனுக்குள் நீண்ட பெருமூச்சு எழுந்தது. அவனைப் பார்த்தவுடனே பாத்ரூமில் டவலைக் கொண்டு போய்ப் போட்டு, அவன் குளித்து விட்டு வருவதற்குள் டேபிளில் தட்டைப் போட்டு காத்திருக்கும் அகிலாவை நினைக்கும் போதே மனசு பாரமாய் உணர்ந்தது.

கதவில் கை வைத்து திறக்கப் போனான். உள்ளே அவள் யாருடனோ பேசுவதைக் கேட்டு அப்படியே நின்றான்.

"இல்லே கமலி... கற்பனைன்னு சொல்லிடாதே... நிஜம்தான் இது.. மாறித்தான் போயிட்டார் அவர்... அகிலான்னு கூப்பிட்டதே இல்லே... அகி, அக்கி, அகில், அகிலூ இப்படி ஏதாவது மாத்தி மாத்தி கூப்பிட்டாத்தான் பிடிக்கும் அவருக்கு... ஏன், எனக்கும்தான்... முன்னெல்லாம் சாதாரண கத்தரிக்காய் ரசவாங்கி செஞ்சால் கூட எப்படி மாஞ்சு மாஞ்சு பாராட்டுவார் தெரியுமா? 'கடைசி வரை ட்ரை ட்ரைன்னு ட்ரையல் பாத்தே திருப்தியில்லாமல் ரச வாங்கியோட போராடினா எங்கம்மா.. நீ எப்படி எக்ஸ்பர்ட் லெவல்லா பண்றே?'ன்னு சாப்பிடும்போது கேட்பார். டீ.வி. பார்க்கும்போது உள்ளங்கைய மூக்குல வெச்சு கண்மூடி மூச்சிழுத்து 'தனியாவும் கத்திரியும் புளியும் மீறி ஒரு வாசனை தெரியுமே, அகில் வாசனையா அது?'ம்பார்... பையன்கிட்ட ரெகமண்ட் பண்ணி, 'எந்த ஃபைவ் ஸ்டார் ஹோட்டல்லயும் கெடைக்காதுடா கண்ணா... அவ்வளவு சூப்பர்டா உங்கம்மா பண்ணினது'ன்னு சாப்பிட வைப்பார். ஒரு எட்டு புள்ளி வெச்சி துளசி மாடம்னு ஒரு சாதா கோலம் போடுவேன் கமலி. எட்டு வயசுல இருந்து போடறது. 'எப்படி ஸ்கேல், காம்பஸ் இதெல்லாம் இல்லாமலே கச்சிதமா போடறே?'ன்னு கண் விரியக் கேப்பார். மூஞ்சிய ஜஸ்ட் பச்சைத் தண்ணில அலம்பி, பளிச்சுனு குங்குமம் வெச்சு, தலையை ஒரு கோடாலி முடிச்சு போட்டுப்பேன். 'எந்த ஃபேர்னஸ் க்ரீமும் போடாம எப்படி இவ்வளவு அழகா இருக்கே?'ன்னு சுத்திச் சுத்தி வருவார்... கோபப்படாம எப்படி நிதானமா இருக்கே அகில், நீ தேடினா மட்டும் காணாம போன சாமான் எப்படி உடனே கெடைக்குது, மாவடு எப்படி ரெண்டு நாள்ல ஊறியிருக்கு நீ போட்டது, இந்த மாதிரி சின்னச் சின்ன பாராட்டுகள்... சின்னச் சின்ன டானிக்குகள்... எதுவுமே இல்லே கமலி... எல்லாமே முடிஞ்சு போன மாதிரி அமைதியா இருக்கார்... ஏன்? என்கிட்ட இருந்த அற்புதங்கள் முடிஞ்சு போச்சா? வெறும் பெருங்காய டப்பா மாதிரி..."

அகிலா அழுது கொண்டிருந்தாள்.

ராம்குமார் மெல்ல மெல்ல திகைப்புக்குள் நுழைந்து கொண்டிருந்தான். ⬤

# குறையொன்றுமில்லை

13

**வி**ஷ்ணுவை திரிவிக்கிரமனாக யக்ஞமே பிரகடனப்படுத்துகிறது என்றேன். அந்தக் கதை நம் எல்லோருக்குமே தெரியும்.

பலி சக்ரவர்த்தி யக்ஞம் பண்ணுகிறான். அஸ்வமேத யக்ஞம். நர்மதை நதிக் கரையில் பண்ணுகிறான்.

கூர்ம புராணத்தில் நதிகளுடைய பெருமை வருகிறது. அதிலே நர்மதா நதியை எப்போது தியானம் பண்ண வேண்டும் என்று சொல்லியிருக்கிறது. எப்போது பண்ண வேண்டுமென்றால் ராத்திரி வேளையில் படுத்துக் கொள்கிறபோதும், விடியற்காலையிலும்.

நர்மதா என்ற நதியினுடைய பெயரை நினைத்தோமானால் விஷ ஜந்துக்களெல்லாம் கிட்டே வரவே வராது! அந்த நர்மதையை வணங்கு என்கிறது சாஸ்திரம்.

இப்படிப்பட்ட நர்மதா நதி தீரத்திலே பலி சக்ரவர்த்தி யக்ஞம் பண்ணுகிறபோது, வாமனனாக-குறளுருவாய்-பரமாத்மா தோன்றினான். மஹா தேஜஸ்வியாக இருக்கிறான் பரமாத்மா.

"தாங்கள் யார்?" என்று பலி சக்ரவர்த்தி கேட்டான்!

'நான் யாரென்று சொன்னால் உனக்குப் புரியும்?....' "அபூர்வ:!" என்றான். "நீ இதற்கு முன் பார்த்திருக்க மாட்டாய்..."

"நீர் எங்கே இருக்கிறீர்?" என்றான் பலி சக்ரவர்த்தி. "உம்முடைய ஊர் எது?"

"எல்லாம் என் ஊர்தான்!... பிரும்மாவால் சிருஷ்டிக்கப்பட்ட அனைத்தும் என் ஊர்தான!"

ஒருத்தரை 'எந்த ஊர்' என்று கேட்டால், 'மெட்ராஸ்' என்று பதில் சொன்னால் எப்படியிருக்கும்?....! 'மெட்ராஸ் மொத்தமும் என்னுடையது' என்று சொன்னால் என்ன அர்த்தம்? ஒன்றுமே இல்லை அவருக்கு என்றுதானே அர்த்தம்!

பார்த்தான் பலி சக்ரவர்த்தி... இப்படி பிரும்ம தேஜஸ் கொட்டுகிறது... ஒன்றுமே இல்லையே இவருக்கு... "அப்பா, அம்மாவாவது இருக்கிறார்களா...? அப்பா என்ன பண்ணுகிறார்?" - கேட்டான்.

பகவான் இரண்டு கைகளையும் விரிக்கிறான்! 'யாரும் இல்லை; அநாதை!'

பலி சக்ரவர்த்திக்கு கர்வம் ஜாஸ்தியாகப் போய்விட்டது. 'யாரும் இல்லை; அநாதை... பிரும்ம தேஜஸ் கொட்டுகிறது... இப்படியொரு பாத்திரம் கிடைக்குமா? இப்படிப்பட்ட இடத்தில் தானே தானம் பண்ண வேண்டும்' என்று "எது வேண்டுமானாலும் கொடுக்கச் சித்தமாயிருக்கிறேன். என்ன வேண்டும்? சொல்லுங்கள்" என்றான்.

இப்படிச் சொன்னதும் பகவான் குறளுருவாய் வந்தானே... சின்ன காலைத் தூக்கிக் காண்பித்து "இந்தக் காலடியால் மூன்றடி மண் வேண்டும்" என்றான்.

"இது போதுமா?"

"இதற்கு மேல் வேண்டியதில்லை...."

அந்த மூன்றடியைக் கொடுக்கப் போகிற நேரத்தில் சுக்ராச்சார்யார் தடுத்தார். 'பெரிய தேவதாகார்யார்த்தமாக இவர் வந்திருக்கிறார்; கொடுக்காதே!' என்றார்.

ஆசார்ய வார்த்தையைக் கேட்காமல் மாற்று அபிப்பிராயத்துடன் செயல்பட்டான் பலி!

பகவான் ஈரடியால் மூவுலகும் அளந்தான்!

**ஆ**கையினாலே மாயா சப்தம் கிருஷ்ணாவதாரத்துக்கும் பொருந்தும். வாமனாவதாரத்துக்கும் பொருந்தும்.

'மாயா, வாமனனே, மதுசூதா நீ அருள்வாய்' என்கிறார் நம்மாழ்வார்.

மாய மாய வாக்கினால் மாயமென்ன
மாயமே!

மாயனை மன்னும் வடமதுரை
மைந்தனை

- இப்படி கிருஷ்ணனையும் மாயன் என்கிறோம். வாமனனையும் மாயன் என்கிறோம். சின்ன அடியைக் காட்டி பெரிய அடியாய் அளந்து கொண்ட மாயன்!

ஆகையினாலே, இன்றைக்கும் சீர்காழியில் தாடாளன் சன்னிதியிலே, பகவான் ஒரு விரலைத் தூக்கிக் காட்டியபடி நிற்கிறான். 'மூன்றடியிலே இரண்டடி ஆகிவிட்டது... மூன்றாவது எங்கே வைக்க?....'

என்று கேட்கிறான்.

பலி சக்ரவர்த்தி சிரஸைக் காண்பித்தான்; மூன்றாவது அடியை அங்கே வைத்தான் பகவான். அவன் தலையை நீட்டியது மாதிரி நாம் நீட்ட வேண்டாமா...? இன்றைக்கும் அவன் விரல் நீட்டிக் கொண்டு இருப்பது அதை ஞாபகப்படுத்தத்தான்.

ஆளவந்தார் அவனைப் பார்த்துக் கேட்கிறார்: "மறுபடியும் எப்பொழுது உன் திருவடியை என் சிரஸில் வைப்பாய்...? சங்கு சக்ராதி அங்குச ரேகை, துவஜ ரேகையுடன் கூடியிருக்கும் படியான உன் திருவடியை மறுபடியும் என் தலையிலே எப்போது வைப்பாய்?"

பகவான் கேட்கிறான்: "மறுபடியும் எப்போது வைப்பாய் என்று கேட்கிறீரே இதற்கு முன் நான் அப்படி வைத்திருக்கிறேனா...?"

"ஒரு தடவை வைத்திருக்கிறாய். மேடும் பள்ளமும் நீரும் மலையும் ஒரு சேர அளந்தாய்



நீ. அப்போது உன் திருவடி படாத இடமே இல்லை. அதை உணராத நிலையிலே அப்போது இருந்து விட்டேன். இப்போது உணர்ந்திருக்கிறேன். மறுபடியும் ஒரு தடவை என் தலையில் கால் வை...'' என்றார்.

ஆகவே பரமாத்மாவின் திருவடி ஒரு தடவை படாத இடமே இல்லை. காடு, மேடு எல்லாவற்றையும் அளந்து விட்டான் அவன். அப்போது நாம் அதை உணராமல் இருந்து விட்டோம். இப்போது உணரும்படியான நிலையிலே இருப்பதாலே மறுபடியும் வை என்று கேட்க வேண்டும்.

இப்படி திரிவிக்ரமாவதாரம் பண்ணி சகலத்தையும் அளந்து எடுத்துக் கொண்டவனானதால் அந்த விஷ்ணுவை அவ்வாறு அடைமொழி சேர்த்தே சொல்கிறது வேதம்.

கற்பூர ஹாரதி பண்ணுகிற சமயத்தில் இந்தப் பொருள்பட மந்திரத்தைச் சொல்லி நாம் சேவிக்கிறோம்– விஷ்ணுவே திரிவிக்கிரமன் என்பதாக. அந்த எம்பெருமான், வைகுண்டத்திலே விராஜமானனாக இருக்கக் கூடியவன் விஷ்ணு என்பதை கர்ம காண்டத்திலேயும் இப்படி வேதமானது விசேஷமாகச் சிலாகிக்கிறது.

இன்னொரு இடத்திலே வேதமானது விஷ்ணுவினுடைய பிரபாவத்தை ஒரு கதையின் மூலமாகச் சொல்கிறது. இரண்டாவது அஷ்டகத்திலே வருகிற அழகான விஷயம் அது.

பிரும்மாவினுடைய சிருஷ்டியை வேதம் சொல்லிக் கொண்டே வருகிறது. ஒரு சமயம் பிரும்மா பசுக்களை சிருஷ்டி பண்ணினார். பசுக்களெல்லாம் புல்லை மேய்வதற்காக பிரும்ம லோகத்தை விட்டு வெளியே போயின... போன பசுக்கள் திரும்பி வரவேயில்லை! பல நாட்கள் ஆகியும் சுவஸ்தானத்தை வந்து அடையவேயில்லை.

பசுக்களை மீண்டும் அடைய வேண்டுமே! திரும்ப சம்பாதிக்க வேண்டுமே... என்ன பண்ணுவது?...

பார்த்தார் பிரும்மா... பல யக்ஞங்கள் பண்ணினார் அவர். ஒரு யக்ஞத்தின் மூலமே பசுக்களை ஆகர்ஷிக்க வேண்டும் என்று பார்த்தார். வரவழைக்க முயன்றும் அவை வரவில்லை. திரும்பவும் பல யக்ஞங்கள் பண்ணியும் பசுக்களை அவரால் மீட்க முடியவில்லை. தன்னால் ஆனமட்டும் பார்த்து விட்டார் அவர்! கடைசியில் சகாயத்தைத் தேடினார். தன்னால் முடியவில்லை என்பதால் அக்னியிடம் பிரார்த்தித்தார்.

'ஹே அக்னே! நீதான் அருள வேண்டும். பசுக்களை மீட்டுத்தர வேண்டும்...' என்று அக்னியினிடத்திலே பிரார்த்தனை பண்ணினார்.

அக்னி என்ன பண்ணினான்... உயர்ந்தான ஸ்தோத்ரம்-திருவட்ஸ்தோமம் என்று பெயர். அந்த ஸ்தோத்திரத்தாலே விசேஷமாக யக்ஞம் பண்ணினான். பண்ணி, பசுக்களை மீட்கப் பார்த்தான். அந்தப் பசுக்களை அடைய முடியவில்லை.

உடனே இந்திரனைப் பார்த்து பிரும்மா பிரார்த்தித்தார். 'எனக்குப் பசுக்களை மீட்டுக் கொடுக்க வேண்டும்' என்று கேட்டுக் கொண்டார்.

பஞ்சதசஸ்தோமம் என்று ஒரு ஸ்தோத்திரம். அந்த ஸ்தோத்திரத்தினால் ஒரு யக்ஞத்தைப் பண்ணினான் இந்திரன். அதைப் பண்ணியும் அந்தப் பசுக்கள் வரவில்லை.

உடனே, விச்வே தேவதைகள் என்ற தேவதைகளைக் கூப்பிட்டுப் பார்க்கலாம் என்று ஆரம்பித்தான். விச்வே தேவதைகளை சிரார்த்த தினத்தில் கூப்பிடுவார்கள். அந்த தேவதைகளைப் பிரார்த்தித்து நீங்களெல்லாம் பசுக்களை மீட்டுக் கொடுங்கள் என்று கேட்டான் இந்திரன்.

## அருள்வாக்கு

தியானம், ஜபம், பூஜை, யக்ஞம், க்ஷேத்திராடனம் ஆகியவற்றைப் போலவே நம் தேசத்தில் நீண்ட காலமாக பகவந்நாமாக்களைக் கோஷ்டியாகப் பாடி பஜனை செய்கிற பழக்கமும் இருந்து வந்திருக்கிறது. இந்த ஜீவாத்மாவானது பரமாத்மாவுடன் தொடர்பு கொள்வதற்கு ஒரு பெரிய உபாயமாக நாம பஜனை தொன்றுதொட்டு தேசத்தில் அனுஷ்டிக்கப்பட்டு வந்திருக்கிறது. அநேகமாகக் கிராமம், நகரம் எல்லாவற்றிலும் பஜனை மடம், அல்லது பஜனைக் கூடம் என்றே ஒன்று காணப்படுவதிலிருந்து பஜனை பத்ததி நம் நாட்டில் எவ்வளவு செழிப்பாக இருந்திருக்கிறது என்று ஊகிக்கலாம். இந்தப் பஜனை மடங்களில் சனிக்கிழமை தோறும், ஏகாதசி தோறும் ஜனங்கள் எல்லோரும் சேர்ந்து பஜனை செய்வார்கள்.

கோயில்களில் பூஜையைப் பார்க்கிறோம்; தெய்வத்தைத் தியானிக்கிறோம். பஜனையிலோ

அந்த விச்வே தேவதைகளை பதினேழு ஸ்தோமங்கள்-சப்ததச ஸ்தோமம் என்று பெயர்- உள்ள மந்திரம் ஜபித்து யக்ஞம் பண்ணிப் பார்த்தார்கள். அவர்களாலும் பசுக்களை மீட்க முடியவில்லை.

அதன்பின் பிரும்மா விஷ்ணுவிடம் போய், பகவான் நாராயணனிடம் போய்- 'இப்படிப் பல முயற்சிகள் பண்ணி விட்டேன்; முடியவில்லை. நீதான் உபகாரம் பண்ண வேண்டும்' என்று கேட்டுக் கொண்டான். "அந்தப் பசுக்களை எனக்கு மறுபடியும் கிடைக்கும்படியாகப் பண்ணு..." என்று வேண்டிக் கொண்டான்.

அப்போது விஷ்ணுவான பகவான் இருபத்தோரு ஸ்தோமங்களாலான ஸ்தோத்திரத்தினாலே விசேஷ மகா யக்ஞம் பண்ணினானாம்! 'வாராவந்தியம்' என்று பெயர். ஒரு ஸாமம்- இந்த ஸாம கீதத்தை பரமாத்மா கானம் பண்ணினான். பண்ணினவுடனேயே, எங்கெங்கோ இருக்கிற பசுக்களெல்லாம் ஓடி வருகின்றன. இதை வைத்துத்தான் கிருஷ்ணாவதாரமே!

வேணுகானம் பண்ணுகிறபோது, அந்தக் காலத்திலே பகவான், பிரஜாபதி சொன்னபோது யக்ஞம் பண்ணி, வாரவந்திய சாமத்தினால் யக்ஞம் பண்ணி, பசுக்களை அழைத்தான். அதே போன்று கிருஷ்ணாவதாரத்திலே வேணுகானம் பண்ணினான். பசுக்களெல்லாம் ஓடி வந்தன. அவனுக்கெதிரில் மயங்கி நின்றன.

சிறு விரல்கள் தடவிப் பரிமாற
செங்கண் கோட செய்யவாய்
கொப்பளிப்ப
குறுவெயர்ப் புருவம் கூடலிப்ப
கோவிந்தன்
குழல்கொடு ஊதினபோது...

- இப்படி பகவான் விசேஷமாக வேணுகானம் பண்ணியதைப் பெரியாழ்வார் கொண்டாடுகிறார். சின்ன சின்ன விரல்களெல்லாம் தடவிப் பரிமாறுகின்றன. பிருந்தாவன க்ஷேத்ரத்திலே... பசுக்களெல்லாம் காதைக்கூட ஆட்ட மறந்து அப்படியே கேட்கின்றன.

அதே மாதிரி இங்கே வாராவந்திய சாமத்தை பகவானே தன் வாக்கினால் சொன்னபோது எல்லா பசுக்களும் ஓடி வந்து விட்டன. பிரும்மாவிடம் அவற்றை ஒப்படைத்தார் பகவான். இந்த யக்ஞத்துக்கு என்ன பெயர் என்றால் அப்தோர்யாமம் என்று பெயர்.

பல யக்ஞங்களை வேதம் சொல்கிறது. இந்த யக்ஞத்தை- 'அப்தோர்யாமம்' பண்ணினால் பசுக்களை மீட்பது மட்டுமல்ல... என்னென்ன நினைக்கிறோமோ அது மொத்தமும் நிறைவேறும். இந்த மந்த்ரார்த்தத்தைக் கேட்டாலே எல்லா பலன்களும் கிடைக்கும். மந்த்ரத்துக்கு உள்ளீடான எம்பெருமான் விஷ்ணு எல்லாவற்றையும் மீட்டுக் கொடுத்து, சமஸ்தத்தையும் கொடுப்பான் என்று இந்த மந்திரம் சொல்கிறது.

கல்யாண, உபநயன காலத்திலே இந்த மந்திரத்தைச் சொல்வார்கள், கவனிக்கலாம். பார்த்தோமானால் கல்யாணத்துக்கும் இதற்கும் சம்பந்தமே கிடையாது. ஆனாலும் இந்த மந்திரத்தைச் சொல்கிறார்கள் எதற்கு...? அந்த யக்ஞத்தின் பலன் அவர்களுக்குக் கிடைக்கட்டுமே என்றுதான்! பகவான் விஷ்ணு அதிலே எழுந்தருளியிருப்பதனாலே பசு ஸம்ருதி, அன்ன ஸம்ருதி சர்வ ஸம்ருதியும் ஏற்பட்டு ரக்ஷிக்க வேண்டும் என்பதற்காகத்தான் கல்யாண காலத்திலே இது சொல்லப்படுகிறது.

(தொடரும்)

---

நாமே வாய் விட்டுத் தெய்வத்தின் நாமங்களையும், குணங்களையும், லீலைகளையும் பாடி ஈசுவரபரமாக மனதை ஈடு படுத்துகிறோம். பலர் சேர்ந்து கொண்டு சமுதாய வாழ்க்கை அடிப்படையில் பக்தி செய்கிற சிறப்பு பஜனைக்கு உண்டு. அவரவரும் ஆத்ம க்ஷேமத்தை அடைந்து, அதனாலேயே ஜீவகோடிகளுக்கு க்ஷேமத்தைத் தரவேண்டும் என்று, தனி மனிதர் அடிப்படையிலேயே (individual basis) ஹிந்து மதம் முக்கியமாக அமைந்திருந்தாலும் கோயில், உத்ஸவம், பஜனை இவற்றில் கூட்டு வழிபாட்டு முறை (congregational worship) யும் இருக்கிறது.



**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**













**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager; Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax : 2345621**
**Annual Subscription : India Rs. 250/-; Overseas Rs. 1900/- (Air Mail)**
**Half Yearly Subscription : India Rs. 125/-; Overseas Rs. 950/- (Air Mail)**

